# காதலும் கல்யாணமும்

விந்தன்



**கலைஞன் பதிப்பகம்**
19, கண்ணதாசன் சாலை,
தியாகராய நகர்,
சென்னை - 600 017

# பிற நூல்கள்

1. மிஸ்டர் விக்கிரமாதித்தன் கதைகள்
2. விந்தன் குட்டிக் கதைகள்
3. கண் திறக்குமா?
4. பாலும் பாவையும்
5. மனிதன் மாறவில்லை
6. சுயம்வரம்

# காதலும் கல்யாணமும்

## 1. கனவுக் கன்னி

அன்று சனிக்கிழமை. சனிக்கிழமை என்றால் சாதாரண சனிக்கிழமை அல்ல; அந்த மாதத்தில் இரண்டாவது சனிக்கிழமை அது!

இரண்டாவது சனிக்கிழமையில் அப்படி என்ன விசேஷம் என்கிறீர்களா?-ஒரு விசேஷமும் இல்லை, அரசாங்க அலுவலகங்களில் வேலை பார்ப்பவர்களுக்கு அன்று விடுமுறை என்பதைத் தவிர!

சனிக்கிழமையில் விசேஷம் ஒன்றும் இல்லா விட்டாலும், சனிக்கிழமை விடுமுறையில் மட்டும் ஒரு விசேஷம் இருக்கத்தான் இருந்தது-அதுதான் ஞாயிறு விடுமுறையும் அத்துடன் சேர்ந்து வருவது!

இந்த விசேஷம் மாதத்துக்கு ஒரு முறைதான் என்றாலும், இரண்டு நாள் விடுமுறையைச் சேர்ந்தாற்போல் அனுபவிக்கும் மகிழ்ச்சி பள்ளிக்கூடப் பிள்ளைகளுக்கு அடுத்தாற்போல் அரசாங்க அலுவலர்களுக்குத்தானே கிட்டுகிறது?

அத்தகைய மகிழ்ச்சியை அனுபவிக்கும் பாக்கியம் பெற்ற அரசாங்க அலுவலர்களில் ஒருவனான மோகன், அந்த மாதத்திய இரண்டு நாள் விடுமுறையை எப்படிக் கழிப்பது

என்பதைப் பற்றி அதற்கு முந்திய நாளே ஒரு முடிவுக்கு வந்திருந்தான். அதன்படி, காலை எழுந்தவுடன் காபி; காபிக்குப் பிறகு, 'போகிற வழிக்குப் புண்ணியம் தேடித்தரும் ரேடியோ ஒலிபரப்பாளர்'களுக்கு 'வந்தனம்' தெரிவித்து விட்டுப் பத்திரிகைகளில் கவனம் செலுத்துவது; அதற்குப் பிறகு வழக்கம்போல் ஒன்பது மணிக்குச் சாப்பாடு; சாப்பாட்டுக்குப் பிறகு ஒரு 'சின்னத் தூக்கம்'-வழக்கத்துக்கு விரோதமாகத்தான்!

ஒரு மணிக்கு 'அலாரம்' தன்னை எழுப்பாவிட்டாலும் 'அம்மா' எழுப்பிவிடுவாள், 'டிபன்' சாப்பிட! அவள் 'டிப'னுக்கும் அன்று மட்டும் 'வந்தன'த்தைத் தெரிவித்துவிட்டு ஏதாவது ஒரு 'நல்ல ஓட்டலு'க்குப் போய்விட வேண்டியது, 'நல்ல டிபன், சாப்பிட!-அது முடிந்ததும் பகல் காட்சி, ஆங்கிலப் படம்; மாலைக் காட்சி, இந்திப்படம்; இரவுக் காட்சி, தமிழ்ப் படம்-அதாவது, 'தூக்கம் வந்தாலும் பரவாயில்லை' என்ற 'தனிச்சலுகை' தமிழ்ப் படத்துக்கு மட்டும்!

'சனிக்கிழமை'க்கு மட்டும் தயாரித்து வைத்திருந்த இந்தத் 'திட்ட'த்தை எந்தவிதமான இடையூறும் இல்லாமல் நிறைவேற்றிவிட்டு இரவு ஒரு மணிக்கு அவன் வீடு திரும்பியபோது, பாழாய் போன 'ஸ்கூட்டர்' போட்ட சத்தம் அவனைக் காட்டிக் கொடுத்துவிட்டது, அவன் அப்பா ஆபத்சகாயத்தினிடம். "ஏண்டா, மோகன்! இந்த நேரத்தில் நீ எங்கே போய்விட்டு வருகிறாய்?" என்றார் அவர், மாடியில் இருந்த தம்முடைய அறையின் ஜன்னல் வழியாக அவனை எட்டிப் பார்த்து.

அப்பா சாதாரண அப்பாவாயிருந்தால், 'சரிதான், போங்காணும்!' என்று 'தற்காலப் புத்திர சிகாமணி'களைப் பின்பற்றி அவனும் சொல்லிவிட்டிருப்பான். ஆனால் முன்னாள் போலீஸ் அதிகாரியான அவரோ எப்படி வருகிறது, எங்கிருந்து வருகிறது என்று வீட்டில்

உள்ளவர்களுக்குக் கூடத் தெரியாமல் அப்போதும் ஆயிரம் இரண்டாயிரம் என்று சம்பாதித்துக் கொண்டே இருந்தார். ஆகவே தனக்கு வந்த ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு, ''நான் வரவில்லை அப்பா, ரோட்டில் யாரோ வந்து கொண்டிருக்கிறார்கள்!'' என்றான் அவன். அந்த மனிதர் அத்துடன் அவனை விட்டிருக்கக்கூடாதா?-அதுதான் இல்லை; ''வருவதாவது, வண்டி நிற்கிறதேடா!'' என்றார் அவர், அப்பொழுதும் அவனை விடாமல். ''வண்டி நம்முடைய வீட்டில் நிற்கவில்லை; பக்கத்து வீட்டில் நிற்கிறது!''என்று அவனும் விடாமல் சொல்லிவிட்டு உள்ளே சென்றான். அவனுடைய போதாத வேளையின் காரணமாக, அந்த நேரத்தில் பரிட்சைக்காகப் படித்துக் கொண்டிருந்தாள், அவன் தங்கை அருணா. அவள் அவனைக் கண்டதும், ''வண்டி பக்கத்து வீட்டில் நிற்கவில்லை அப்பா...!'' என்று ஆரம்பித்தாளோ இல்லையோ, 'சட்'டென்று தன் சட்டைப் பையிலிருந்த 'சாக்லெட்'டில் ஒன்றை எடுத்து அவள் வாயில் போட்டு மூடினான் அவன். அதற்குள், ''எங்கே நிற்கிறது?'' என்று கேட்டார் அவர், ''எதிர் வீட்டில்!'' என்றாள் அவள்!

அரசாங்க அலுவலகங்களில் மட்டுமின்றி, வீட்டிலும் வேலை செய்யும் 'லஞ்ச'த்தின் 'மகிமை'யைப் பற்றி எண்ணிக் கொண்டே மோகன் சட்டையைக் கழற்றி மாட்டிவிட்டுப் படுக்கப் போனான், தன் அறைக்கு.

அப்போது படிக்கும் பெண்ணுக்கு துணையாக அங்கே படுத்துக் கொண்டிருந்த அவன் தாயார், ''ஏண்டா, சாப்பிடவில்லையா?'' என்று சைகையின் மூலம் கேட்டாள், அவன் காலைச் சீண்டி.

அவளை நன்றியுணர்ச்சியுடன் ஒரு பார்வை பார்த்து விட்டு 'வேண்டாம் அம்மா, நான் சாப்பிட்டு விட்டேன்!' என்று தானும் பதிலுக்குச் சைகை காட்டிவிட்டுப் படுக்கையை எடுத்து விரித்தான் அவன்.

மறுநாள் 'ஞாயிற்றுக்கிழமை திட்ட'த்தின்படி அவன் தூங்கிக் கொண்டிருந்தபோது-அதாவது காபி, பத்திரிகை, சாப்பாடு ஆகியவற்றையெல்லாம் அன்றைய 'தூக்க'த்துக் காகத் 'தியாகம்' செய்துவிட்டு அவன் தூங்கிக் கொண்டிருந்த போது, ஓர் இனிய கனவு-அந்தக் கனவிலே அவனுடைய 'லட்சிய மனைவி' தோன்றி, அவனை மெல்லத் தொட்டு விட்டுச் சிரித்தாள்; அந்த 'வெள்ளிமணிச் சிரிப்'பிலே கொள்ளை இன்பம் கண்ட அவன் துள்ளி எழுந்து உட்கார்ந்தான். தலையில் குதிரைவால் கொண்டை; அந்தக் கொண்டையைச் சுற்றிப் 'பிளாஸ்டிக்' பூ வளையம்; நெற்றியில் 'ஆட்டோமாடிக் சிக்ன'லை நினைவூட்டும் மூவர்ணப் பொட்டு; கண்ணில் 'நானோக்குங் காலை நிலம் நோக்காம'லிருப்பதற்காகக் கறுப்புக் கண்ணாடி; காதில், ரயிலில் நிற்கும் பிரயாணிகளின் கைப்பிடிகளைப் போன்ற இரண்டு வளையங்கள்; உதட்டில் 'அபாய அறிவிப்பு நிற'த்தை ஒத்த 'லிப்-ஸ்டிக்;' கழுத்தில் 'எது எடுத்தாலும் ஆறணா' முத்து வடம்; அழகை அவலட்சணமாக எடுத்துக் காட்டும் 'நைலான்' சேலை-'ஆகா, லட்சிய மனைவி என்றால் இவள் அல்லவா என் லட்சிய மனைவி!' என்ற வியப்புடன் அவன் அவளுடைய கைகளைப் பற்றியபோது, ''தயவு செய்து என்னைத் தொடாதீர்கள்!'' என்றாள் அவள் கொஞ்சம் விலகி நின்று.

''ஏன் அன்பே, ஏன்?'' என்றான் அவன், பதட்டத்துடன்.

''பவுடர் கலைந்து போகும்!''

''பவுடரா, கையிலா!''

''இதில் என்ன ஆச்சரியம், என் உடம்பில் பவுடர் இல்லாத இடமே கிடையாதே!''

''ஓ, ஐ, ஸீ!''

''உங்களுக்குத் தெரியாதா, சினிமா நடிகைகள் எல்லாம் அப்படித்தான் பூசிக் கொள்வார்களாம்; பட்டுப்போல் மேனி பளபளக்கும் 'அந்த ரகசிய'த்தை என் சிநேகிதி ஒருத்தி என்னிடம் சொன்னாள். அன்றிலிருந்து நானும்...''

''ரொம்பச் சரி, ரொம்பச் சரி! நான் மட்டும் என்னவாம்? என்னுடைய 'ஸிஸர் கிராப்' கூட சினிமா நடிகர்களைப் பார்த்து வைத்துக் கொண்டதுதானே?''

''ஆமாம், நீங்கள் ஏன் அரும்பு மீசைக்குப் பதிலாக அந்தப் 'பஞ்சாப்வாலா தாடி'யை வைத்துக் கொள்ள வில்லை?''

''நமைக்கும் போது சொரிந்து விட ஆள் இல்லாமல் தான்! இப்போதுதான் நீ வந்துவிட்டாயே, இனிமேல் வைத்துக் கொள்ள வேண்டியதுதான்!''

''ஐயோ வேண்டாம்! நான் சொரிய ஆரம்பித்தால் உங்களுக்கு அடிக்கடி நமைக்க ஆரம்பித்துவிடும்!'' என்று மறுபடியும் தன் 'வெள்ளி மணிச் சிரிப்'பைக் கலகலவென்று உதிர்த்தாள், அவள்!

அந்தச் சிரிப்பிலே சொக்காமல் சொக்கி, ''அதை ஏன் சொல்கிறாய், போ! ஒரு முறை நான் அந்தத் தாடியை வைத்துக் கொண்டு பட்ட பாடு-இரண்டு கைகள் போதவில்லை. அதைச் சொரிய!'' என்றான் அவன்.

''அதற்காக என்னுடைய கைகளையும் சேர்த்து நாலு கைகளாக வைத்துக் கொள்ளலாம் என்று நினைக்கிறீர்களா? அதுதான் முடியாது; அடிக்கடிக் கடித்துத் துப்ப இரண்டு கைகளில் உள்ள நகங்கள் போதாமல் ஏற்கெனவே நான் கஷ்டப்பட்டுக் கொண்டு இருக்கிறேனாக்கும்?'' என்றாள் அவள்.

''சரி வேண்டாம் அந்தத் தொல்லை பிடித்த தாடி! வெளியே போவோமா?'' என்றான், அவன்.

''நான் தயார்!'' என்றாள் அவள்.

''இதோ நானும் தயார்!'' என்று இரண்டே நிமிஷத்தில் அவனும் தயாராக, இருவரும் 'டக்டக், டக்டக்' என்று 'தாள லயம்' தவறாமல் நடந்து வெளியே வந்தனர்.

வாசலில் தயாராயிருந்த 'ஸ்கூட்ட'ரை வழக்கம் போல் அவன் வந்து எடுத்தானோ இல்லையோ, ''என்னைப்

பின்னால் ஏறிக் கொள்ளச் சொல்லப் போகிறீர்களா, என்ன?'' என்றாள் அவள், அவனை ஏறிட்டுப் பார்த்து.

''ஏன் பயமாயிருக்கிறதா?'' என்றான் அவனும் அவளை ஏறிட்டுப் பார்த்து.

''பயமாவது! நீங்கள் பின்னால் ஏறிக்கொள்ளுங்கள்; நான் முன்னால் உட்கார்ந்து ஓட்டுகிறேன்!'' என்றாள் அவள்!

அவ்வளவுதான்! அவன் குதிகுதியென்று குதித்தபடி, ''என் ஆசையும் அதுதான்! வா அன்பே, வா!'' என்று மறுபடியும் அவள் கையைப் பிடிக்கப் போய், மறுபடியும் அவள் எச்சரிப்பதற்கு முன்னால் 'மறந்து விட்டேன்' என்று கொஞ்சம் பின் வாங்கி, ஸ்கூட்டரை அவளிடம் ஒப்படைத்துவிட்டு அவளுக்குப் பின்னால் ஏறிப் போனான்!

இப்படிப்பட்ட சமயத்தில், ''ஏண்டாப்பா, மோகன்! மணி பன்னிரண்டுக்கு மேல் ஆகிவிட்டதேடா, எழுந்து சாப்பிடேன்!'' என்று அவனை அவன் அம்மா வந்து எழுப்பினால் எப்படியிருக்கும், அவனுக்கு?-''போம்மா! நல்ல சமயம் பார்த்தாய், என்னை எழுப்ப!'' என்றான் எரிச்சலுடன்.

''ஏண்டா, அப்படி எரிந்து விழுகிறாய்? காலையில் காபி கூடச் சாப்பிடாமல் தூங்குகிறாயே என்றுதானே எழுப்பினேன்?'' என்றாள் அவள், ஒன்றும் புரியாமல்.

''எனக்குக் காபியும் வேண்டாம், சாப்பாடும் வேண்டாம்; தூங்க விடு, போதும்!'' என்று மறுபடியும் கவிழ்ந்து படுத்துக் கொண்டு தூங்க முயன்றான் அவன். ஒருவேளை அந்தக் கனவு மீண்டும் தொடர்ந்தாலும் தொடரலாம் என்ற நம்பிக்கையில்!

ஆனால் அவன் எதிர்பார்த்தபடி தூக்கமும் தொடர வில்லை; கனவும் தொடரவில்லை-அவற்றுக்குப் பதிலாக அம்மாவைத் தொடர்ந்து அவனுடைய நண்பன் மணி வந்து, வழக்கம்போல் அவனுடைய முதுகில் ஒரு குத்துக் குத்தினான். அந்தக் குத்திலிருந்தே வந்திருப்பவன் மணி

என்பதைக் தெரிந்துகொண்ட மோகன், ''என்ன துரதிர்ஷ்டம், போடா!'' என்று சொல்லிக் கொண்டே எழுந்து உட்கார்ந்தான், அடுத்த குத்துக்குத் தன் முதுகை அவனிடம் காட்ட விரும்பாமல்!

''சரி, துரதிர்ஷ்டத்துக்குப் பின்னால் ஏதோ ஒரு கதை இருக்கிறது' என்பதை ஊகித்துக் கொண்ட மணி, ''கதையைச் சொல்லு?'' என்றான், பேச்சை வளர்த்த விரும்பாமல்.

''ஓர் இனிய கனவு!'' என்று ஆரம்பித்தான். மோகன்.

''பகலிலா?'' என்று கேட்டான், மணி.

''ஆமாம்.''

''பலிக்காது!''

''என்னடா, எடுக்கும்போதே இப்படிச் சொல்கிறாயே?''

''இனிய கனவு என்றால் அதை இரவில் கண்டிருக்க வேண்டும்; பகலில் கண்டிருக்கிறாயே, நீ?''

''போடா, போ! கனவைக் கூட விரும்பும்போது காண முடியுமா, என்ன?''

''சரி, சொல்லு?''

''என் லட்சிய மனைவி'யைப் பற்றித்தான் ஏற்கெனவே நான் உன்னிடம் சொல்லியிருக்கிறேனே, அவள் இன்று என்னுடைய கனவிலே வந்தாள்!''

''வந்து...''

''தன் வெள்ளிமணிச் சிரிப்பாலே என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டாள்!''

''கொண்டு...''

'ஸ்கூட்டருக்குப் பின்னால் நீங்கள் உட்காருங்கள்; நான் முன்னால் உட்கார்ந்து ஓட்டுகிறேன் என்றாள்!''

''அடி சக்கை! எப்படி உட்கார்ந்தால் என்ன, 'ஹீட்டர்' ஹீட்டர்தானே என்று அவள் நினைத்துவிட்டாள் போலிருக்கிறது!''

''அந்த ஹீட்டரின் 'ஹீட்'டை எங்கே அனுபவிக்க விட்டாள் என் அம்மா, அதற்குள் வந்து எழுப்பிவிட்டாளே?'' என்றான் மோகன், அழாக் குறையாக.

இந்தச் சமயத்தில் அங்கே வந்த அவன் தாயார், ''உனக்கு ஏண்டா, ஹீட்டர்? ஏதாவது ஆறிவிட்டால்தான் சுட வைத்துக் கொடுக்க நான் இருக்கிறேனே!'' என்றாள் கரிசனையுடன்.

ஆம், 'அந்த ஹீட்ட'ரைத் தேடும் வயதை அவன் கடந்து விட்டான் என்பதைக் கூட அந்தத் தாயுள்ளம் அதுவரை அறியவில்லை!

# 2. காதல் மன்னன்!

இரண்டு நாள் விடுமுறைக்குப் பிறகு, ''ஏன்தான் வருகிறதோ, இந்தத் திங்கட்கிழமை'' என்று அலுத்துக் கொண்டே எழுந்து உட்கார்ந்தான் மோகன். காபியும் கையுமாக வழக்கம்போல் அவனுக்கு எதிர்த்தாற்போல் வந்து நின்றாள், அவன் அம்மா.

'இதே காபியை, இதே காலை நேரத்தில், குளித்து நனைந்த கூந்தல் கழுத்திலே விழுந்து புரள, அந்தக் கூந்தலுக்கு நடுவே கிள்ளி வைத்த ஒற்றை ரோஜா, முதல் நாள் இரவுக்குப் பிறகு வெளிறிப்போன தன் இதழ்களை நினைவூட்ட, அந்தக் 'கனவுக் கன்னி' கொண்டு வந்திருந்தால் எப்படி இருக்கும்?'

இப்படி ஓடிற்று அவன் கற்பனை; ஆனால்...

'இவ்வளவு சூடான காபியை அந்தத் தளிர்க்கரம் ஏந்தலாமா? ஏந்தினால் அந்தக் கரம் தளிர்க்கரமாகத்தான் இருக்குமா?-கூடாது; அவள் கரம் சூடான எதையுமே ஏந்தக் கூடாது!

அம்மா இருக்கும் வரை அம்மா ஏந்தட்டும்; அவளுக்குப் பிறகு ஒரு சமையற்காரனைப் போட்டுவிட்டால் போகிறது...

முதல் காபி அவனுடையதாயிருந்தாலும் அடுத்த காபியாவது தன்னுடையதாயிருக்காதா?

இருக்கும்; என்ன இருந்தாலும் அவள் கரம் ஏந்தும் காபிக்கு ஈடாக இருக்குமா அவன் கரம் ஏந்தும் காபி?...'

அவனுடைய கற்பனைக் குதிரை நிற்கவில்லை; அதற்குள், ''என்னடா, நான் பாட்டுக்கு நிற்கிறேன்; நீ பாட்டுக்கு ஏதோ யோசித்துக் கொண்டு இருக்கிறாயே?'' என்றாள் அவன் அம்மா, பொறுமையிழந்து. ''ஒன்றுமில்லை அம்மா, ஒன்றுமில்லை!'' என்று அவள் கையிலிருந்த காபியை வேண்டா வெறுப்பாக வாங்கிக் குடித்துவிட்டு 'சேவிங் செட்'டும் கையுமாகக் கண்ணாடிக்கு முன்னால் போய் நின்றான், அவன்.

அங்கேயும் அவனுடைய பிரதிபிம்பத்துக்குப் பதிலாக அவளுடைய பிரதிபிம்பமா தெரிய வேண்டும்?

ஒரு வேளை...

இல்லாதது எதுவும், இல்லாதவர்கள் யாரும் கனவில் வருவதில்லை என்கிறார்களே, அது உண்மையா யிருக்குமோ? அப்படி ஒருத்தி இருந்து, இப்போது அவள் எனக்குப் பின்னால் வந்து நிற்கிறாளோ?

திரும்பிப் பார்த்தான்; யாரையும் காணோம்! 'எல்லாரும் தூங்கிக் கொண்டே கனவு கண்டால் நான் விழித்துக் கொண்டே கனவு காண்கிறேனா, என்ன -மோசம்? ரொம்ப மோசம்!'

இப்படித் தன்னைத் தானே கடிந்துகொண்ட வண்ணம் அவன் முகத்தை வழித்துக்கொண்டு திரும்பிய போது, ''ஏன் அண்ணா! இந்தச் சனியும் ஞாயிறும் வாரத்துக்கு ஒரு முறைதான் வருமா?'' என்று கேட்டுக் கொண்டே வந்தாள் அருணா.

''உனக்காவது வாரத்துக்கு ஒரு முறை வருகிறது; எனக்கு மாதத்துக்கு ஒரு முறைதானே வருகிறது?'' என்றான் மோகன், வருத்தத்துடன்.

எதிர்பாராத நிகழ்ச்சிகள் கதைகளில் நிகழும் என்பதில்லை; வாழ்க்கையிலும் சில சமயம் நிகழ்வதுண்டு. அன்றுவரை அதை நம்பாத மோகன், அன்று நம்ப வேண்டியதாயிற்று. ஆம், அவன் வேலை செய்யும் அலுவலகத்திலே அவனுக்கு முன்னால் வந்து காத்திருந்தாள், அவன் கனவுக் கன்னி!

அதே சாயல்; அதே அலங்காரம்-ஆனால் குதிரை வால் கொண்டைக்குப் பதில் பின்னல்; போலிப் பூக்களுக்குப் பதில் உண்மைப் பூ; அதே உடை; அதே நடை-ஆனால் கறுப்புக் கண்ணாடி கண்களில் இல்லை; கையிலே இருந்தது!

அதனால் என்ன, அந்தக் கண்ணாடிக்குப் பின்னாலிருந்த அவள் விழிகள் உண்மையிலேயே கயல்விழிகள்தான் என்பது சந்தேகத்துக்கு இடமில்லாமல் இப்போது தெரிந்து விட்டதே?

ஆச்சரியம் ஒரு பக்கம், ஆனந்தம் இன்னொரு பக்கம்-இந்த இரண்டு உணர்ச்சிகளாலும் உந்தித் தள்ளப்பட்ட அவன் தன்னை மறந்து அவளை நெருங்கினான்; நெருங்கியதோடு நில்லாமல், ''நீங்கள்...'' என்று ஏதோ கேட்க ஆரம்பித்தவன், அதற்குமேல் கேட்க முடியாமல் திணறினான்.

''என்ன வேண்டும், உங்களுக்கு?'' என்றாள் அவள் அவன் திணறினாலும் தான் திணறாமல் நின்று!

''ஒன்றும் வேண்டாம்; உண்மையாகவே நீங்கள் பெண்ணா? இல்லை...''

அவ்வளவுதான்: ''எப்படித் தோன்றுகிறது, உங்களுக்கு? பெண்ணாகத் தோன்றுகிறதா? இல்லை, பேயாகத் தோன்றுகிறதா?'' என்று இரைந்தாள், அவள்!

''கோபித்துக் கொள்ளாதீர்கள்! நேற்றிரவு உங்களைப் போலவே ஒருத்தி...''

''என்ன, மேலும் மேலும் உளறிக் கொண்டே இருக்கிறீர்கள்? 'உங்களைப் போலவே' என்பதற்கும், 'ஒருத்தி' என்பதற்கும் உள்ள வித்தியாசம் கூடவா தெரியவில்லை, உங்களுக்கு?''

''மன்னிக்க வேண்டும். உங்களுக்கு மட்டும் மரியாதை கொடுத்தால் போதும் என்று நினைத்தேன் நான்; நீங்களோ உங்களைப் போலவே உள்ள இன்னொருத்திக்கும் மரியாதை கொடுக்க வேண்டும் என்கிறீர்கள்...!''

அவன் முடிக்கவில்லை; அதற்குள், ''வெறுமனே மன்னிக்க வேண்டும் என்று சொன்னால் போதுமாடா, கன்னத்திலும் போட்டுக் கொள்!'' என்று அவனுக்குப் பின்னாலிருந்து ஒரு குரல் கேட்டது. மோகன் திரும்பிப் பார்த்தான்; மணி வந்துக் கொண்டிருந்தான்.

'இந்தச் சமயத்தில்தானா இவன் வந்துத் தொலைய வேண்டும்?' என்று நினைத்த மோகன், அதை வெளியே காட்டிக் கொள்ளாமல், ''ஏண்டா, மணி! இவரைத் தெரியுமா, உனக்கு?'' என்று சம்பந்தமில்லாமல் கேட்டு வைத்து, அப்போதைய நிலைமையை எப்படியாவது சமாளிக்கப் பார்த்தான்!

அவனா அதற்கெல்லாம் விட்டுக் கொடுப்பவன்?- ''எனக்கு அவரைத் தெரியவும் தெரியாது; தெரிந்து கொள்ள வேண்டிய அவசியமும் கிடையாது!'' என்று வெட்டு ஒன்று துண்டு இரண்டுமாகச் சொல்லிவிட்டு உள்ளே போய்விட்டான்!

'அவள் மூக்கை உடைத்தாள், இவன் இடுப்பை ஒடிக்கிறானே, பாவி!' என்று உள்ளூறத் திட்டிக் கொண்டே அவன் மறுபடியும் அந்தக் கனவுக் கன்னியை நோக்கித் திரும்பிய போது, அவள் இருந்த இடத்தில் அவளைக் காணோம்!-அதற்குள் எங்கே போயிருப்பாள்?- முகத்தில்

கேள்விக் குறியுடன் அவன் தன் அலுவலகத்தை மூன்று முறை சுற்றிவந்த போது, 'பியூன் பிச்சையா'வுக்கு என்ன தோன்றிற்றோ என்னமோ, "ஏதாவது ஒரு கோயிலைச் சுற்றினாலும் போகிற வழிக்குப் புண்ணியமுண்டு; ஆபீசை ஏன் சார், அனாவசியமாகச் சுற்றுகிறீர்கள்?" என்றான்.

அதுதான் சமயமென்று நினைத்த மோகன், "அதிருக்கட்டும்; கையில் கறுப்புக் கண்ணாடியுடன் இங்கே ஒருத்தி நின்றுகொண்டு இருந்தாளே, அவளை நீ பார்த்தாயா?" என்று அவனையே விசாரித்தான், அதன் விளைவைப் பின்னால் பார்த்துக்கொள்ளலாம் என்று!

"பாமா அம்மாவைச் சொல்கிறீர்களா? பரந்தாமன் ஐயா அறையிலே இருக்கிறார்கள்!" என்றான் அவன், தனக்கு எதிர்த்தாற் போலிருந்த ஓர் அதிகாரியின் அறையைச் சுட்டிக் காட்டி.

"அவர்கள் ஏன் இங்கே வந்திருக்கிறார்கள் என்று தெரியுமா, உனக்கு?"

"தெரியுமே, இனிமேல் அவர்கள் இங்கேதான் வேலை பார்க்கப் போகிறார்கள்!"

"உண்மையாகவா?"

"ஆமாம் சார், ஆமாம்."

அவ்வளவுதான்; 'ஐயோடா!' என்று கத்திக் கொண்டே அரை டிக்கெட்டு'களைப் போல அவனைச் சுற்றிச் சுற்றி வந்து 'கும்மாளம்' அடிக்க வேண்டும் போல் தோன்றிற்று அவனுக்கு இருந்தாலும் அதை ஒருவாறு அடக்கிக் கொண்டு, தன் இடத்துக்குப் போய் உட்கார்ந்தான்.

சிறிது நேரத்துக்கெல்லாம் மல்லிகைப் பூ மணம் 'கட்டியம்' கூற, அந்தக் 'கட்டியத்'தைத் தொடர்ந்து, "இங்கே வரும் பெண்களைப் பார்த்தால் வேலைக்கு வருபவர்களைப் போலவா தோன்றுகிறது, கல்யாணத்துக்கு வருபவர்களைப் போல் அல்லவா தோன்றுகிறது" என்று யாரோ ஒரு 'கிழட்டுப் பயல்' உரிய வயதைக் கடந்துவிட்ட

உளைச்சலால் முணுமுணுக்க, அவள் வந்தாள்!-நிமிர்ந்த நன்னடை, நேர்க் கொண்ட பார்வையோடு வந்த அவளை, 'கிடக்கிறான் அவன்! உன்னுடைய மல்லிகைப் பூ மணம் அவனுக்குப் பிடிக்காவிட்டால் என்ன? எனக்குப் பிடிக்கிறது, நீ வா!' என்று வரவேற்க வேண்டும் போல் தோன்றிற்று மோகனுக்கு. ஆனால் வரவேற்கவில்லை -எப்படி முடியும், ஏற்கெனவே கண்ட சூடே இன்னும் ஆறாமலிருக்கும்போது?

இந்த நிலையில் ஆசை முன்னால் தள்ள, அச்சம் பின்னால் இழுக்க, அவன் தவியாய்த் தவித்துக் கொண்டு இருந்தபோது, உதவி அதிகாரி வந்தார்; அவன் கொஞ்சமும் எதிர்பாராத விதமாக அவனுக்கு எதிர்த்தாற்போல் அவளை உட்கார வைத்துவிட்டுச் சென்றார்!

'பழம் நழுவிப் பாலில் விழுந்துவிட்டது; இனி வாயில் விழ வேண்டியதுதான் பாக்கி!' என்று நினைத்த அவன், கொஞ்சம் துணிந்து தன் பார்வையை அவள்மேல் செலுத்திப் பார்த்தான்; ஆனால் அவளோ, தன்னுடைய பார்வையை அவன் மேல் செலுத்தவேயில்லை!

என்ன ஏமாற்றம், என்ன ஏமாற்றம்!-எப்படியும் அவளுடைய கவனத்தைக் கவர்ந்தே விடுவது என்ற உறுதி பூண்டு அவன் கனைத்துப் பார்த்தான்; இருமிப் பார்த்தான்; தும்மிப் பார்த்தான் -ஊஹூம்!

அதற்குமேல் பொறுக்க முடியவில்லை, அவனால். -"காது மந்தமாயிருக்குமோ?" என்றான், அவள் காதில் விழும்படி. "புத்தி மந்தமாயிருக்குமோ!" என்றாள் அவள், அவன் காதில் விழும்படி!

இப்படி முதல் நாள் போயிற்று; இரண்டாம் நாள்...

அவள் கவனத்தைக் கவர்வது எப்படி என்று அவன் யோசித்துக் கொண்டு இருந்தபோது, அவளுக்குப் பின்னாலிருந்த ஒரு ஜன்னல் அவனுடைய பார்வையில் பட்டது. உடனே ஒரு காகிதத்தை எடுத்துப் பந்து போல்

சுருட்டி, அதை ஜன்னல் வழியாக விட்டெறிவது போல் அவள் மேல் விட்டெறிந்து விட்டு, ''மன்னிக்க வேண்டும்; குறி தவறி விட்டது!'' என்றான் அவன், அசட்டுச் சிரிப்புடன்.

''இல்லை, குறி தவறாமல்தான் விழுந்திருக்கிறது!'' என்றாள் அவள், குனிந்த தலையுடன்!

இதை அவள் எந்தத் 'தொனி'யில் சொன்னாள் என்பதைப் புரிந்துகொள்ள அவன் முயன்றுகொண்டிருந்த போது, கன்னத்தில் விழுந்தது 'பளார்' என்று ஓர் அறை! -கலங்கினானா, காதல் மன்னன்? இல்லை; இன்னொரு கன்னத்தையும் காட்டினான், ஏசுநாதரைப் பின்பற்றி!-ஆனால் அவளோ அவனை ஏசுநாதராக்கவில்லை; அதற்குப் பதிலாக, ''சீ, நீயும் ஒரு மனிதனா!'' என்று 'புகழ் மாரி' பொழிந்துவிட்டுப் போய் விட்டாள்!

இப்படி இரண்டாவது நாள் போயிற்று; மூன்றாவது நாள்...

''உங்களுக்கு ஏதாவது தெரியவில்லையென்றால் என்னைக் கேளுங்கள்; சொல்கிறேன்!'' என்றான் அவன், 'முயற்சியுடையார் இகழ்ச்சியடையார்' என்ற மூதுரையில் அசைக்க முடியாத நம்பிக்கை வைத்து.

இரங்கினாளா, காதல்கன்னி? இல்லை; ''எனக்கு ஏதாவது தெரியவில்லையென்றால், அது உங்களுக்கும் தெரியாமல்தான் இருக்கும்!'' என்றாள் சுடச்சுட.

அவ்வளவுதான்; அசைக்க முடியாத நம்பிக்கை சற்றே அசைய, ''ஏது, ரொம்ப அதிகப்பிரசங்கியா யிருப்பாய் போலிருக்கிறதே?'' என்றான் அவனும் சுடச்சுட.

''யார் அதிகப்பிரசங்கி? என்னைவிட உங்களுக்கு அதிகமாகத் தெரியும் என்று நினைத்துக் கொண்டிருக்கும் நீங்கள் அதிகப்பிரசங்கியா, நான் அதிகப்பிரசங்கியா?'' என்றாள் அவள், தான் அமர்ந்திருந்த நாற்காலியை அப்பால் இழுத்து விட்டுவிட்டு எழுந்து.

'இதென்னடா வம்பாய்ப் போச்சு! இவள் எழுந்து நிற்கும் வேகத்தைப் பார்த்தால் அந்த நாற்காலியையே தூக்கித் தன் தலையிலே போட்டாலும் போட்டுவிடுவாள் போலிருக்கிறதே?' என்று பயந்த மோகன், தானும் அவளைத் தொடர்ந்து எழுந்து, மெல்ல அங்கிருந்து நழுவப் பார்த்தான்.

அப்போது, "போடுகிற சண்டையையெல்லாம் இப்போதே போட்டுவிடுங்கள்; கல்யாணத்துக்குப் பிறகு சண்டை வேண்டாம்!" என்று யாரோ சொல்வது அவர்கள் காதில் விழுந்தது. இருவரும் திரும்பிப் பார்த்தனர்; பியூன் பிச்சையா சிரித்துக் கொண்டிருந்தான்!

# 3. கை கொடுத்த தெய்வம்

"காதலில் வெற்றியடைய வேண்டுமானால், எடுத்தவுடன் இணங்கிவிடும் பெண்களைக் காதலிக்காதே; எதிர்த்து நிற்கும் பெண்களைக் காதலி!" என்பது, மோகன் தன் சகதோழர்களிடமிருந்து கற்றுக்கொண்ட ஒரு பொன்மொழி!

பொன்னின் மாற்று இருபத்திரண்டு காரட்டிலிருந்து பதினாலு காரட்டுக்கு வந்து விட்டாலும், அந்தப் பொன்மொழியின் மாற்று மட்டும் அப்படியேதான் இருந்தது என்பது அன்று மாலையே தெரிந்தது அவனுக்கு. ஆம், அலுவலகத்திலிருந்து வெளியே வந்த பாமாவை அன்றும் வழக்கம்போல் அவன் தொடர்ந்து சென்றபோது, அவள் அன்றும் வழக்கம்போல் அவனைத் திரும்பிப் பார்க்காமல் சென்றுவிடவில்லை; திரும்பிப் பார்த்தாள். முதல் தடவையாகத் தன்மேல் வீசப்பட்ட அந்த 'ஐஸ்-கிரீம் பார்வை'யால் அவன் ஒரு கணம் மூச்சுவிடக்கூட மறந்து நின்றபோது, "உங்களுக்கு மூளையிருக்கிறதா?" என்று அவள் வழக்கம்போல் அவனை உரத்த குரலில் கேட்கவில்லை; வழக்கத்துக்கு விரோதமான ரகசியக் குரலில்

கேட்டாள். அடுத்தாற்போல் ஏற்பட்ட இந்த அதிர்ச்சியிலிருந்து அவன் மீள்வதற்குள், ''இல்லை, உங்களுக்கு மூளையிருக்கிறதா என்று கேட்கிறேன்!'' என்றாள் அவள், மறுபடியும் அவனுடைய கன்னத்தில் இடித்துக் கேட்காத குறையாக!

''இருக்கிறது என்றுதான் இத்தனை நாட்களாக நினைத்துக் கொண்டிருக்கிறேன்!-ஏன், இல்லையா?'' என்று அவனும் அதே ரகசியக் குரலில் அவளையே திருப்பிக் கேட்டான், அக்கம் பக்கம் பார்த்துக்கொண்டே.

''இருந்தால் அந்தப் பியூன் நம்மைப் பார்த்துச் சிரித்தானே, அவனை நீங்கள் சும்மா விட்டிருப்பீர்களா?''

''அதைச் சொல்கிறாயா? உத்தியோகத்தில் எப்படியிருந்தாலும் வயதில் நம்மைவிட மூத்தவர் அல்லவா, அவர்? அதனால் அவருடைய ஆசீர்வாதம் நல்லதுதானே என்று பேசாமல் இருந்துவிட்டேன்!''

''ஐயோ! ஆசீர்வாதமா வேண்டும் ஆசீர்வாதம்? மூஞ்சைப் பார், மூஞ்சை!'' என்று அவள் தன் முகத்தை அஷ்ட கோணல்களாக்கி 'அழகு' காட்டியபோது, அந்த 'அஷ்டகோணல்'களும் 'அஷ்ட லட்சணங்க'ளாகத் தோன்றியது அவனுக்கு. ஆகவே, ''எங்கே இன்னொரு தரம், எங்கே இன்னொரு தரம்!'' என்றான் அவன், அவளைக் கெஞ்சாக் குறையாக.

''எதைக் கேட்கிறீர்கள்?'' என்றாள் அவள், ஒன்றும் புரியாமல்.

அவன் பெருமூச்சு விட்டான்!

''என்ன, உடம்பு கிடம்பு சரியில்லையா?'' என்று கேட்டாள் அவள், மீண்டும்.

''அதெல்லாம் ஒன்றுமில்லை; 'எதைக் கேட்கிறீர்கள்?' என்றுக் கேட்கிறாய் - நான் கேட்பதையெல்லாம் நீ கொடுத்து விடவாப் போகிறாய்?'' என்றான் மீண்டும் அதே பெருமூச்சுடன்.

''அப்படியா சமாசாரம்? நான்தான் நீங்கள் கேட்பதற்கு முன்னாலேயே கொடுத்துவிட்டேனே?'' என்றாள் அவள், தன் கையைக் காட்டி.

அவன் தன் கன்னத்தைத் தடவிப் பார்த்துக் கொண்டே சொன்னான்:

''அதில் கூடப் படுசிக்கனம் நீ; ஒன்றுக்கு மேல் கொடுக்கவில்லையல்லவா?''

அவள் சிரித்தாள்; சிரித்துவிட்டுச் சொன்னாள்:

''பாவம், உங்களை நான் அடித்திருக்கக் கூடாது!''

அதுதான் சமயமென்று, ''அடிக்காத கை அணைக்காது!'' என்றான் அவன்!

''அணைக்கும், அணைக்கும்!'' என்று சொல்லிக் கொண்டே அவள் நடந்தாள்; அவன் அவளைத் தொடர்ந்தான்-'ஸ்கூட்ட'ரைத் தள்ளமுடியாமல் தள்ளிக் கொண்டுதான்!

இந்தச் சமயத்தில் அவனைப் பார்த்துக்கொண்டே அவனுக்குப் பின்னால் சைக்கிளில் வந்த மணி, ''என்னடா, ரிப்பேரா?'' என்றான், தன் கால்களில் ஒன்றையே 'பிரேக்'காகப் போட்டுத் தன்னுடைய சைக்கிளை நிறுத்தி.

''ரிப்பேரும் கிடையாது; அதை நீ தெரிந்து கொள்ள வேண்டிய அவசியமும் கிடையாது!'' என்றான் மோகன், அவனைப் பழிக்குப் பழி வாங்குவது போல!

அப்போதுதான் அவனுக்கு முன்னால் போகும் பெண்ணைப்பற்றி அன்றொரு நாள் அவன் தன்னைக் கேட்ட போது, தானும் அதே மாதிரி சொல்லி அவனை மட்டம் தட்டிவிட்டுப் போனது அவனுடைய நினைவுக்கு வந்தது. உடனே வழக்கத்துக்கு விரோதமாக அவன் முதுகில் லேசாகத் தட்டி, ''கோபித்துக்கொள்ளாதேடா! இந்த நாட்டுக் காளைகளையும் கன்னிகளையும் காதல் கோழைகளாக்கி விடுகிறது என்று நினைப்பவன் நான்; என்னிடம் வந்து நீ

அந்தப் பெண்ணைப் பற்றிக் கேட்கலாமா?'' என்றான் மணி.

''அதற்காக அவளுக்கு முன்னால் நீ என் முகத்தில் அடித்தாற்போல் அப்படிப் பதில் சொல்லிவிட்டுப் போவதா?''

''அந்த மான உணர்ச்சியாவது இன்னும் உன்னை விட்டுப் போகாமல் இருப்பது நீ பிறந்த மண்ணின் விசேஷம்; அதற்காக நான் மகிழ்கிறேன்-வரட்டுமா?'' என்றான் மணி.

''தாராளமாக!'' என்றான் மோகன்.

மணி அவனுக்காக இரங்குவதுபோல் அவனை மேலுங் கீழுமாகப் பார்த்தான். அது பிடிக்கவில்லை அவனுக்கு; ''நீ ஒன்றும் எனக்காக இரங்க வேண்டாம்!'' என்றான் அவன். ''இரங்கவில்லை; எச்சரிக்கிறேன்-ஸ்கூட்டர் ரிப்பேராகா விட்டாலும் உடம்பு ரிப்பேராகிவிடப்போகிறதென்று!'' என்றான் மணி.

''சரிதான் போடா. மகாப் பெரிய மனுஷன் மாதிரிச் சொல்ல வந்துவிட்டான்!'' என்று அலட்சியமாகச் சொல்லிக் கொண்டே ஸ்கூட்டரின் மேல் ஏறி அமர்ந்த மோகன், தன்னுடைய பார்வையிலிருந்து வெகு தூரம் சென்றுவிட்ட பாமாவைப் பிடிப்பதற்காக மணியைத் திரும்பிக்கூடப் பார்க்காமல் விரைந்தான்!

மணியோ அவனுக்காகத் தன் அடிவயிற்றில் அடித்துக் கொண்டு மேலே சென்றான்.

மயிலையில் இருந்த தன்னுடைய வீட்டுக்குச் செல்வதற்காகக் கடற்கரையோரமாக இருந்த ஒரு பஸ்-ஸ்டாப்பில் வழக்கம் போல் வந்து நின்றாள் பாமா-ஆம், அவர்கள் வேலை பார்க்கும் அலுவலகம் சேப்பாக்கத்தில் தான் இருந்தது.

முதல் பஸ் வந்து நின்றது-அதில் வழக்கம்போல் ஏறி உட்கார்ந்துவிடவில்லை, அவள்-நின்றாள்!

இரண்டாவது பஸ் வந்து நின்றது-அதிலும் வழக்கம் போல் ஏறி உட்கார்ந்துவிடவில்லை, அவள்-நின்றாள்!

மூன்றாவது பஸ் வந்து நின்றது-'இதையுமா அந்தப் பைத்தியத்துக்காக விட்டுவிட்டு இங்கேயே நிற்பது?' என்று அவள் கொஞ்சம் யோசித்தாள்-அதற்குள், 'ரைட்' என்றான் கண்டக்டர்; அவளும் 'ரைட்' என்று சொல்லாமல் சொல்லிவிட்டாள், அவனுடன் சேர்ந்து!

'ஏன் இப்படி? எதற்காக இன்று தனக்கு இந்த நிலை?'-அதுதான் தெரியவில்லை, அவளுக்கு?

அதற்குள் அங்கே வந்து சேர்ந்த மோகன், "எனக்குத் தெரியும், எனக்காக இன்று நீ இங்கே காத்துக் கொண்டிருப்பாய் என்று!" என்றான் செயற்கையான 'சினிமாச் சிரிப்'புடன்.

"நான் ஒன்றும் உங்களுக்காகக் காத்துக்கொண்டிருக்க வில்லை: பாழாய்ப் போன பஸ் வந்திருந்தால் எப்பொழுதோ பறந்து போயிருப்பேனாக்கும்?" என்றாள் அவள், தன்னைத் தானே சமாளித்துக்கொண்டு.

"பொய்! அந்தப் 'பெரிய மனுஷ'னுடன் அங்கே பேசிக் கொண்டிருந்தாலும், எனக்காக நீ இங்கே கோட்டை விட்டுக் கொண்டிருந்த பஸ்களை எண்ணத் தவறவில்லை நான்!-வேண்டுமானால் இன்னொரு முறை எண்ணிக் காட்டட்டுமா?-ஒன்று, இரண்டு, மூன்று!" என்று அவன் கை விரல்களை ஒவ்வொன்றாக விட்டு எண்ணிக் காட்டிவிட்டு, "என்ன, சரிதானா?" என்றான் அவள் முகத்துக்கு நேராகக் குனிந்து.

அவ்வளவுதான்; அதற்குமேல் சமாளிக்க முடியவில்லை அவளால்-'களுக்'கென்று சிரித்துவிட்டாள்!

"அகப்பட்டுக் கொண்டாயா? வா, கொஞ்ச நேரம் கடற்கரையில் இருந்துவிட்டுப் போவோம்!" என்றான் அவன்.

''ஏன், உடம்பை ரிப்பேராக்கிக் கொள்ளவா?'' என்றாள் அவள், குறுநகையுடன்.

''ஆனால் என்ன, அதைச் சரிப்படுத்தத்தான் நீ இருக்கிறாயே?'' என்றான் அவன், அதற்கும் விட்டுக் கொடுக்காமல்.

அப்போது, 'இப்போதாவது ஏறுகிறாயா, இல்லையா?' என்பது போல் நாலாவது பஸ் வந்து அவளுக்கு முன்னால் நின்றது. அதைப் பார்த்ததும், ''ஆசையைப் பார், ஆசையை!'' என்பது போல் மீண்டும் ஒருமுறை 'அழகு' காட்டிவிட்டு, அதில் ஏறிக்கொண்டாள் அவள்!

ஏன் இப்படி? எதற்காக இந்த அவசரம்?-அதுவும் தெரியவில்லை, அவளுக்கு!

# 4. ''போலீஸ், போலீஸ்!''

''அழகு காட்டினால் சரோஜா தேவி; காட்டாவிட்டால் தேவிகா-இந்த இரண்டு நட்சத்திரங்களும் சேர்ந்த ஒரே நட்சத்திரம் என் கனவுக் கன்னி!''

தூங்கும்போதுகூட இப்படி உளறுவது யாராயிருக்கும்? வேறு யாராயிருக்கப் போகிறார்கள், அண்ணாவாகத்தான் இருக்கும்!...

இந்தத் தீர்மானத்துடன் அன்றும் பரீட்சைக்காகப் படித்துக் கொண்டிருந்த அருணா மேலே படித்தபோது, உளறல் தொடர்ந்தது.

''நீ திட்டினால் உறைக்கவில்லை; அடித்தால் வலிக்கவில்லை-'ஏன்?' என்று தெரியவில்லையே, எனக்கு!''

அருணா சிரித்தாள்!-அவள் சிரிப்பொலியால் தூக்கம் கலைந்து எழுந்த அவளுடைய அம்மா, ''இந்த நேரத்தில் உனக்கு என்னடி சிரிப்பு, படிப்பதை விட்டுவிட்டு!''

என்றாள், 'பிளாஸ்க்'கில் தேநீர் இருக்கிறதா என்று பார்த்துக் கொண்டே.

''அண்ணா சொல்வதைக் கேட்டாயா, அம்மா?-யாரோ திட்டினால் அவனுக்கு உறைக்கவில்லையாம், அடித்தால் வலிக்கவில்லையாம்!''

''அது யாராம், அது?''

''அழகு காட்டினால் அவள் சரோஜாதேவி மாதிரி இருக்கிறாளாம்; காட்டாவிட்டால் தேவிகாமாதிரி இருக்கிறாளாம்!''

''நாசமாய்ப் போச்சு! இதற்குத்தான் 'தலையிலே கொஞ்சம் எண்ணெய் வைத்துக் குளிடா, தலையிலே கொஞ்சம் எண்ணெய் வைத்துக் குளிடா!' என்று நான் ஒரு நாளைப்போல அடித்துக் கொள்கிறேன். கேட்கிறானா? வெறும் தண்ணீரைத் தலையிலே கொட்டிக்கொண்டு வெளியே வந்துவிடுகிறான்!''

''எண்ணெய் தேய்த்துக் குளிப்பதைவிட எலுமிச்சம் பழம் தேய்த்துக் குளித்தால் நல்லதென்று தோன்றுகிறது, எனக்கு!''

''உனக்குத் தோன்றுதா, எல்லாம் தோன்றும்-போடி, போ!'' என்றாள் தாயார், தன் மகனுக்காகப் பரிந்து.

''எதையும் ஆரம்பத்திலேயே கவனித்தால் நல்லது என்பதற்காகச் சொன்னேன்; உனக்குப் பிடிக்காவிட்டால் விட்டுவிடு!'' என்றாள் தங்கை!

மறுநாள் காலை கனகுஷியுடன் ஏதோ ஒரு சினிமாப்பாட்டைச் சீட்டியடித்துப் பாடிக்கொண்டே மோகன் தன் அறையை விட்டு வெளியே வந்தபோது, குபீரென்று வந்த சிரிப்பை அருணாவால் அடக்க முடியவில்லை; சிரித்து விட்டாள்!

மோகன் பாடுவதை நிறுத்திவிட்டு அவளை ஒரு தினுசாகப் பார்த்தான்; அவளும் அவனை ஒரு தினுசாகப் பார்த்து விட்டு, மறுபடியும் சிரித்தாள்!

''ஏன் சிரிக்கிறாய்?'' என்று கேட்டான் அவன், ஒன்றும் புரியாமல்.

பதில் இல்லை, சிரிப்பதைத் தவிர!

''பைத்தியமா, உனக்கு?''

அதற்கும் பதில் இல்லை, அவளிடமிருந்து-மறுபடியும் மறுபடியும் சிரிப்பதைத் தவிர!

''அம்மா! அருணாவைப் பார் அம்மா! என்னைப் பார்த்ததும் 'குபீர், குபீர்' என்று சிரிக்கிறாள்!'' என்று கத்தினான் அவன்.

அவளோ அடுக்களையில் இருந்தபடியே, ''அவளுக் கென்ன வேலை, நீ போய் உன் வேலையை பார்!'' என்றாள், விஷயத்தைப் புரிந்துகொண்டு.

''போம்மா! அவள் பாட்டுக்குச் சிரித்துக் கொண்டே இருப்பாள், நான் பாட்டுக்கு என் வேலையைப் பார்த்துக் கொண்டே இருப்பேனாக்கும்?'' என்று சொல்லிவிட்டு, ''ஏன் சிரிக்கிறாய், என்னைப் பார்த்து?-சொல்; சொல்லப் போகிறாயா, இல்லையா?'' என்று அவள் தலையில் குட்டப் போனான், அவன்.

அவனுடைய குட்டிலிருந்து தப்புவதற்காக, ''ஒன்று மில்லை அண்ணா! நீ சீட்டி அடித்தால் சிவாஜி கணேசனைப் போல் இருக்கிறாய்; அடிக்காவிட்டால் ஜெமினி கணேசனைப் போல் இருக்கிறாய்!'' என்றாள் அவள், கொஞ்சம் பின் வாங்கி நின்று.

அவ்வளவுதான்; ''நிஜமாகவா அருணா, நிஜமாகவா?'' என்றான் அவன், உச்சி குளிர்ந்து.

''நிஜமாகத்தான், அண்ணா! வேண்டுமானால் நீ அம்மாவைக் கேட்டுப் பாரேன்?'' என்றாள் அவள், மெல்ல அவனிடமிருந்து நழுவிக்கொண்டே.

'சினிமா என்றாலே 'சிவசிவா!' என்று காதைப் பொத்திக்கொள்ளும் அம்மாவுக்கு இந்த மாதிரி

விஷயங்களில் அபிப்பிராயம் சொல்ல எங்கே தகுதி இருக்கப் போகிறது?' என்று நினைத்த மோகன், அவளிடம் போகவில்லை. அதற்குப் பதிலாக மறுபடியும் சீட்டியடித்துக் கொண்டே சென்று அவன் தன் முகத்தைக் கண்ணாடியில் பார்த்தான்; சிவாஜி கணேசனைப்போல் இருப்பதாகத் தோன்றியது. சீட்டியடிப்பதை நிறுத்திவிட்டுப் பார்த்தான்; ஜெமினி கணேசனைப்போல் இருப்பதாகத் தோன்றியது-அப்புறம் என்ன, அது போதாதா?

'தன் கண்ணே தனக்குச் சாட்சி!' என்ற திருப்தியுடன் அவன் திரும்பியபோது, கொஞ்சமும் எதிர்பாராத விதமாக அவனைப் பிடித்து இழுத்துப் பலவந்தமாகக் கீழே உட்கார வைத்து அவன் தலையில் எண்ணெய் தேய்க்க ஆரம்பித்துவிட்டாள், அவனுடைய அம்மா!

பாவம், எண்ணெய் தேய்த்துக் குளித்தால் எந்தச் சுருட்டை முடி கலைந்து விடுமென்று அத்தனை நாளும் அவன் பயந்து கொண்டிருந்தானோ, அந்தச் சுருட்டை முடி அன்று அவள் கையில் அகப்பட்டுக் கொண்டு படாத பாடுபட்டது!

அன்று மாலை, முதல் நாள் அளித்த ஏமாற்றத்தைப் பாமா அவனுக்கு அளிக்கவில்லை; தோளோடு தோள் கூட்டிக் கடற்கரைக்கு வந்தாள்.

''உலகத்தின் புகழ் பெற்ற கடற்கரைகளில் ஒன்றான இந்த மெரீனாவிலே உன்னையும் என்னையும் தவிர வேறு யாரும் இல்லாமல் இருந்தால்...?''

மோகன் முடிக்கவில்லை; ''இல்லாமல் இருந்தால் என்னவாம்?'' என்று இடைமறித்துக் கேட்டாள் பாமா.

''தோளோடு தோள் மட்டுமா கூடியிருக்கும்?'' என்றான் அவன், விஷமத்தனத்துடன்.

அவள் சளைக்கவில்லை; ''வேறு என்ன கூடி யிருக்கும்?'' என்றாள், அவளும் விஷமத்தனத்துடன்.

அவ்வளவுதான்; அளவு கடந்த சங்கோசத்துடன் இருகைகளையும் சேர்த்து இரு கால்களுக்கு இடையே வைத்துக் கொண்டு, "ஊஹும், நான் சொல்ல மாட்டேன்!" என்றான் அவன், நெளிந்து வளைந்து.

அவள் சிரித்தாள்; சிரித்துவிட்டுச் சொன்னாள்:

"ஓடுகிற நாயைத்தான் நீங்கள் துரத்துவீர்கள் போலிருக்கிறது!"

அவன் சொன்னான்; நாணிக் கோணிச் சொன்னான்:

"ஓடாத நாயை நான் ஏன் துரத்த வேண்டுமாம்?"

"சரி, துரத்த வேண்டாம்; உட்காருங்கள்!" என்று சொல்லி அவள் அவனை உட்கார வைத்துவிட்டு, "உடம்பு பலவீனமாயிருப்பது கூட அவ்வளவு ஆபத்து அல்ல, உள்ளம் பலவீனமாயிருப்பது ரொம்ப ஆபத்து!" என்றாள் தானும் அவனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து.

"ஏன், என்னுடைய உள்ளம் பலவீனமாயிருக்கிறதா, என்ன?" என்று திடுக்கிட்டுக் கேட்டான் அவன்.

"சந்தேகமில்லாமல்! இல்லாவிட்டால் உங்கள் எண்ணம் இவ்வளவு கீழே போயிருக்காதே?" என்றாள் அவள், கொஞ்சம் வேகமாக.

"எதைச் சொல்கிறாய், நீ?"

"கொஞ்ச நேரத்துக்கு முன்னால் தோளோடு தோள் மட்டும் கூடியிருக்காது என்று சொன்னீர்களே, அதைச் சொல்கிறேன்!"

இப்போதுதான் அவன் செய்த தவறு அவனுக்குப் புரிந்தது; "என்னை மன்னித்து விடு, பாமா! எண்ணத்தில் என்னைவிட நீ உயர்ந்து நிற்கிறாய் என்பதை இப்போதுதான் நான் உணர்கிறேன். ஆனால்..." என்று இழுத்தான், அவன்.

"என்ன, சொல்லுங்கள்?" என்றாள் அவள்.

"நீ பக்கத்தில் இருக்கும்போது என்ன பேசுகிறேன் என்பது எனக்கேத் தெரியவில்லை!" என்றான் அவன்.

''அதற்குக் காரணம் நான் அல்ல; 'நாகரீகம்' என்னும் பேரால் நான் அணிந்துள்ள ஆடை அலங்காரம்!'' என்றாள் அவள்.

''ஏன், உன்னுடைய ஆடை அலங்காரம் உனக்கே பிடிக்கவில்லையா?''

''இல்லை!''

''ஆச்சரியமாயிருக்கிறதே, உனக்குப் பிடிக்காத அலங்காரத்தை நீ ஏன் செய்து கொள்ள வேண்டுமாம்?''

''அக்காவுக்காக!''

''உனக்கு அக்கா வேறு இருக்கிறாளா?''

''இருக்கிறாள், எனக்காக இன்னும் கல்யாணம் கூடச் செய்து கொள்ளாமல்!''

''என்ன வயதிருக்கும், அவளுக்கு?''

''வயது முப்பதுதான் இருக்கும். ஆனால், பார்வைக்கு அறுபது வயதைக் கடந்துவிட்டவள்போல் இருப்பாள்!''

''காரணம்?''

''உழைப்பின் பலன்!''

''வேடிக்கையாயிருக்கிறதே, நீ சொல்வது?''

''வேடிக்கையல்ல, வேதனை! அவள் பத்துவயதுச் சிறுமியாக இருக்கும்போதே கணவனை இழந்த என் அம்மா, என்னையும் என் தம்பி பாலுவையும் அவளிடம் ஒப்படைத்துவிட்டுக் கண்ணை மூடிவிட்டாளாம்-'இல்லை' என்பவர்களைக் கண்டால் அவர்கள் இருக்கும் பக்கம் கூடத் தலை வைத்துப் படுக்க விரும்பாத 'புண்ணயாத்மாக்கள்' நிறைந்த இந்த உலகத்திலே அவள் எங்களை இந்த அளவுக்குக் கொண்டு வர என்ன பாடுபட்டிருக்க வேண்டும்?-அதன் பலன்தான் அவளை அப்படி ஆக்கிவிட்டது!''

''ஐயோ பாவம், அந்த நிலையில் அவளுக்குப் படிக்கக்கூட நேரம் இருந்திருக்காது போலிருக்கிறதே?''

''இல்லை; ஐந்தாம் வகுப்புடன் தன்னுடைய படிப்பை நிறுத்திக் கொண்டு, எங்களுடைய படிப்பில் கவனம் செலுத்த ஆரம்பித்துவிட்டாள் அவள்!''

''அப்பாவின் சொத்து ஏதாவது...''

''இருந்தது, அவருடைய தலை முடி! -திருப்பதி வேங்கடாசலபதிக்குக் காணிக்கை செலுத்துவதற்காக எடுத்து வைத்தது!''

''அப்படியானால் அவள் தியாக சிகரமாய்த்தான் இருக்க வேண்டும்!'' என்றான் அவன்.

''இல்லாவிட்டால் அவள் சொன்னபடியெல்லாம் நான் ஏன் ஆடுகிறேன்? அவளுக்காக இந்த வேஷத்தையெல்லாம் நான் ஏன் போடுகிறேன்?'' என்றாள் அவள், கண்ணில் நீருடன்.

அவன் அதைத் துடைத்து, ''அந்த ஒரு விஷயத்தில் மட்டும் நான் உன் அக்காவின் கட்சி!'' என்றான் குறுநகையுடன்.

''எந்த விஷயத்தில்?'' என்று தன்னை மறந்து கேட்டாள், அவள்.

''உன்னுடைய ஆடை அலங்கார விஷயத்தில்!'' என்றான் அவன், அவளுடைய 'கண்ணாடிச் சேலை'யைக் கண்ணால் மட்டும் பார்த்து ரசித்தால் போதாதென்று, கையாலும் தொட்டுப் பார்த்து ரசித்துக் கொண்டே.

அவள் அவனுடைய கையை எடுத்து அப்பால் வைத்து விட்டு, ''எனக்குத் தெரிந்தவரை இது மனிதனை உயர்த்தவில்லை; தாழ்த்துகிறது!'' என்றாள் வெறுப்புடன்.

அந்தச் சமயத்தில், சாராய வாடை குப்பென்று வீச யாரோ ஒரு முரடன் தட்டுத் தடுமாறிக்கொண்டே அங்கு வந்து, ''நானும் ரொம்ப நேரமா பாத்துக்கிட்டுத்தான்

இருக்கேன்! நீயே எம்மாநேரம் இந்தக் குட்டியோட உட்கார்ந்து பேசிக்கிட்டுருப்பே? எழுந்து போடா, நானும் கொஞ்ச நேரம் உட்கார்ந்து பேசறேன்!'' என்று சொல்லிக் கொண்டே, மோகனின் கையைப் பிடித்து இழுத்து அப்பால் விட்டுவிட்டு, பாமாவின் பக்கத்தில் உட்கார்ந்தான்!

அவ்வளவுதான்; ''ஐயோ!'' என்று அலறி எழுந்தாள் அவள்!

''போலீஸ், போலீஸ்!'' என்று கத்தினான் மோகன், எதற்கும் ஓடத் தயாராகிக்கொண்டே.

''கேட்டியா, குட்டி? உன்னைக் காதலிக்கக்கூட அந்தப் பயலுக்குப் போலீஸ் பந்தோபஸ்து வேண்டுமாம்!'' என்று சிரித்துக் கொண்டே எழுந்து, பாமாவை நெருங்கினான் அந்தப் பேர்வழி.

அப்போது மின்னல் வெட்டி மறைந்ததுபோல் எங்கிருந்தோ ஒரு குத்து வந்து அந்தப் பேர்வழியின் மேல் விழுந்து மறைந்தது; அவன் கீழே விழுந்தான்!

அந்தக் குத்துக்குரிய ஆபத்பாந்தவன் யார் என்று மோகன் பார்த்தபோது, ''இருட்டி இவ்வளவு நேரம் ஆன பிறகுமா இங்கேயே உட்கார்ந்து பேசிக்கொண்டிருப்பீர்கள்? போங்கள், சீக்கிரம் வீட்டுக்குப் போங்கள்!'' என்றான் மணி.

# 5. மணி என்றொரு மானிடன்

''மணி என்று ஒரு மானிடன் மட்டும்தானா இருக்கிறான், இந்த உலகத்தில்? எத்தனையோ மானிடர்கள் இருக்கிறார்களே?'' என்பார்கள் சிலர். ஆம், இருக்கிறார்கள். ஆனால் எதற்காக? தங்களுக்காக மட்டுமே வாழ்வதற்காக! அல்லது, சாவதற்காக!

இந்தத் தன்மைக்கு முற்றிலும் மாறுபட்ட தன்மை யுள்ளவன், மணி. தனக்குப் புத்தி தெரிந்த நாளிலிருந்தே அவன் தனக்காக மட்டும் வாழவில்லை; பிறருக்காகவும் வாழ்ந்து வந்தான்.

இதன் காரணமாக இதுவரை எத்தனையோ தொல்லை களுக்கு உள்ளாகியிருந்தும், அந்தத் தொல்லைகளில் அவன் துன்பத்தைக் காணவில்லை; இன்பத்தையே கண்டு வந்தான்-இது அவனுடைய மனத்தின் இயல்பு!

இந்த இயல்பை விரும்பாத சிலர் அவனைப் பேதை என்றும், பிழைக்கத் தெரியாதவன் என்றும் பழிப்பதுண்டு. அந்தப் பழி அவனுக்குச் சிறுமையைத் தேடித் தரவில்லை; பெருமையையே தேடித் தந்தது.

ஆனால் அந்தப் பெருமையால் அவன் தலை கனக்கவில்லை. மாறாக, அவன் மனம் மேலும் கொஞ்சம் துணிவு பெற்றது; கைகள் மேலும் கொஞ்சம் உரம் பெற்றன.

தனக்கு முன்னால் யாருக்கு என்ன அநீதி இழைக்கப்பட்டாலும் சரி, அதை அவனால் தாங்க முடியாது; அதற்குரிய தண்டனையை அரசாங்கமோ, ஆண்டவனோ அளிக்கும் வரை அவனால் பொறுத்துக் கொண்டிருக்கவும் முடியாது!

**"கொலை வாளினை எடடா,**
**கொடியோர் செயல் அறவே!"**

என்று பாவேந்தர் பாரதிதாசனார் பாடியிருக்கிறார் அல்லவா? -அந்த வாளை அவசியமான போது எடுப்பதற்காக அவன் தேடிக் கொண்டிருப்பதில்லை; அதை எப்போதும் தன் கையிலேயே வைத்துக் கொண்டிருந்தான் அவன். ஆம், அவனுடைய கையே அந்த வாளாக இருந்து வந்தது.

அன்றும் வழக்கம்போல் தன் வாளைப் பயன்படுத்தும் வரை, கடற்கரையில் தனக்கு முன்னால் அநீதிக்கு உள்ளானவர்கள் மோகன் என்றோ, பாமா என்றோ

அவனுக்குத் தெரியாது; பயன்படுத்திய பின்னரே தெரியும். இருந்தாலும், தன்னுடைய வியப்பை வெளியே காட்டிக் கொள்ளாமல் தாக்குண்டவனைத் தானே தூக்கி நிறுத்தி, ''உன் மனைவியிடம், உன்னுடைய மைத்துனியிடம்- அல்லது, உன் தாயிடம், உன்னுடைய தங்கையிடம் உன்னைப்போல் ஒருவன் நடந்து கொண்டிருந்தால் உனக்கு எப்படி இருக்கும்?'' என்று கேட்டான் மணி.

அவன் நிலைகுலைந்து, ''என்னை மன்னிச்சுடுங்க; இனிமே நான் இப்படிச் செய்ய மாட்டேன்!'' என்று மணியின் காலைப் பிடிப்பதற்காகக் கீழே குனிந்தான்.

''சீ, இவ்வளவு கோழையா நீ? உன்னையா நான் அடித்தேன்? வெட்கப்படுகிறேன், உன்னை அடித்ததற்காக! வேதனைப்படுகிறேன், வாழ்க்கையில் உனக்கு நேரும் துன்பங்களையும் துயரங்களையும் வேறு வகையில் மறந்திருக்க முடியாத நீ, கள்ளச் சாராயத்தைக் குடித்தாவது அவற்றைக் கொஞ்ச நேரம் மறந்திருக்க முயலும் நிலையிலே இந்த நாடு உன்னை வைத்திருப்பதற்காக! ஓடிப்போ! உன்னை ஆண்டவன் மன்னிக்கலாம்; ஆளுவோர் மன்னிக்கலாம். ஆனால் நான் மன்னிக்க மாட்டேன்; ஆம், உன்னை நான் மன்னிக்கவே மாட்டேன்! போ, ஓடிப் போ!'' என்று அவனை ஓர் உந்து உந்தித் தள்ளி விட்டுத் தன் வழியே நடந்தான், மணி.

ஆண்மைக்குரிய அத்தனை லட்சணங்களும் பொருந்திய அவனையே வைத்த விழி வாங்காமல் பார்த்துக் கொண்டு நின்றாள் பாமா, அவள் எங்கே தன்னுடைய கையை விட்டுப் போய்விடுவாளோ என்று பயந்த மோகன், ''கிடக்கிறான், காலிப் பயல்! நீ வா!'' என்று அவள் கையைப் பற்றி இழுத்தான்.

பாமா திடுக்கிட்டு, ''யாரைக் காலிப்பயல் என்கிறீர்கள்?'' என்று கேட்டாள், அவனுடன் நடந்து கொண்டே.

''ஏன், மணியைத்தான்! இப்போது நடந்ததெல்லாம் அவனுடைய சூழ்ச்சிதான் என்பது இன்னுமா தெரிய வில்லை, உனக்கு?'' என்றான் மோகன், அந்த நிலையிலும் அவளைத் தன் வயப்படுத்த.

''உண்மையாகவா?'' என்றாள் அவள், வியப்புடன்.

''சந்தேகமில்லாமல்! அவன்தான் அந்தக் குடிகாரனை நம்மேல் ஏவி விட்டுவிட்டு, அவனுக்குப் பின்னால் ஒரு பாவமும் அறியாதவன் போல் வந்திருக்கிறான்!''

''காரணம்?''

''உன்மேல் அவனுக்கு ஒரு கண்!''

''என் மேல் ஒரு கண்ணா! என்னால் நம்ப முடியவில்லையே, இதை?''

''ஏன் நம்பமுடியவில்லை?''

''ஆபீசில் அவரைப் பற்றிச் சொல்லப்படும் கதைகள். இதை நான் நம்பக் கூடியதாயில்லை!''

''அது என்ன கதைகள், அவனுடைய நண்பனான எனக்குத் தெரியாத கதைகள்?''

''யாரோ ஒருத்தி வருடக்கணக்கில் அவரை வளைய வந்து கொண்டிருந்துவிட்டுக் கடைசியாக ஒரு நாள் தன் காதலை வெளியிட்டாளாம்; அவரோ 'தூ!' என்று அவளுக்கு முன்னாலேயே காரித் துப்பிவிட்டு அப்பால் போய் விட்டாராம்!''

''இவ்வளவுதானே, அவளை அவனுக்குப் பிடித்திருக்காது!''

''என்னை மட்டும் பிடிக்க நான் என்ன ரம்பையா, ஊர்வசியா?''

''நமக்குத் தெரியாதவர்களையும் நம்மால் பார்க்க முடியாதவர்களையும் நாம் ஏன் உவமைக்காக எடுத்துக் கொள்ள வேண்டும்? நீ அழகு காட்டினால் சரோஜாதேவி;

காட்டாவிட்டால் தேவிகா!'' என்றான் அவன், எல்லோருக்கும் தெரிந்த உவமையுடன்!

அவ்வளவுதான்; ''நல்ல சினிமாப் பைத்தியந்தான்!'' என்று சொல்லிக் கொண்டே அவள் கொஞ்சம் நெளிந்தாள். அதுதான் சமயமென்று அவள் இடுப்பில் கையைப் போட்டு வளைத்து, ''நான் பெருமை கொள்கிறேன் பாமா, நான் பெருமை கொள்கிறேன்!'' என்றான் மோகன், பரவசத்துடன்.

பாமா அவனுடைய கையை எடுத்து அப்பால் விட்டு விட்டு, ''ஏனாம்?'' என்று கேட்டாள், அவனை விட்டுக் கொஞ்சம் விலகி நடந்து.

''என்னை இழுத்து அப்பால் விட்டுவிட்டு அந்தக் குடிகாரன் உனக்குப் பக்கத்திலே உட்கார்ந்ததற்காக; அவனை முன்னால் அனுப்பிவிட்டு, அவனுக்குப் பின்னால் அந்த மணிப்பயல் வந்ததற்காக!''

''அட, கர்மமே! அதற்காக நீங்கள் பெருமை கொள்வதாவது, கோபமல்லவா கொண்டிருக்க வேண்டும்?''

''சுத்த அநாகரிகமாயிருக்கிறாயே, நீ! கோபம் யாருக்கு வரும், அநாகரிகமானவர்களுக்குத்தான் வரும்! என் காதலியிடம் ஒருவன், நான் பக்கத்தில் இருக்கும்போதே தவறாக நடந்துகொள்ளத் துணிகிறான் என்றால், அவளுடைய அழகு, அந்த அழகை அவள் வெளிப்படுத்தும் முறை, எப்படிப்பட்டதாயிருக்க வேண்டும்? அதற்காக நாகரிக புருஷனான நான் பெருமை கொள்வதா, கோபம் கொள்வதா?-நீயே சொல்லு?''

''அது என்ன இழவோ! எனக்குத் தெரிந்தவரை எந்தப் பெண்ணின் அழகும், அந்த அழகை அவள் வெளிப்படுத்தும் முறையும் ஆண்களுக்கு வெறியூட்டுவதாயிருக்கக் கூடாது; சாந்தி அளிப்பதாயிருக்கவேண்டும். அதனால்தான் என்னை விளையாட்டுப் பொம்மையாகக் கருதி, 'அலங்காரம்' என்னும் பேரால் 'அலங்கோல'மாக்கிவிடும் என் அக்காவைக் கூட நான் சில சமயம் வெறுக்கிறேன்!''

இப்படி அவள் சொன்னாளோ இல்லையோ, ''அபத்தம், அபத்தம்! என் கனவுக் கன்னியின் புத்தி இப்படியாப் போகவேண்டும்? அடக் கடவுளே!- இதனால்தான் கொஞ்ச நேரத்துக்கு முன்னால் உன் இடுப்பை வளைக்க என் கை முயன்றபோதுகூட நீ அதை எடுத்து அப்பால் விட்டுவிட்டாயா?-மோசம், மோசம்! ரொம்ப ரொம்ப மோசம்! உன்னைப் போன்ற பெண்கள் நிறைந்த இந்த நாட்டிலே பிறக்க நான் என்ன பாவம் செய்தேனோ? ரோமாபுரியில், அல்லது பிரான்சில் நான் பிறந்திருக்கக் கூடாதா? அங்குள்ள காதலர்கள் மக்கள் நடமாட்டம் மிக்க வீதிகளிலேயே என்னவெல்லாமோ செய்கிறார்களாமே? அதைப் பார்த்தும் பார்க்காததுபோல் மற்றவர்கள் போய்விடுகிறார்களாமே? அவையல்லவா நாகரிகம் மிக்க நாடுகள்? அங்குள்ள மக்களல்லவா நாகரிகம் மிக்க மக்கள்?'' என்று பிரலாபிக்க ஆரம்பித்துவிட்டான், அவன்.

அவள் அவனுடைய வாயைப் பொத்தி, ''என்னை மன்னியுங்கள், இன்னும் அந்த அளவுக்கு நான் முன்னேறவில்லை!'' என்றாள் மெல்ல.

அதற்குள் சாலைக்கு வந்துவிட்ட மோகன் ''முன்னேறாவிட்டால் என்ன, முன்னேற்றத்தான் நான் இருக்கிறேனே? ஏறு, எனக்குப் பின்னால்!'' என்று தன் ஸ்கூட்டருக்குப் பின்னாலிருந்த ஸீட்டை உற்சாகத்தோடு ஒரு தட்டுத் தட்டிக் காட்டினான்!

''வேண்டாம்; நான் பஸ்ஸிலேயே போய்விடுகிறேன்!'' என்றாள் அவள்.

அவன் 'ஓ'வென்று சிரித்துவிட்டு, ''நீ இப்படிச் சொல்வாய் என்று தெரிந்துதானே எல்லா பஸ்களும் போகட்டுமென்று நான் இவ்வளவு நேரம் உன்னுடன் பேசிக்கொண்டிருந்தேன்?'' என்றான், அவளை ஏற இறங்கப் பார்த்தபடி.

அவள் ஒரு நீண்ட பெருமூச்சுடன் அவனுக்குப் பின்னால் ஏறி உட்கார்ந்தாள்; அவனும் ஒரு நீண்ட பெருமூச்சுடன் அவளுக்கு முன்னால் ஏறி உட்கார்ந்தான்-பரிபூரணமாக அவளை ஏமாற்றிவிட்ட பரம திருப்தியுடன்!

தன்னந் தனியனான மணி, அன்றிரவு தான் தங்கியிருந்த ஓட்டலுக்குத் திரும்பும்போது மணி பத்துக்கு மேல் இருக்கும். "ஏன் சார், இன்று இவ்வளவு நேரம்?" என்று கேட்டான் வாசலில் நின்றுகொண்டிருந்த சர்வர் சங்கர், தன் கையில் புகைந்து கொண்டிருந்த பீடியை அவனைக் கண்டதும் தனக்குப் பின்னால் மறைத்து வைத்துக் கொண்டு.

"இவ்வளவு பெரிய உலகத்தில் இப்படிக் கேட்க நமக்கு யாருமில்லையே என்று நினைத்துக் கொண்டிருந்தேன்; நீ ஒருவன் இருக்கிறாயா?-மகிழ்ச்சி!" என்று சொல்லிக் கொண்டே மாடிக்குச் சென்றான் மணி.

'இந்த வேடிக்கையான உலகத்திலே இவர் ஒரு வேடிக்கையான சார்!' என்று முணுமுணுத்துக் கொண்டே, தன் கையிலிருந்த பீடியை அவசரம் அவசரமாக இரண்டு இழுப்பு இழுத்து வீசி எறிந்துவிட்டு, "என்ன சார், ஏதாவது வேண்டுமா?" என்று கேட்டுக் கொண்டே அவனைத் தொடர்ந்தான் சங்கர்.

"ஒன்றும் வேண்டாம்; 'இந்த நேரத்தில் உனக்குத் தொல்லை கொடுப்பானேன்?' என்று வழியிலேயே நான் வயிற்றைக் கவனித்துக் கொண்டு வந்துவிட்டேன். நீ போய்ப் படுத்துக் கொள்!" என்று சொல்லி, அவனை அனுப்பிவிட்டுத் தன் அறையைத் திறந்து விளக்கைப் போட்டான் மணி.

அந்த அறையின் வாயிலைப் பார்த்தாற்போல் மாட்டி வைக்கப்பட்டிருந்த மோகனின் படம், 'ஏண்டா, மணி! என்னதான் இருந்தாலும் ஒரு பெண்ணின் முன்னால்-அதிலும் நான் காதலிக்கும் ஒரு பெண்ணின் முன்னால் என்னை நீ அப்படி அவமானப்படுத்தலாமா? நாளைக்கு நான்

அவளுடைய முகத்தில் எப்படி விழிப்பேன்?-இல்லை, உன்னுடைய முகத்தில்தான் எப்படி விழிப்பேன்?' என்று அவனைக் கேட்பது போலிருந்தது.

'உண்மைதானடா! அது நடந்தபிறகு எனக்கும் அப்படித்தான் தோன்றிற்று; ஆனால், கொஞ்சம் யோசித்துப் பார்த்தால், அது என்னால் தவிர்க்க முடியாததென்று தோன்றவில்லையா, உனக்கு?-தோன்றித்தான் இருக்கும்; ஆனால் உணர்ச்சி அந்தப் பெண்ணைப் பார்க்க மட்டும் என்ன, என்னைப் பார்க்கக் கூட உன்னை ஓரிரண்டு நாட்களாவது யோசிக்க வைத்துக் கொண்டுதான் இருக்கும்-அதனாலென்ன, நான் கொஞ்சம் தாராளமாகவே லீவு போட்டு விடுகிறேனே. நாலைந்து நாட்களுக்கு! அதற்குள் நீ எல்லாவற்றையும் சமாளித்துக் கொண்டு விடமாட்டாயா?-என்ன, நான் சொல்வது?' என்று அந்தப் படத்தைப் பார்த்து அவன் சமாதானம் சொல்லிக் கொண்டே படுக்கையை எடுத்து விரித்துவிட்டு, விளக்கை அணைத்தான் படுக்க!

பாவம், பிறருடைய உணர்ச்சியை மதிக்கத் தெரிந்த அவனுக்குத் தன்னுடைய உணர்ச்சியையே மதிக்கத் தெரியாத மோகனா நண்பனாக வந்து வாய்க்க வேண்டும்?

## 6. கல்கத்தா ரசகுல்லா

கடைசி நாள் பரீட்சையை எழுதி முடித்ததும், ''போர், போர்!'' என்று கத்திக்கொண்டே கலாசாலையை விட்டு வெளியே வந்தாள் அருணா.

''எதைச் சொல்கிறாய்? பரீட்சையைச் சொல்கிறாயா, பரீட்சையில் கேட்கப்பட்ட கேள்விகளைச் சொல்கிறாயா?'' என்று கேட்டாள், அவளைத் தொடர்ந்து வந்த அவள் தோழிகளில் ஒருத்தியான எழிலி.

''இரண்டையுந்தான்! பத்துப் பதினைந்து நாட்களாகப் படித்துப் படித்து, எழுதி, எழுதி, போதும் போதும் என்று ஆகிவிடவில்லையா, நமக்கு? ஒரே போர்!'' என்றாள் அருணா.

''போருக்கு என்னடி, தமிழ்?'' என்று கேட்டாள் பொற்கொடி.

''சுவர்ணலதா என்ற பெயரைப் பொற்கொடி என்று மாற்றி வைத்துக் கொண்டுவிட்ட உனக்கே அதற்குத் தமிழ் என்னவென்று தெரியாதபோது, எனக்கு எங்கே தெரியப் போகிறது?'' என்றாள் அருணா.

அப்போது, ''உன்னை யாரோ 'போ'னில் கூப்பிடுகிறார்களாம்!'' என்று சொல்லிக்கொண்டே, உள்ளேயிருந்து வந்தாள் உமா.

''என்னையா?'' என்று கேட்டுக்கொண்டே அருணா சென்றதும், ''அது யாரடி, அது? அவளை எப்போது பார்த்தாலும் போனில் கூப்பிட்டுக்கொண்டிருப்பது?'' என்று கேட்டாள் பொற்கொடி, தன் குரலைத் தாழ்த்தி.

''அவன்தான், 'சுந்தரி, சுந்தரி' என்று சொல்லி, இங்கே உள்ளவர்களை ஏமாற்றிக்கொண்டிருக்கிறானே, அந்த சுந்தர்!'' என்றாள் உமா, தானும் தன் குரலைத் தாழ்த்தி.

''அந்த ரகசியம் உனக்கு எப்படித் தெரிந்தது?''

''எனக்குத் தெரியாத ரகசியமா, இங்கே? போடி!'' என்றாள் அவள், பெருமிதத்துடன்.

''ம், சரியான சமயத்தில்தான் அவன் அவளைக் கூப்பிட்டிருக்கிறான்; இனி போர் ஜாலியாகிவிடும், அவளுக்கு!'' என்றாள், இவள் பெருமூச்சுடன்.

அந்தச் சமயத்தில் அருணா திரும்பி வர, ''என்னடி, சுந்தரிதானே?'' என்றாள் உமா, ஏதும் அறியாதவள்போல.

''ஆமாம், அவளைப் பார்க்க இன்று யாரோ ஒரு மாப்பிள்ளை பம்பாயிலிருந்து வருகிறானாம்; அவனை நீயும்

வந்து பார் என்கிறாள் அவள், நான் எங்கே போவது? எனக்கோ இங்கேயே படுத்துக்கொண்டுவிட்டால் தேவலை என்று தோன்றுகிறது!'' என்றாள் அவள், அப்படியே துவண்டு தொப்பென்று கீழே விழுந்துவிடுபவளைப் போல.

''சீச்சீ, அப்படியெல்லாம் செய்து விடாதேயடி! போ, போ! அவள் உனக்காக அங்கே காத்துக் கொண்டிருக்கப் போகிறாள்? போடி,போ!'' என்றாள் பொற்கொடி.

''சரி, நான் வருகிறேன்!'' என்று அருணா புறப்பட்டாள். அவள் தலை மறைந்ததுதான் தாமதம், அதுவரை அடக்கி வைத்திருந்த சிரிப்பை அடக்க முடியாமல், அவர்கள் இருவரும் விழுந்து விழுந்து சிரித்தார்கள்!

அருணாவைப் பற்றிய அந்த வம்பில்தான் அவர்களுக்கு என்ன ஈடுபாடு, என்ன ஈடுபாடு!

உமா சொன்னது உண்மைதான்; பரீட்சை எப்போது முடியும், எப்போது முடியும் என்று காத்துக்கொண்டிருந்த சுந்தர்தான் அன்று மாலை 'மியூஸிய'த்துக்கு வந்து தன்னைச் சந்திக்குமாறு அருணாவைப் 'போ'னில் அழைத்திருந்தான். அவனுடைய அழைப்பை ஏற்றுக்கொண்டு அங்கே சென்ற அருணாவைக் கண்டதும், ''உனக்கு நான் தொந்தரவு கொடுத்துவிட்டேனோ?'' என்றான் சுந்தர், படுபவ்வியமாக.

''அதெல்லாம் ஒன்றுமில்லை. எனக்கும் கொஞ்ச நேரம் உங்களுடன் இருந்து பொழுது போக்கினால் தேவலை என்று தோன்றிற்று; அந்தச் சமயம் பார்த்துத்தான் நீங்களும் 'போன்' செய்திருந்தீர்கள்!'' என்ற அருணா, ''ஆமாம், போயும் போயும் என்னை 'மியூஸிய'த்தில் வைத்துத்தானா பார்க்கத் தோன்றிற்று, உங்களுக்கு?'' என்று கேட்டாள் சிரித்துக் கொண்டே.

''வேறு எப்படித் தோன்றும் எனக்கு? அத்தகைய அபூர்வ பொருளாய்த்தானே இருக்கிறாய், நீ?-அடேயப்பா, உன்னைப் பார்த்து எத்தனை நாட்களாகிவிட்டன? அங்கே

உனக்கு பட்டப் பரீட்சையென்றால், இங்கே எனக்கு நீ காதல் பரீட்சையல்லவா வைத்துவிடுகிறாய்?''

''அதில் பரிபூரண வெற்றியடைந்த உங்களுக்கு என் மனப்பூர்வமான வாழ்த்துக்கள்! எங்கே நீங்கள் பொறுமை இழந்து கலாசாலை வாசலில் வந்து நின்று விடுவீர்களோ என்று நான் ஒவ்வொரு நாளும் பயந்துக் கொண்டிருந்தேன்!''

''அந்தக் கவலை உனக்கு வேண்டாம்; அப்படிப்பட்ட தர்மசங்கடத்துக்கு என்றுமே உன்னை நான் உள்ளாக்க மாட்டேன்!''

''யார் கண்டது? தனக்கிருந்த அத்தனை தடைகளையும் மீறி ஜூலியட்டைத் தேடிக்கொண்டு ரோமியோ வந்துவிட்டதைப் போல நீங்களும் வந்துவிட்டால்?''

''காதலில் தோல்வியடைந்த அவர்களை ஏன் நீ இப்போது நினைக்கிறாய்?-இப்படி உட்கார்!'' என்று அங்கிருந்த ஒரு மரத்தின் அடியைக் காட்டினான் சுந்தர்.

''அவர்கள்தானே மக்கள் மனத்தில் நிற்கிறார்கள்?'' என்று சொல்லிக்கொண்டே, அவன் காட்டிய இடத்தில் உட்கார்ந்தாள் அருணா.

''உண்மைதான்; காதலைப் பொறுத்தவரை வெற்றி யடைந்தவர்கள் ஏனோ மக்கள் மனத்தை விட்டு மறைந்து விடுகிறார்கள்!'' என்று சொல்லிக்கொண்டே, சுந்தரும் அவளுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து, அதுவரை தன் தோளில் தொங்கியவாறு பாடிக் கொண்டிருந்த 'டிரான்சிஸ்டர் ரேடியோ'வை எடுத்து அவளுக்குப் பக்கத்தில் வைத்தான்.

''இதை எப்போது வாங்கினீர்கள்?'' என்று கேட்டாள் அவள்.

''வாங்குவதாவது! அப்பா இதை எங்கிருந்தோ கடத்திக் கொண்டு வந்தார்; நான் அவரிடமிருந்து கடத்திக் கொண்டு வந்துவிட்டேன்!''

''உங்கள் வியாபாரமே கடத்தல் வியாபாரம்தான் போலிருக்கிறது?''

''அதற்காக உன்னையும் நான் கடத்திவிடுவேன் என்று நீ பயந்துவிடாதே!''

அவள் சிரித்தாள்; அவனும் சிரித்தான்.

அவ்வளவுதான்; அதுவரை அவர்களுக்குச் சற்றுத் தூரத்தில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்த யாரோ இருவர், அவசரம் அவசரமாக எழுந்து வந்து அவர்களுக்குப் பக்கத்தில் உட்கார்ந்தார்கள்!

''என்ன அவசரமோ?'' என்றாள் அருணா, சுந்தரை ஒரு கண்ணாலும், அவர்களை இன்னொரு கண்ணாலும் பார்த்துக் கொண்டே.

''ஒன்றுமில்லை; ஓர் ஆணும் பெண்ணும் சேர்ந்தாற் போல் எங்கேயாவது இருந்துவிட்டால் போதும், அதுவே 'மியூஸிய'மாகிவிடுகிறது அவர்களுக்கு!'' என்றான் சுந்தர்.

''நான் அப்படி நினைக்கவில்லை; ஒரு வேளை இந்த ரேடியோ அதற்குக் காரணமாயிருக்கலாம்!'' என்றாள் அவள்.

''உனக்கு ஏன் சந்தேகம்? இதோ நிறுத்திப் பார்த்தால் போச்சு!'' என்று ரேடியோவை நிறுத்தினான் அவன்.

ஒன்று, இரண்டு, மூன்று என்று ஒன்பது நிமிடங்களுக்கு மேல் ஆயிற்று; அவர்கள் இருந்த இடத்தை விட்டு எழுந்திருக்கவில்லை!

''சரி, நாம் எழுந்து போய்விடுவோமா?'' என்று எழுந்தாள் அவள்.

''அதுதான் தவறு; ஓடுபவர்களைக் கண்டால் அவர்கள் துரத்துவதை விடமாட்டார்கள்-நீ இங்கேயே உட்கார்!'' என்று அவன் அவளை உட்கார வைத்துவிட்டு, மீண்டும் ரேடியோவைத் திருப்பி வைத்தான்.

''உங்களுக்குக் கூட இலங்கை வானொலி நிலையத்தாரைத்தான் ரொம்பப் பிடிக்கும் போலிருக்கிறது?'' என்றாள் அவள்.

''ஆம்; அதற்காக என்னுடைய தரத்தைக் குறைத்து மதிப்பிட்டுவிடாதே, நீ!'' என்றான் அவன்.

அருணா சிரித்தாள்; சுந்தரும் சிரித்துக்கொண்டே, ''இப் போது நீ எனக்கு ஓர் உதவி செய்ய வேண்டுமே?'' என்றான்.

''என்ன உதவி?'' என்று கேட்டாள் அவள்.

''ஒன்றுமில்லை; கல்கத்தாவிலிருக்கும் என் நண்பன் ஒருவன் எனக்காக ரசகுல்லா வாங்கி அனுப்பியிருக்கிறான்- அதைத் தின்பதில்தான் நீயும் எனக்கு உதவ வேண்டும் என்கிறேன், நான்!'' என்று சொல்லிக்கொண்டே, கையோடு கொண்டு வந்திருந்த டப்பியைத் திறந்து அவளுக்கு எதிர்த்தாற்போல் வைத்தான் அவன்.

அதில் ஒன்றை எடுத்துச் சுவைத்துக்கொண்டே, ''இந்த ரசகுல்லாவுக்காகக் கல்கத்தாவுக்கே குடியேறிவிடலாம் போலிருக்கிறதே?'' என்றாள் அவள்.

''அதெற்கென்ன? அப்படியே போய்விட்டால் போச்சு, கல்யாணமானதும்!'' என்றான் அவன்.

''அவ்வளவு சுலபமாக நடந்துவிடுமா, நம் கல்யாணம்?''

''ஏன், நடக்காதா?''

''எப்படி நடக்கும்? 'பெரியோர்கள் பார்த்து நிச்சயித்த கல்யாண'மாயிருந்தால் சுலபமாக நடக்கும்; இதுதான் 'சிறியோர்கள் பார்த்து நிச்சயித்த கல்யாண'மாயிருக்கிறதே?''

''அந்தக் கல்யாணத்துக்கு நீ 'வில்லி'யாயிருந்தால், இந்தக் கல்யாணத்துக்கு உன் அப்பா 'வில்லனா'யிருப்பார் போலிருக்கிறது?'' என்றான் அவன் சிரித்துக் கொண்டே.

''அப்படித்தான் நினைக்கிறேன் நான்!'' என்றாள் அவள், ஆழ்ந்த சிந்தனையுடன்.

''அதனாலென்ன, பதினெட்டாவது வயதை நீ தாண்டி விட்டால் போதும்-நம்முடைய கல்யாணத்தை நாமே நடத்திக் கொண்டு விடலாம்!'' என்றான் அவன், தான் ஒரு

நடத்திக் கொண்டு விடலாம்!'' என்றான் அவன், தான் ஒரு சட்டக் கல்லூரி மாணவன் என்பதைச் சற்றே அவளுக்கு நினைவுபடுத்தி!

''அந்தத் தைரியம் உங்களுக்கு இருந்தால் எனக்கும் இருக்கும்!'' என்றாள் அவள், தரையைக் கீறிக்கொண்டே.

''அப்புறம் என்ன? நாம் ரோமியோ-ஜூலியட்டாக வேண்டாம்; லைலா-மஜ்னுவாக வேண்டாம்; அம்பிகாபதி-அமராவதியாக வேண்டாம்; பிரின்ஸ் ஆப் வேல்ஸ் தம்பதிகள் ஆகிவிடலாம்!'' என்றான் அவன், அவள் கீறிய கோட்டை அழித்துக்கொண்டே!

# 7. ''ஐயா கூப்பிடுகிறார்!''

விஷயம் எதுவாயிருந்தாலும் அதைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொள்வதில் எப்பொழுதுமே வல்லவன், மோகன். எனவே, மணி லீவு எடுத்துக் கொண்டதும் அவனுக்கு ஒருவிதத்தில் நல்லதாய்ப் போயிற்று. அந்த லீவைக் காரணமாக வைத்துக்கொண்டு, ''பார்த்தாயா, பாமா? அவனுக்கே நம்முடைய முகத்தில் விழிக்க அவ்வளவு சீக்கிரம் அவன் மனம் இடம் கொடுக்கவில்லை போலிருக்கிறது; அதனால்தான் லீவு எடுத்துக் கொண்டு விட்டான்!'' என்று அவன் அவளிடம் கரடி விட்டான்; அந்தக் கரடியை அவளும் நம்பினாள்-நம்பாமல் என்ன செய்ய முடியும், தன்னுடைய அழகில் தனக்கே இருந்த ஒரு நம்பிக்கையை அது மேலும் கொஞ்சம் உறுதிப்படுத்திக் கொள்ள உதவும்போது?

இந்த நிலையில் ஒரு நாள் அவளிடம் வந்து, ''ஐயா, கூப்பிடுகிறார்!'' என்றான் பியூன் பிச்சையா.

''என்னையா?'' என்று திடுக்கிட்டுக் கேட்டாள் பாமா.

''ஆமாம், உங்களைத்தான்!'' என்றான் அவன்.

வந்ததும் வராததுமாக ஐயா தன்னை ஏன் கூப்பிட வேண்டும்?-தனக்குத் தெரிந்து வேலையில் தான் எந்தவிதமான தவறும் செய்யவில்லை-அப்படியிருக்க அவர் தன்னை அழைக்கக் காரணம்?

''ஏன் பிச்சையா, எதற்காகக் கூப்பிடுகிறார்?''

''அதெல்லாம் எனக்கு எப்படி அம்மா, தெரியும்?-கூப்பிடச் சொன்னார், கூப்பிடுகிறேன்-அவ்வளவுதான் தெரியும், எனக்கு!''

''சரி, இதோ வந்துவிட்டேன் என்று சொல்!'' என்று அதுவரைதான் பார்த்துக்கொண்டிருந்த 'பைலை'த் தூக்கித் தொப்பென்று கீழே போட்டுவிட்டு அவள் எழுந்தாள்; பியூன் பிச்சையா அந்த இடத்தை விட்டு நகர்ந்தான்.

'அடுத்தாற்போல் அவன் மோகனிடம் போவானோ?' என்று நினைத்த பாமா, அங்கேயே நின்றாள்; அவள் நினைத்தது நினைத்தபடியே நடந்தது-பிச்சையா மோகனை நோக்கித்தான் போய்க்கொண்டிருந்தான்.

''சரி, நடப்பது நடக்கட்டும்!'' என்று துணிந்து, பரந்தாமனின் அறைக்குள் நுழைந்தாள் அவள்.

''வாருங்கள்; உட்காருங்கள்!'' என்று தனக்கு எதிர்த்தாற் போல் போடப்பட்டிருந்த நாற்காலிகளில் ஒன்றைக் காட்டினார் பரந்தாமன்.

அவள் உட்காரவில்லை; ''சொல்லுங்கள்?'' என்றாள் நின்று கொண்டே.

''மனிதாபிமானத்துக்குப் புறம்பான இந்த மரியாதைகள் யாரிடமிருந்து கிடைத்தாலும் அதை நான் ஏற்றுக் கொள்வதில்லை; முதலில் நீங்கள் உட்காருங்கள்!'' என்றார் அவர்.

அவள் உட்கார்ந்தாள்; அவர் சொன்னார்:

''பொதுவாக இங்கே வேலை பார்ப்பவர்களின் சொந்த வாழ்க்கையில் நான் குறுக்கிடுவதேயில்லை; அதற்கு

விரோதமாக என்னை நீங்கள் குறுக்கிட வைத்திருப்பது குறித்து நான் வருந்துகிறேன்!''

'வருந்துகிறேன்!'-இந்த வார்த்தையை அடிக்கடி அர்த்தமில்லாமல் பயன்படுத்தக் கூடியவர் அல்ல, அவர். எப்பொழுதாவது ஒரு சமயம்தான் உபயோகிப்பார்; அப்படி உபயோகிக்கும்போது, அதில் அர்த்தமில்லாமலும் போகாது. அத்தகையவர் இன்று தன்னிடம் 'வருந்துகிறேன்!'' என்று சொல்கிறார் என்றால், அவர் வருந்தக்கூடிய வகையில் தான் ஏதாவது தவறு செய்திருக்கத்தானே வேண்டும்!-அந்தத் தவறு ஒரு வேளை 'அது'வாயிருக்குமோ?

இப்படி நினைத்த பாமா, தலை குனிந்துச் சொன்னாள்:

''அப்படியொன்றும் இல்லையே?''

''இருக்கலாம்; அப்படியொன்றும் இல்லாமலும் இருக்கலாம். ஆனால் மிஸ்டர் மோகனிடம் நீங்கள் கொண்டுள்ள தொடர்பு...''

அவ்வளவுதான்; ''யார் சொன்னது, உங்களிடம்? அந்த மணி சொன்னாரா?'' என்று தன்னையும் அறியாமல் இரைந்தாள் பாமா.

''இரையாதீர்கள்; அதனால் உங்களுக்குத்தான் தீமை! அதிலும் மிஸ்டர் மணி இருக்கிறாரே, அவர் எதையும் யாரிடமும் வாயால் சொல்லிக்கொண்டிருப்பவர் அல்ல; தனக்கு ஒரு விஷயம் பிடிக்கவில்லையென்றால், அதற்காக உடனே கையை நீட்டிவிடுவதுதான் அவருடைய வழக்கம்!''

அப்போதும் ஆத்திரம் அடங்கவில்லை, அவளுக்கு- ''அவர் இல்லையென்றால் அந்தப் பிச்சையா ஏதாவது உளறி யிருக்க வேண்டும்!'' என்றாள், கண்களில் தீப்பொறி பறக்க.

''அவர்கள் இருவரைத் தவிர வேறு யாருக்கும் உங்களைப் பற்றித் தெரியாதென்றா நினைத்துக்கொண்டிருக் கிறீர்கள்? தவறு பாமா, தவறு! இம்மாதிரி விஷயங்கள் காற்றைவிட வேகமாகப் பரவக்கூடியவை; அதிலும் நம்மவர்களுக்கு அவற்றைப் பரப்புவதில் எப்போதுமே ஒரு

தனிச் சுவை உண்டு!-அதிருக்கட்டும், நான் சொல்ல வந்தது என்னவென்றால், மிஸ்டர் மோகனிடம் நீங்கள் கொண்டுள்ள தொடர்பு இயற்கையானது; வரவேற்கக் கூடியது; வாழ்த்தக் கூடியது. அதை யார் வெறுத்தாலும் நான் வெறுக்க மாட்டேன். ஆனால், வளரவேண்டிய இடம் இதுவல்ல; அதை மட்டும் ஞாபகத்தில் வைத்துக் கொண்டால் போதும்-நீங்கள் போகலாம்!'' என்று சொல்லி அவளை அனுப்பி விட்டுத் தம் மேஜையின்மேல் இருந்த மணியை 'டங்'கென்று அடித்தார்; மோகன் வந்து நின்றான். பரந்தாமனும் சட்டென்று எழுந்து நின்று, ''மனப்பூர்வமான வாழ்த்துக்கள், உங்களுக்கும் புதிதாகக் கிடைத்திருக்கும் உங்கள் காதலிக்கும்!'' என்று அவன் கையைப் பிடித்துக் குலுக்கினார்.

''நன்றி; ஆனால் பழைய காதலி யாரும் இல்லையே சார், எனக்கு!'' என்றான் அவன், அசட்டுச் சிரிப்புடன்.

''மகிழ்ச்சி! ஆனால் உங்கள் காதல் வளர வேண்டிய இடம் இதுவல்ல; அதை மட்டும் ஞாபகத்தில் வைத்துக் கொண்டால் போதும்-நீங்கள் போகலாம்!'' என்றார் அவர்.

ஆம், இருவருக்கும் ஒரே வார்த்தைதான்!-அதற்கு மேல் எதற்கு என்று அவர் நினைத்தாரோ என்னமோ, தான் 'நல்லவ'ரா யிருந்ததால்!

அன்று முழுவதும் அவர் சொன்ன அந்த ஒரு வார்த்தை தன்னைப் படாத பாடு படுத்தி வைக்க, எப்படியோ காலத்தைக் கழித்துவிட்டு வெளியே வந்தாள் பாமா; மோகன் அவளுக்குப் பின்னால் வந்து, ''என்மேல் கோபமா?'' என்றான் மெல்ல.

''ஆமாம், போங்கள்! உங்களால்தான் எனக்கு இந்த வம்பெல்லாம்!'' என்றாள் அவள், வெடுக்கென்று.

''இந்த ஒரு சோதனைக்கா இப்படி அரண்டு விட்டாய்? இன்னும் எத்தனையோ சோதனைகள் இருக்குமே, நமக்கு?''

''இருக்கலாம்; ஆனால் அது மானத்தை வாங்கக் கூடியதாயிருக்கக்கூடாது, பாருங்கள்!'' என்றாள் அவள்.

''யார் இப்போது மானத்தை வாங்கிவிட்டார்கள்? மிஸ்டர் பரந்தாமன் நம்மைக் கூப்பிட்டுத் தம்முடைய வாழ்த்துக் களையல்லவா தெரிவித்திருக்கிறார்?'' என்றான் அவன்.

''என்ன வாழ்த்தோ? எனக்கு ஒன்றுமே பிடிக்கவில்லை, போங்கள்!''

இப்படிச் சொல்லிவிட்டு அவள் நடந்தாள்; அவன் தொடர்ந்து, ''என்னையாவது பிடிக்கிறதா, அதுவும் இல்லையா?'' என்றான் சிரித்துக் கொண்டே.

அவ்வளவுதான்; அவளும் சிரித்துவிட்டாள்!-அது போதாதா, அவனுக்கு?-அவளுடன் 'வெற்றிநடை' போட ஆரம்பித்துவிட்டான்.

# 8. அபூர்வ சகோதரிகள்

அன்றிரவு பாமா படுக்கும்போது, ''ஏண்டி திருடி, 'எதுவாயிருந்தாலும் என்னிடம் சொல்லு, என்னிடம் சொல்லு' என்று தானே உன்னிடம் சொல்லியிருந்தேன்? சொன்னாயா, என்னிடம்?'' என்றாள் ராதா, வழக்கம்போல அவளுக்குப் பக்கத்தில் தன்னுடைய படுக்கையையும் விரித்துக் கொண்டே.

எதிர்பாராத இந்தக் கேள்வி பாமாவைத் தூக்கிவாரிப் போட்டது-எதற்காகத் தன்னைத் 'திருடி!' என்று அழைத்து இப்படிக் கேட்கிறாள், தன் அக்கா? ஒரு வேளை இவளுக்கும் 'அது' தெரிந்துவிட்டிருக்குமோ?-எப்படித் தெரிந்திருக்க முடியும்? இவளுக்காகத்தானே அன்றிரவு அந்தப் புண்ணியவானுடன் 'ஸ்கூட்ட'ரில் வந்தபோது கூட நான் அந்தத் தெரு முனையிலேயே இறங்கி, அங்கிருந்து நடந்தே வீடு வந்து சேர்ந்தேன். இங்கே இருந்த அக்கா, அங்கே இறங்கிய என்னை எப்படிப் பார்த்திருக்க முடியும்?-ஒன்றும் புரியவில்லை அவளுக்கு. எனவே,

''எதைப் பற்றிக் கேட்கிறாய், அக்கா?'' என்று அவளையே மெல்ல விசாரித்தாள்.

''போடி, போ! உனக்கென்று ஒருவனை நீ தேடிப் பிடித்திருக்கிறாயாமே, அதை நீ ஏன் என்னிடம் சொல்ல வில்லை?'' என்றாள் அவள்.

அவ்வளவுதான்; விஷயம் புரிந்துவிட்டது பாமாவுக்கு. 'இனி மறைப்பதில் பயனில்லை' என்று நினைத்த அவள், ''அதை நான் உன்னிடம் சொல்லலாமா, அக்கா?'' என்றாள் ராதாவின் தோள்கள் இரண்டையும் தன் கைகளால் பற்றித் தொங்கிக் கொண்டே.

''என்னைத் தவிர உனக்கு வேறு யார் இருக்கிறார்கள் சொல்ல? நான்தானே உனக்கு அப்பா, அம்மா எல்லாம்?'' என்றாள் ராதா.

இதைச் சொல்லும்போது, குளமான தன் கண்களை மறைப்பதற்காக அவள் கீழே குனிந்தாள். அப்போது அவளுடைய கண்களிலிருந்து உருண்டு திரண்டு வந்த இரண்டு கண்ணீர்த் துளிகள் பாமாவின் கைகளின்மேல் பட்டுச் சிதறின!

''ஐயோ, அக்கா! அதற்காக நீ அழுகிறாயா, என்ன?-அழாதே அக்கா! சொன்னால் மரியாதைக் குறைவாக இருக்குமே என்றுதான் சொல்லவில்லை. என்ன இருந்தாலும் உன்னைவிடச் சிறியவள் இல்லையா, நான்?'' என்றாள் பாமா, பதறிப்போய்.

''போடி பைத்தியமே! சிறியவளாவது, பெரியவளாவது? 'என் மனம் போல் நீ; உன் மனம் போல் நான்!' என்று இருந்தால் போதாதா, நாம்? நமக்குள்ளே மரியாதை என்னத்துக்கு, மண்ணாங்கட்டி என்னத்துக்கு?'' என்றாள் ராதா.

எல்லாவற்றையும் கடந்துவிட்ட அவள் அன்பு பாமாவை என்ன செய்ததோ என்னமோ, ராதாவை அப்படியே சேர்த்துக் கட்டிக் கொண்டு, ''என்னுடைய தவறு இப்போதுதான் எனக்குத் தெரிகிறது, அக்கா! நீ எனக்கு

இப்போதுதான் எனக்குத் தெரிகிறது, அக்கா! நீ எனக்கு அப்பாவும் அம்மாவும் மட்டுமல்ல; தெய்வம்!'' என்றாள் நெஞ்சு நெக்குருக.

ராதா அவள் கன்னத்தைத் தன் கன்னத்தோடு ஒட்டவைத்துக் கொண்டு, ''ஏண்டி, பாமா! அந்தப் பிள்ளையாண்டானை ஒரு நாள் இங்கே அழைத்துவர முடியாதா, உன்னால்?'' என்றாள் மெல்ல.

''அவர் என்னமோ, 'வருகிறேன், வருகிறேன்!' என்றுதான் சொல்லிக்கொண்டிருக்கிறார்; நான்தான் அவரை இங்கே வரவேண்டாமென்று தடுத்துக்கொண்டிருக்கிறேன்!''

''அதுதான் தப்பு என்கிறார்கள் வாத்தியாரம்மா!''

''அவர்களுக்கும் தெரியுமா, அது?''

''நல்ல கேள்வி கேட்டாய், போ! அவர்கள்தான் அன்றிரவு உன்னையும் அந்தப் பிள்ளையாண்டானையும் சேர்ந்தாற்போல் பாத்துவிட்டு வந்து என்னிடம் சொன்னார்கள்!''

''உண்மையாகவா, அக்கா?''

''ஆமாண்டி, ஆமாம்! இரவுச் சாப்பாட்டுக்குப் பிறகு அவர்கள் ஐயாவுடன் சென்று கொஞ்ச நேரம் கடற்கரையில் உலாவிவிட்டு வருவதில்லையா? அப்போதுதான் உங்களைப் பார்த்தார்களாம். நீ வானொலி நிலையத்துக்கு எதிர்த்தாற் போலேயே வண்டியை நிறுத்தச் சொல்லி இறங்கி, அவரைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே வந்து விட்டாயாம்!''

''அடக் கடவுளே, என்னை யாரும் பார்க்கவில்லை என்றல்லவா இன்றுவரை நினைத்துக்கொண்டிருக்கிறேன், நான்?''

''அதனாலென்னடி, அவர்கள் உங்களைப் பார்த்ததும் ஒரு விதத்தில் நல்லதாய்ப் போயிற்று, நமக்கு!''

''ஏனாம்?''

''அவர்கள் என்ன சொல்கிறார்கள், தெரியுமா?-'நீ அவளை அப்படியே விட்டுவிடாதே! அவள் பயந்து பயந்து அவனுடன் பழகுவது அவளுக்கும் நல்லதல்ல, அவனுக்கும் நல்லதல்ல; இருவரும் உனக்குத் தெரிந்தே பழகட்டும்-அதுதான் உனக்கும் நல்லது; அவர்களுக்கும் நல்லது' என்று சொல்கிறார்கள்!''

''போ அக்கா, நீ புளுகுகிறாய்!''

''வேண்டுமானால் நீயே கேட்டுப் பாரேன்?''

''ஊஹூம்; நான் கேட்க மாட்டேன்!''

''கேட்காவிட்டால் அவர்கள் உன்னை விட்டுவிடப் போகிறார்களா, என்ன? அவர்களே ஒரு நாள் 'எங்கே அவன்?' என்று உன்னைக் கேட்டுவிடுவார்கள்!''

''அவ்வளவுதான்; ஓடியே போய்விடுவேனாக்கும், நான்!''

''அப்படி ஓடிக் கீடி வைக்கப் போகிறாய் என்றுதான் அவர்கள் எனக்குத் தெரிந்து உங்களைப் பழகச் சொல்கிறார்கள்!''

''அவர்கள் சொல்வது சரி; ஆனால் உலகம் ஒப்புக்கொள்ள வேண்டுமே, அதை!''

''நமக்கு அவர்கள்தானேடி, உலகம்?-உண்ணும் சோறு அவர்களுடையது; உடுத்தும் உடை அவர்களுடையது; உறங்கும் இடம் அவர்களுடையது-இரண்டு வேளை சமைத்துப் போடுவதற்காக இத்தனையையும் உதவி வரும் 'அந்த உலக'த்தை விட்டால் நமக்கு 'வேறு உலகம்' ஏது?''

இந்தச் சமயத்தில் ''ராதா, ராதா!'' என்று 'அந்த உலக'மே அங்கு வந்து குரல் கொடுக்கவே, ''இதோ வந்து விட்டேன், அம்மா!'' என்று பதிலுக்குக் குரல் கொடுத்துக் கொண்டே எழுந்து வெளியே வந்தாள் ராதா.

''பாமா வந்துவிட்டாளா?''

''வந்துவிட்டாள்!''

''அவளையும் அழைத்துக் கொண்டு வந்து நீ எங்கள் வீட்டில் வந்து படுத்துக்கொள்!''

''ஏம்மா, அவர் இன்னும் வரவில்லையா?''

''வந்து விட்டார்! விமானத்தில் வெளியூர் செல்லும் நண்பர் ஒருவரை வழியனுப்பி வைப்பதற்காக அவர் இப்போது மீனம்பாக்கம் போகவேண்டும் என்கிறார். மேலே படித்துக் கொண்டிருந்த பாலுவோ அங்கேயே படுத்துத் தூங்கிவிட்டான். அவனைத் தனியாக விட்டுவிட்டு நான் எப்படிப் போவேன், அவருடன்?''

''அவனுக்காக நீங்கள் நிற்பானேன்? போய்விட்டு வாருங்கள் அம்மா, நாங்கள் போய் அவனுக்குத் துணையாகப் படுத்துக்கொள்கிறோம்!''

'கடவுள்' மறைந்தார்; 'பக்தை' ராதா, தங்கை பாமாவை அழைத்துக் கொண்டு, தான் இருந்த வீட்டுக் கதவையும் இழுத்துப் பூட்டிக்கொண்டு, தம்பி பாலு தூங்கிக் கொண்டிருந்த தன் 'இறைவனின் உறைவிட'த்திற்குச் சென்றாள்.

அந்த 'இறைவனின் உறைவிடம்' வேறு எங்கும் இல்லை; அவள் இருந்த வீட்டுக்கு முன்னாலேயே இருந்தது. அந்த உறைவிடத்தில் இருந்த 'ஐயன் சொக்கலிங்கனார்' சென்னை அரசாங்கக் காரியதரிசிகளில் ஒருவராக பணியாற்றி வந்தார்; 'அம்மை மீனாட்சி'யோ ராணி மேரி கல்லூரியின் பேராசிரியைகளில் ஒருத்தியாகப் பணியாற்றி வந்தாள். 'புத்திர பாக்கியம்' எதுவும் இல்லாத அவர்களுக்குப் 'பொங்கிப் போடும் பாக்கிய'த்தைப் பெற்றிருந்தாள் ராதா.

அந்த ஒரு பாக்கியத்துக்காக ஏழெட்டு ஆண்டுகளுக்கு முன்னால் எஜமானி-வேலைக்காரி என்று அவர்களுக்கு இடையே ஏற்பட்டிருந்த தொடர்புதான் இன்று இந்த நிலைக்கு அவர்களைக் கொண்டு வந்திருந்தது-அபூர்வ சகோதரிகளுக்கு ஏற்ற அபூர்வ எஜமானிதான் இல்லையா?

# 9. ஒரு விண்ணப்பம்

மோகனுக்காகத் தான் எடுத்துக்கொண்ட லீவைப் பெரும்பாலும் ஓட்டல் அறையிலேயே கழித்துவிட்ட மணி, வேலைக்குப் போவதற்கு முன்னால் அவனை ஒரு நாள் வீட்டில் பார்த்துத் தன்னுடைய வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்ள வேண்டுமென்று நினைத்தான். அதற்காக அவன் தன்னைத் தயார் செய்துகொண்டிருந்தபோது மோகனே வந்து எதிர்த்தாற்போல் நின்றால், அவனுக்கு எப்படி இருக்கும்?-''ஏண்டா மோகன், நிஜமாக நீதானா?'' என்றான், அவனை மேலும் கீழுமாகப் பார்த்துக் கொண்டே.

''நானேதான்! அதில் என்ன ஆச்சரியம் உனக்கு?'' என்றான் அவன், குனிந்த தலை குனிந்தபடி.

''கீழே பார்க்காதே. மேலே பார்!'' என்று அவன் தலையைத் தூக்கி நிறுத்திவிட்டு, ''இப்போது நான் எங்கே புறப்பட்டுக் கொண்டிருந்தேன் தெரியுமா? உன்னைப் பார்க்கத்தான்! அதற்குள் நீயே வந்து இங்கே நின்றால் எனக்கு ஆச்சரியமாயிருக்காதா?''

''அதைவிட ஆச்சரியமாயிருக்கிறது, அன்று நான் உன்னிடம் அவ்வளவு மோசமாக நடந்துகொண்டும் ஏதுமே நடக்காதது போல் நீ என்னிடம் பேசுவதும், பழகுவதும்!''

''அப்படி என்ன நடந்துவிட்டது, நமக்குள்ளே? ஒன்றுமில்லையே, உட்கார். காபி கொண்டு வரச் சொல்கிறேன்!'' என்றுஅவனை உட்கார வைத்துவிட்டு, ''சங்கர், சங்கர்!'' என்று குரல் கொடுத்தான் மணி.

அதுவரை படித்துக் கொண்டிருந்த புத்தகத்தை அப்படியே மூடி எடுத்துக்கொண்டு வந்த சங்கர், ''என்ன சார்! என்ன வேண்டும், உங்களுக்கு?'' என்று கேட்டான்.

''இரண்டு கப் காபி!''

''காதல் காபியா? காதல் இல்லாத காபியா?'' என்று கேட்டான் சங்கர், சிரித்துக் கொண்டே.

''அது ஒன்று; இது ஒன்று!'' என்றான் மணியும் சிரித்துக் கொண்டே.

''சரி!'' என்றுஅவன் கையிலிருந்த புத்தகத்தை அங்கிருந்த கட்டிலின் மேல் வைத்துவிட்டுச் செல்ல, ''ஏண்டா, சங்கர்! என்ன புத்தகம், இது?'' என்று கேட்டான் மணி, அதைக் கையால் தொட்டுப் பார்க்கக் கூட விரும்பாதவன் போல.

''காதல் இல்லாத புத்தகம்தான், சார்! அது இருந்தால் அதை நான் உங்களுக்கு முன்னால் கொண்டு வந்து வைத்திருப்பேனா? சுட்டுவிட மாட்டீர்களா, சுட்டு!'' என்றான் அவன், கீழே இறங்கிக் கொண்டே.

அவன் இறங்குவதைப் பார்த்துக்கொண்டே இருந்த மோகனுக்கு என்ன தோன்றிற்றோ என்னமோ, ''எங்கே போனாலும் உனக்கென்று ஓர் உதவியாளன் ஊதியம் இல்லாமலே வந்து சேர்ந்துவிடுகிறான், இல்லையா?'' என்றான், ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தவனாக.

''ஆம்; அந்த விஷயத்தில் மட்டும் எனக்கு எப்போதுமே சிரமம் ஏற்பட்டதில்லை!'' என்றான் மணி.

''உன்னிடம் ஏதோ ஒரு வசீகர சக்தி இருக்கிறது; அதுதான் யாரையாவது இழுத்துக்கொண்டு வந்துஉன்னிடம் விட்டுவிடுகிறது!''

''இருக்கலாம்; ஆனால் சில சமயம் அது பெண்களையும் இழுத்துக்கொண்டு வந்து என்னிடம் விட்டுவிடும்போதுதான் எனக்குத் தர்மசங்கடமாகப் போய்விடுகிறது!:'

மோகன் சிரித்தான்; சிரித்துவிட்டுக் கேட்டான்:

''இவன் ஒரு மாஜி கேடி என்பது தெரியுமா, உனக்கு?''

மணி சென்னான்; சிரிக்காமலே சொன்னான்:

''தெரியும்; தெரிந்தே இவனுக்கு நான் இங்கே வேலை வாங்கிக் கொடுத்திருக்கிறேன்!''

''இவனால் உனக்கு எந்தவிதமான தொல்லையும் இல்லையா?''

''இல்லை; என்னால்தான் இவனுக்குத் தொல்லை!''

''உன்னால் இவனுக்குத் தொல்லையா!-இருக்காதே? அறையைக் கூட்டுவது முதல், கூஜாவில் தண்ணீர் கொண்டு வந்து வைத்துக்கொள்வதுவரை உன்னுடைய வேலைகளை யெல்லாம் நீயே செய்துகொள்வதல்லவா உன் வழக்கம்?''

''அந்த வழக்கத்தை இன்னும் நான் கைவிடவில்லை. ஆனால் அதற்குப் பதிலாக இன்னொரு வேலை வைத்திருக்கிறேன் நான், இவனுக்கு!''

''அது என்ன வேலை?''

''எனக்குக் கிடைக்கும் புத்தகங்கள், பத்திரிகைகள் ஆகியவற்றையெல்லாம் படித்து வடி கட்டும் வேலை!''

''அதாவது, 'இது காதல் இல்லாத புத்தகம், இது காதல் இல்லாத பத்திரிகை' என்று இவன்தான் உனக்கு வடிகட்டிக் கொடுக்கிறானா?''

''ஆம், அதனால் இவனுடைய நேரம் வீணாகிக்கொண்டு இருக்கிறது; என்னுடைய நேரம் மிச்சமாகிக்கொண்டு இருக்கிறது!''

''இது உனக்குச் சுயநலமாகத் தோன்றவில்லையா?''

''தோன்றுகிறது; ஆனால், அதே சமயத்தில் அது அவனைப் பழைய நினைவுகளுக்கு ஆளாக்காமல் தடுக்கிறதே?''

''எதுவாயிருந்தாலும் அதில் நன்மையும் உண்டு. தீமையும் உண்டு என்பதை இப்போதாவது ஒப்புக் கொள்கிறாயா, நீ?''

''இல்லை! உனக்கு நன்மையாகத் தோன்றுவது எனக்குத் தீமையாகத் தோன்றலாம்; எனக்குத் தீமையாகத் தோன்றுவது உனக்கு நன்மையாகத் தோன்றலாம்!''

''வேடிக்கையான மனிதன், நீ!''

''சங்கர் கூட அப்படித்தான் சொல்கிறான்!-ஒருவேளை அதனால்தான் என்னுடைய நடத்தை சில சமயம் விபரீதமாகக் கூடப் போய்விடுகிறதோ, என்னமோ?- உதாரணமாக, உன் காதலிக்கு முன்னால் அன்று நான் அவனை அடித்திருக்கக் கூடாது, இல்லையா?''

மோகன் சிரித்தான்; ''ஏன் சிரிக்கிறாய்?'' என்று கேட்டான் மணி.

''ஒன்றுமில்லை; அன்று நீ எனக்காக அவனை அடித்து வீழ்த்தியிருக்காவிட்டால் என்ன நடந்திருக்கும், தெரியுமா? நான் அவளை அவனிடம் ஒப்படைத்துவிட்டு ஓடிப் போயிருப்பேன்; அன்றிலிருந்து அவளும் என்னைத் திரும்பிப் பார்க்காமல் போயிருப்பாள்!''

''இன்று?''

''வெட்கப்படுகிறேன் மணி, அதை நான் உன்னிடம் சொல்ல வெட்கப்படுகிறேன்!''

''அதற்குத்தான் பெண்கள் இருக்கிறார்களே, நீ ஏன் வெட்கப்படுகிறாய்?-சும்மா சொல்லு?''

''சொன்னால் கோபித்துக்கொள்ள மாட்டாயே?''

''மாட்டேன்! ஏனெனில், நான் எப்போதுமே காதலர்களை என்னுடைய கோபத்துக்கு உரியவர்களாகக் கருதுவதில்லை; அனுதாபத்துக்கு உரியவர்களாகவே கருதுகிறேன்!''

''அந்த நம்பிக்கையில்தான் நானும் உன்மேல் இல்லாததும் பொல்லாததும் சொல்லி, என்னுடைய காதலைப் புதுப்பித்துக்கொண்டிருக்கிறேன்!''

''அடி சக்கை! புதுப்பித்துக் கொள்ளக் கூட முடியுமா, அதை?''

''முடியும், உன்னைப் போன்றவர்கள் உதவினால்!''

''சரி, யாருக்காவது ஏதாவது ஒரு வகையில் நான் உதவினால் சரி! அப்புறம்?''

''அதற்காக முதலில் நீ என்னை மன்னிக்க வேண்டும்!''

''உனக்குத்தான் தெரியுமே-நான் யாரையும் மன்னிப்பது மில்லை, யாரிடமும் மன்னிப்புக் கேட்பதும் இல்லை என்று!''

''மன்னிக்காவிட்டால் என்னுடைய நன்றியையாவது ஏற்றுக் கொள்ள வேண்டும்!''

''அதற்குதான் நாய் இருக்கிறதே, நாம் வேறு என்னத்துக்கு?-இதோ பார் மோகன், இவையெல்லாம் நம்மை நாமே ஏமாற்றிக்கொள்வதற்காக நமக்கு நாமே செய்து கொள்ளும் வார்த்தை ஜாலங்கள்! மன்னிப்பு எதற்கு, மறுபடியும் தவறு செய்வதற்கு; நன்றி எதற்கு, மறுபடியும் உதவி கோருவதற்கு! இவற்றைத் தவிர அவற்றால் வேறு ஏதாவது பயனுண்டா, மனிதனுக்கு?''

''பயன் இருக்கிறதோ, இல்லையோ? இந்த நாகரிக யுகத்தில் அவற்றில்தானே பண்பு இருப்பதாகச் சொல்கிறார்கள்?''

''எது நாகரிக யுகம், இதுவா நாகரிக யுகம்? ஒரு நாளும் இல்லை! இது நாகரிக யுகமாயிருந்தால் போலீஸ் ஸ்டேஷன் என்னத்துக்கு இருக்கிறது? போலீஸ்காரர்கள் ஏன் இருக்கிறார்கள்? சிறைச்சாலை என்னத்துக்கு இருக்கிறது. சிறைக் காவலர்கள் ஏன் இருக்கிறார்கள்?-'நாங்கள் அப்படியொன்றும் நாகரிகமானவர்களல்ல, அநாகரிகமானவர் கள்தான்!' என்பதைச் சொல்லாமல் சொல்லத்தானே?''

''ஆமாம் சார்! ஆனால் ஒன்று; அவையும் இல்லா விட்டால் என்னைப் போன்றவர்களின் கதி என்ன ஆகும், தெரியுமா? திருடினால் கூட வேலை கிடைக்காது!'' என்றான் சங்கர், அப்போது இரண்டு கப் காபியுடன் அங்கே வந்து.

''பார்த்தாயா, மோகன்? திருடினால் வேலை நிச்சயம்; கூலி நிச்சயம் கிடையாது. திருடாவிட்டால் வேலை நிச்சயம்

கிடையாது; கூலியும் நிச்சயம் கிடையாது. இதுதான் நாம் வாழும் நாகரிக யுகம்!-இந்த நாகரிக யுகத்தில் நன்றியாவது, மன்னிப்பாவது? அதெல்லாம் ஒன்றுமில்லை; நீ காபி சாப்பிடு!'' என்று ஒரு கப் காபியை எடுத்து அவனுக்கு முன்னால் வைத்தான் மணி.

''இது காதல் காபியா, காதல் இல்லாத காபியா?'' என்றான் மோகன், சிரித்துக்கொண்டே.

''சுவைத்துப் பார்! சர்க்கரை இருந்தால் காதல் காபி; இல்லாவிட்டால் காதல் இல்லாத காபி!'' என்றான் மணி.

''நீரழிவு நோயால் பீடிக்கப்பட்டவர்கள்தான் சர்க்கரை இல்லாத காபி சாப்பிடுவார்கள்; நீயுமா அந்த நோயால் பீடிக்கப்பட்டிருக்கிறாய்?''

''இல்லை; நமது சமூகம் அந்த நோயால் பீடிக்கப் பட்டிருக்கிறது-அதற்காக நான் இருக்கும் பத்தியம், இது!''

''நீ ஒருவன் பத்தியம் இருந்தா அந்த நோய் தீர்ந்துவிடப் போகிறது?''

''ராமபிரான் சேதுபந்தனம் கட்டும்போது ஆஞ்சநேயரின் பரிவாரங்கள் மட்டுமா உதவின? அணிலும் உதவித்தானே இருக்கிறது?''

''நீ அணில் அல்ல; ஆஞ்சநேயன்!''

''ஆம்; ஆஞ்சநேயனாக இருக்கத்தான் விரும்புகிறேன், நான்!'' என்றான் மணி கம்பீரமாக.

''அப்பா ஆஞ்சநேயா, அடியேன் ஒரு விண்ணப்பம் செய்து கொள்ளலாமா?'' என்றான் மோகன், அதுதான் சமயமென்று.

''தாராளமாக! என்ன விண்ணப்பம் பக்தா?''

''என்னுடைய நன்றியை நீ ஏற்றுக்கொண்டாலும் சரி, ஏற்றுக்கொள்ளாவிட்டாலும் சரி-எனக்கு நீ மேலும் ஓர் உதவி செய்ய வேண்டும்!''

''என்ன உதவி?''

''என்னுடைய வீட்டில் எனக்கு நீ நண்பனாயிரு; உன்னுடைய ஓட்டல் அறையில் உனக்கு நான் நண்பனா யிருக்கிறேன். ஆனால், ஆபீசில் மட்டும் எனக்கு நீ விரோதியாயிருக்க வேண்டும்; உனக்கு நான் விரோதியா யிருக்க வேண்டும்-இதுவே என் விண்ணப்பம்!''

''எதற்கு? ஏதும் அறியாத அந்தப் பேதைப் பெண்ணை ஏமாற்றுவதற்கா?''

''இல்லை; ஏமாறாமல் இருப்பதற்கு!''

''அதில் நீ தவறினால்?''

''தண்டனை அளிக்கத்தான் நீ இருக்கிறாயே?''

''ஞாபகமிருக்கட்டும்; அப்போது நீ வீட்டிலும் சரி, வெளியிலும் சரி-என்னுடைய நண்பனாயிருக்க முடியாது!''

இதைச் சொல்லிக்கொண்டே மணி காபியை எடுத்துக் குடிக்க, மோகனும் அந்த ஒரு விஷயத்திலாவது அவனைப் பின்பற்ற முடிகிறதே என்ற திருப்தியில் தானும் தன் காபியை எடுத்துக் குடித்தான்!

## 10. உண்மை சிரித்தது!

சோதனைகள் மிகுந்த தன் வாழ்க்கைப் பிரயாணத்தில் முப்பதாவது மைல் கல்லைக் கடந்துகொண்டிருந்த ராதாவுக்குக் கல்யாண அனுபவம் இல்லையென்றாலும், காதல் அனுபவம் வேண்டிய மட்டும் இருந்தது. அந்த அனுபவத்தின் காரணமாகவோ என்னவோ, அவளிடம் யாராவது வந்து 'காதல் புனிதமானது!' என்று சொன்னால் போதும்; அவள் உடனே மூக்கைப் பிடித்துக் கொண்டு ஓடிப் போய்விடுவாள்-ஆம், அவளைப் பொறுத்தவரை அது அத்தனை நாற்றமெடுத்துப் போயிருந்தது!

தங்கை பாமாவுக்காக, தம்பி பாலுவுக்காக அவள் என்னமோ கல்யாணம் செய்துகொள்ள விரும்பவில்லைதான்- அதற்காக இந்தக் 'காதல் யுக'த்தில் அவளை யாரும் காதலிக்காமல் இருந்துவிடுவார்களா, என்ன?- காதலித்தார்கள், வாலிபர், வயோதிகர் என்ற பேதம் கூட இல்லாமல்!

ஆனால் அவர்களில் யாராவது ஒரு புண்ணியாத்மா அவளைக் கல்யாணம் செய்துகொள்ளத் தயாராயிருந்தாரா வென்றால், அதுதான் கிடையாது. காரணம், காதல் அவர்களுக்குப் பொழுது போக்காயிருந்தது போலக் கல்யாணம் பொழுது போக்காயிருக்கவில்லை-எப்படி இருக்க முடியும்? அதில்தான் 'கடமை' என்று ஒன்று வந்து குறுக்கே நின்று தொலைக்கிறதே?

அந்தக் 'கடமை' என்னும் 'மடமை'க்குத் தன்னைப் பொறுத்த வரை யாரும் அவ்வளவு எளிதில் தங்களை ஆளாக்கிக் கொண்டுவிட மாட்டார்கள் என்பது அவளுக்குத் தெரிந்தே இருந்தது. எனினும் ஒரு சபலம், தனக்கென்று ஓர் ஆண் துணை-அது சிங்கமாயிருந்தாலும் சரி, சிறு நரியா யிருந்தாலும் சரி-இருந்தால் தேவலை என்று எப்போதாவது தோன்றும் அவளுக்கு. அப்படித் தோன்றும்போதெல்லாம் அவள் தன் பார்வையை யார் மேலாவது சற்றே செலுத்திப் பார்ப்பாள். அந்தப் பேதையின் பார்வைக்குரியவனோ அவளை மட்டும் ஏற்றுக்கொள்ளத் தயாராயிருப்பானே தவிர, அவளுக்காக அவள் தங்கையையும், தம்பியையும் ஏற்றுக் கொள்ளத் தயாராயிருக்க மாட்டான்!

அதற்காக அவனைக் குற்றம் சொல்லியும் பிரயோசன மில்லை. நம் நாட்டுப் பொருளாதாரம்தான், 'கல்யாணம் செய்துகொள்கிறாயா, தாராளமாகச் செய்து கொள்! ஆனால் ஒன்று, அளவோடு பிள்ளை பெற்றுக்கொள்!-மீறினால் உன் மனைவியின் வயிற்றை அறு; இல்லாவிட்டால் உன்னுடைய இடுப்புக்குக் கீழே கத்திரிக்கோலைப் போடு!' என்று ஓயாமல் ஒழியாமல் பிரசாரம் செய்யும் அளவுக்கு இப்போது

முன்னேறி விட்டதே?-அவன் என்ன செய்வான், பாவம்! அவனுக்கும் அவனுடைய மனைவிக்குமே அந்தக் கதியென்றால்,அவனைச் சேர்ந்தவர்களின் கதியைப் பற்றியும், அவனுடைய மனைவியைச் சேர்ந்தவர்களின் கதியைப் பற்றியும் அவனால் கவலைப்பட்டுக் கொண்டிருக்க முடியுமா?

இந்த அவல நிலையைப் புரிந்துகொள்ளும் சக்தி ராதாவுக்கு இருந்தது. எனவே, தன் பார்வைக்கு உள்ளானவன் தனக்காகத் தன் தங்கையையும் தம்பியையும் ஏற்றுக் கொள்ளத் தயங்கியபோது, அவள் ஆத்திரம் கொள்ளவில்லை; அனுதாபமே கொண்டாள்!

வேதனை நிறைந்த இந்த வாழ்க்கையை அவள் 'தியாக வாழ்க்கை' என்று நினைக்காவிட்டாலும், உலகம் நினைத்தது. நினைப்பதோடு நின்றுவிடுபவர்கள் எது வேண்டுமானாலும் நினைக்கலாம்தானே?-நினைத்தார்கள், 'எதுவாயிருந்தாலும் அது தங்கள் கையைக் கடிக்காமல், மனத்தைக் கடிப்பதோடு நின்றால் சரி!' என்ற மனப்பான்மையிலே.

ஆனால், ஒன்று மட்டும் உண்மை. அவள் யாருக்கு வேலைக்காரியாயிருந்தாலும், தன்னை அவ்வப்போது சற்றே அசைத்துப் பார்த்த இயற்கைக்கு மட்டும் வேலைக்காரியா யிருக்கவில்லை! எஜமானியாகவே இருந்து வந்தாள். இதனால் அவளுடைய உணர்ச்சி எந்த நிலையிலும் எல்லையை கடக்கவில்லை!

ஆயினும், அவளுடைய வாழ்க்கை அமைதி நிறைந்த வாழ்க்கை என்று சொல்லிவிட முடியாது. ஏனெனில், அவளை ஏமாற்றியவர்கள் மட்டுமல்ல; அவளால் ஏமாற்றப் பட்டவர்களும் அவளைச் சுற்றி இருந்தார்கள்!

இதனால் அன்றாட உணவோடு மட்டுமல்ல; உடையோடு மட்டுமல்ல; உறைவிடத்தோடு மட்டுமல்ல; உணர்ச்சிகளோடும் அவள் போராடினாள்!-அந்தப் போராட்டங்களிலே அவள் அடைந்த வெற்றிகளை விடத்

தோல்விகள்தான் அதிகம் என்றாலும், வாழ்வின் சுவையே அவற்றில்தான் இருப்பதாகத் தோன்றிற்று, அவளுக்கு!

ஆம், வெற்றியில் மட்டுமல்ல; தோல்வியிலும் சுவை கண்டு வந்தவள், அவள். ஆகவே, தன் தங்கை தனக்கென்று ஒருவனைத் தேடிக் கொண்டாள் என்று அறிந்தபோது, அவள் அதிர்ச்சியடையவில்லை; மகிழ்ச்சியே அடைந்தாள்.

அந்த மகிழ்ச்சியில் தன்னை மறந்து, தன் தூக்கத்தை மறந்து, தன்னுடைய தங்கையின் 'எதிர்காலக் கணவ'னைப் பற்றி என்னவெல்லாமோ கேட்டுக்கொண்டிருந்தாள், அவள். விடிய, விடிய அவற்றுக்கெல்லாம் பதில் சொல்லிக் கொண்டிருந்த பாமாவுக்கு தன்னை விட்டால் தேவலை என்று தோன்றிவிட்டது. ''இனிமேல் அவரைப் பற்றி என்னை ஒன்றும் கேட்காதே, அக்கா! இன்று மாலையே வேண்டுமானாலும் அவரை நான் இங்கே வரச் சொல்லி விடுகிறேன்; நீயே அவரை என்ன கேட்கவேண்டுமோ, கேட்டுக்கொள்!'' என்றாள் அலுப்புடன்.

''சரி, நீ போய்க் குளி; நான் காபி போட்டுக் கொடுத்து விட்டு வருகிறேன்!'' என்று சொல்லி அவளை அனுப்பிவிட்டு, அடுக்களைக்குச் சென்றாள் ராதா.

அங்கேயும் அவனை மறக்க முடியவில்லை, அவளால். அவன் எப்படி இருப்பான்?-கறுப்பாயிருப்பானா. சிவப்பா யிருப்பானா? உயரமாயிருப்பானா, குள்ளமாயிருப்பானா?

சிரித்தால் அவன் முகம் எப்படி இருக்கும்?-அழகாயிருக்குமா, அவலட்சணமாயிருக்குமா?

பேசினால் அவன் குரல் எப்படி இருக்கும்?-கனிவாயிருக்குமா, கரகரப்பாயிருக்குமா?

அவன் எப்படியிருந்தால் என்ன, எப்படிப்பட்டவனாயிருப்பான் என்பதல்லவா முக்கியம்?-காதல் அவனுக்குப் பொழுது போக்காயிருக்குமா? அல்லது, கல்யாணத்துக்கு முன்னால் ஒருவரையொருவர் அறிந்து

கொள்ள வாய்ப்பளிக்கும் கடமை உணர்வுகளில் ஒன்றாயிருக்குமா?

அவன் தன் பொறுப்பை உணர்ந்து அவளைக் காதலிக்கிறானா? இல்லை, பொறுப்பை உணராமலே காதலிக்கிறானா? அவர்களுடைய காதலுக்கு வித்திட்டது எதுவாயிருக்கும்?-இனக் கவர்ச்சியாயிருக்குமா? அல்லது, இதயக் கவர்ச்சியாயிருக்குமா?

ஒரு வேளை இனக் கவர்ச்சியாயிருந்து, அந்தக் கவர்ச்சி குறைந்ததும் அவன் அவளைக் கைவிட்டுவிட்டால்?- தன்னுடைய நிலையை விட மோசமாகவல்லவா போய்விடும் அவளுடைய நிலை?-இருக்காது. அவர்களுடைய காதலுக்கு வித்திட்டது இனக்கவர்ச்சியாயிருக்காது; இதயக் கவர்ச்சியாய்த்தான் இருக்கும்...

அப்படிப்பட்ட அழகியா என்ன, தன் தங்கை? இனக்கவர்ச்சி அவர்களுடைய காதலுக்கு வித்திட?- கதைகளில் காணும் ஏழைப் பெண்கள் வேண்டுமானால் அழகாயிருக்கலாம்; வாழ்க்கையில் காணும் ஏழைப் பெண்கள் அழகாகவா இருக்கிறார்கள்?-ஊஹூம், அவர்களுடைய வயிறு வாடும்போது முகமும் வாடித்தானே விடுகிறது?

ஆனால், இதயக் கவர்ச்சி மட்டும் அவர்களுடைய காதலுக்கு எப்படி வித்திட்டிருக்குமாம்? ஒரு வேளை சேர்ந்தாற் போல் சில நாட்களாவது பழகும் வாய்ப்பு...

நினைத்ததை முடிக்கவில்லை, அவள். அதற்குள் அடுப்பின் மேலிருந்த தண்ணீர் கொதிக்க ஆரம்பித்துவிடவே, காபித்தூளை எடுத்து அதில் போட்டுக் கீழே இறக்கி வைத்துவிட்டு, அடுத்தாற்போல் பால் சட்டியை எடுத்து அடுப்பின் மேல் ஏற்றிவிட்டு, அவசரம் அவசரமாகக் குளிக்கும் அறைக்குச் சென்றாள்.

''எங்கே வந்தாய், அக்கா? உன்னை நான் கூப்பிடவில்லையே?'' என்றாள் பாமா, ஒன்றும் புரியாமல்.

''கூப்பிட்டால்தான் வர வேண்டுமா என்ன, போடி!'' என்று அவள் முதுகைத் தேய்த்து விட்டுவிட்டு, ''ஆமாம், முதலில் நீ அவரை எங்கே சந்தித்தாய்?'' என்று கேட்டாள், ராதா.

''நான் எங்கே அவரைச் சந்தித்தேன், அவர்தான் என்னைச் சந்தித்தார்!'' என்றாள் பாமா.

''அதைக் கேட்கவில்லை நான்; எந்த இடத்தில் எப்படிச் சந்தித்தீர்கள் என்று கேட்கிறேன்!''

''ஏன், ஆபீசில்தான்!''

''ஆபீசில்தான் என்றால் இருவரும் ஒரே இலாகாவிலா வேலை பார்க்கிறீர்கள்?''

''ஆமாம்!''

'அப்படியானால் சந்தேகமே இல்லை; இவர்களுடைய காதலுக்கு இதயக் கவர்ச்சிதான் வித்திட்டிருக்க வேண்டும்!' என்று தனக்குத் தானே நினைத்துக்கொண்டுத் திரும்பிய ராதாவுக்கு, அதற்குள் என்ன தோன்றிற்றோ என்னமோ, ''ஏண்டி, பாமா?'' என்று மறுபடியும் குரல் கொடுத்துக்கொண்டே குளிக்கும் அறைக்குள் நுழைந்தாள்.

''என்ன, அக்கா?'' என்றாள் பாமா.

''அவர் உன்னைக் காதலிப்பது அவருடைய பெற்றோருக்குத் தெரியுமா?''

''தெரியாது!''

''ஏன், சொல்லச் சொல்கிறதுதானே?''

''ஆகட்டும், சொல்கிறேன்!''

''இங்கே சொல்கிறேன் என்று சொல்லிவிட்டு, அங்கே போய் மறந்துவிடாதே!''

''இல்லை, மறக்கவில்லை!''

ராதா திரும்பினாள்; வழியில், 'இன்று மாலைதான் அவரை இங்கே அழைத்துக்கொண்டு வரப்போகிறோமே, அதையும் அக்காவே அவரிடம் சொல்லிக்கொள்ளட்டுமே!' என்று நினைத்துப் பாமா எங்கே சொல்லாமல் இருந்து விடுவாளோ என்ற சந்தேகம் வந்துவிட்டது அவளுக்கு; மறுபடியும் குளிக்கும் அறைக்குள் நுழைந்தாள்.

''என்ன அக்கா?'' என்றாள் பாமா

''ஒன்றுமில்லை. அதை நானே அவரிடம் சொன்னால் அவ்வளவு நன்றாயிராது; நீயே சொல்லவேண்டும். என்ன, தெரிந்ததா?''

''தெரிந்தது!''

''அதற்காக நீ அவரை இங்கே அழைத்துக்கொண்டு வராமல் இருந்து விடாதே!''

''இல்லை!''

ராதா திரும்பினாள்; ''அக்கா!'' என்றாள் பாமா.

''என்ன?''

''இனிமேல் ஏதாவது சொல்வதாயிருந்தால் குளித்து விட்டு வந்த பிறகு சொல்கிறாயா?''

அவ்வளவுதான்; ''போடி, போ! நான் அடுப்பில் பாலைப் போட்டுவிட்டு வந்திருக்கிறேனாக்கும்?'' என்று அவள் முகத்தில் அடித்தாற் போல் சொல்லிவிட்டு, அவசரம் அவசரமாக நடையைக் கட்டினாள் ராதா.

அதற்குள் விழித்தெழுந்துவிட்ட தன் கணவருக்காகத் தானே காபியைக் கலந்து எடுத்துக்கொண்டு வந்த மீனாட்சி, ''நான் ஒரு வார்த்தை சொன்னாலும் சொன்னேன், இப்படியா அவள் உயிரை வாங்கிக்கொண்டிருப்பாய்?'' என்றாள் சிரித்துக்கொண்டே.

அப்போது, ''எங்கே காபி?'' என்று கேட்டுக்கொண்டே அங்கே வந்த சொக்கலிங்கனார், ''என்ன, அது?'' என்று தம் மனைவியை மெல்ல விசாரித்தார்.

''அன்றொரு நாள் இரவு நாம் பாமாவை யாரோ ஒரு பையனுடன் பார்க்கவில்லையா? அதை நான் இவளிடம் சொன்னேன். அவ்வளவுதான்; அவள் உயிரை வாங்க ஆரம்பித்துவிட்டாள், இவள்!''

''சரி; அவன் எப்போது வருகிறானாம், இங்கே?''

''வரும்போது வருகிறான்; அதைப்பற்றி இப்போது என்ன?''

''ஒன்றுமில்லை; பேரன், பேத்தி எடுக்க வேண்டிய இந்தக் காலத்தில்கூட நீ வெறும் பொம்மைக் கல்யாணமாகவே செய்து பார்த்துக் கொண்டிருக்கிறாயே, நிஜக் கல்யாணம் ஒன்றாவது செய்து பார்க்க மாட்டாயா என்றுதான் கேட்கிறேன்!'' என்றார் அவர்.

இவற்றையெல்லாம் கேட்டும் கேட்காதவள் போல் நடந்து கொண்ட பாமாவுக்கு, 'இவர்கள் காட்டும் இத்தனை அன்புக்கும் உரியவர்தானா, அவர்?' என்ற சந்தேகம் ஏனோ வந்து விட்டது. அந்தச் சந்தேகத்துடனேயே அவள் அன்று ஆபீசுக்குச் சென்றபோது, மோகனும், மணியும் ஒருவர் தோள்மேல் ஒருவர் கையைப் போட்ட வண்ணம் ஏதோ பேசிக்கொண்டே அவளுக்கு எதிர்த்தாற்போல் வந்தார்கள். 'இதென்ன கூத்து?' என்று அவள் திடுக்கிட்டு நின்றபோது, மோகன் அவளைப் பார்த்துவிட் டான்.

அவ்வளவுதான்; தன்னை அறியாமல் மணியின் தோளின் மேல் கிடந்த தன்னுடைய கையை அவன் சட்டென்று எடுத்தபோது, மணி சிரித்த அந்தச் சிரிப்பு, அவன் சிரித்த சிரிப்பாகத் தோன்றவில்லை அவளுக்கு; உண்மை சிரித்த சிரிப்பாகவே தோன்றிற்று!

# 11. வீரத்துக்கு ஒரு சோதனை!

காதல் விவகாரம் எதுவாயிருந்தாலும் மேல் நாடுகளில் அதைப்பற்றிப் பகிரங்கமாகவே விவாதிக்கிறார்கள்; பகிரங்கமாகவே தீர்வும் காண்கிறார்கள். அதற்குக் குறுக்கே பெண்ணைப் பெற்றவர்களோ, பிள்ளையைப் பெற்றவர்களோ நிற்பதில்லை; அவர்களைச் சுற்றியிருக்கும் சமூகமும் அதை அவமானத்துக்கு உரிய ஒரு பெரிய பிரச்சினையாக எடுத்துக் கொண்டு அவதிப்படுவதுமில்லை. இதனால் பல காதல்கள் அங்கு வெற்றி பெறுகின்றன; காதலர்களும் வெற்றி பெறுகிறார்கள், அத்துடன் , கல்யாணத்துக்கு முன்பே காதலன் காதலியைக் கைவிட்டுவிட்டு ஓடிப்போவதோ அங்கே குறைவு. அதைவிடக் குறைவு, காதலிக்காகக் காதலன் தற்கொலை செய்துகொள்வதும், காதலனுக்காக காதலி தற்கொலை செய்து கொள்வதும், இருவரும் சேர்ந்தாற்போல் தற்கொலை செய்துகொள்வதும், இந்தியாவைத் தவிர வேறு எங்கும் இல்லை என்றுகூடச் சொல்லிவிடலாம்.

இங்கேயோ நிலைமை அப்படி இல்லை. இலக்கியத்தில் காதல் என்றால் இதயம் குளிர வரவேற்கிறோம்; கலையில் காதல் என்றால் கண்குளிர வரவேற்கிறோம்; வாழ்க்கையில் காதல் என்றால் வரிந்து கட்டிக்கொண்டு வம்புக்கு நிற்கிறோம். இதனால் காதல் விவகாரம் எதுவாயிருந்தாலும் இங்கே அது ரகசியமாகவே வைக்கப்படுகிறது; ரகசியமாகவே தீர்வும் காணப்படுகிறது. அந்தத் தீர்வுகள் பெரும்பாலும் காதலுக்கு விரோதமாயிருக்கின்றன; காதலர்களுக்கும் விரோதமாயிருக் கின்றன. பெண்ணைப் பெற்றவர்களுக்கு விரோதமாயிருக் கின்றன; பிள்ளையைப் பெற்றவர்களுக்கும் விரோதமா யிருக்கின்றன-அவர்களைச் சுற்றியிருக்கும் சமூகத்துக்கோ

அவை முழுக்க முழுக்க விரோதமாயிருக்கின்றன. இதன் காரணமாக, உலகத்தில் எத்தனை விதமான அயோக்கியத் தனங்கள் உண்டோ, அத்தனை விதமான அயோக்கியத் தனங்களும் இங்கே அந்தரங்கமாகவே நடைபெற வேண்டியிருக்கிறது. இதுவே நமது பெருமைக்குரிய பாரம்பரியம்; இதுவே நமது மதிப்புக்குரிய பண்பாடு!-வேடிக்கையாயில்லையா?

கல்யாணமாகும்வரை இந்த 'வேடிக்கைக்குரிய காதலி'யாகத்தான் இருக்க விரும்பினாள், பாமா. அதற்கு ஆபீசிலுள்ள அதிகாரிதான் இடம் கொடுக்கவில்லையென்றால், வீட்டிலுள்ள அக்காவுமா இடம் கொடுக்கக் கூடாது?

அவள் என்ன செய்வாள் பாவம், எல்லாம் அந்த மீனாட்சியம்மாளால் வந்த வினை!-காதலுக்காக அப்பா அம்மா, அண்ணன் தம்பி, அக்கா தங்கை ஆகியவர்களையெல்லாம் துறந்துவிட்டு 'ஐயா'வோடு வந்தவரல்லவா அவர்? அவருக்காக அவருடைய தந்தையார் தற்கொலை செய்துகொண்டபோது கூட 'மடிந்தது என் தந்தையல்ல; மடமை!' என்று கொஞ்சங் கூடக் கூசாமல் சொன்னவரல்லவா, அவர்?-அவரைப் போலவே நானும் எங்கே அக்காவைத் துறந்து, தம்பியைப் பலி கொண்டு விடுவேனோ என்று அஞ்சி, 'ரகசியம் ஒன்றும் வேண்டாம், எல்லாம் பகிரங்கமாகவே இருக்கட்டும்!' என்று சொல்லிவிட்டாரோ, என்னமோ?-அதைக் கேட்டுக் கொண்டு இந்த அக்கா என்னை என்ன பாடு படுத்திவிட்டது!

கேட்டதையே திருப்பித் திருப்பிக் கேட்டு, சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்லி-அப்பப்பா! கல்யாணம் எனக்கா, அதற்கா என்று எனக்கே அல்லவா சந்தேகம் வந்துவிட்டது?

அம்மாவும் அக்காவும்தான் அப்படியென்றால், ஐயாவாவது சும்மா இருக்கக் கூடாதா?-அவர் எனக்கு

நிஜக்கல்யாணம் பண்ணிப் பார்க்கப் போகிறாராமே, நிஜக் கல்யாணம்!

அதற்கெல்லாம் இவர் தகுதியுடையவராயிருப்பாரா என்று நான் அப்போதே சந்தேகப்பட்டேன்-அந்தச் சந்தேகம் சரியென்றல்லவாத் தோன்றுகிறது, இப்போது?

எனக்கென்னமோ இவர் சொன்னதில் அன்றே நம்பிக்கையில்லைதான்!-'அவனுக்குஉன்மேல் ஒரு கண்'- இதை அவர் அந்த முரடனை அடித்து வீழ்த்துவதற்கு முன்னால் இவர் சொல்லியிருந்தால் நான் நம்பியிருப்பேன். ஏனெனில், 'கோழைகள் காதலிக்கிறார்கள்; ஆனால் காதலிக்கப்படுவதில்லை!' என்பது எனக்குத் தெரியும். ஆனால் வீரர்களோ?-அவர்கள் ஒரு நாளும் காதலிப்ப தில்லை; ஆனால் காதலிக்கப்படுகிறார்கள்!

அத்தகைய வீரர்களில் ஒருவர் அவர்!-அவராவது, என் மேல் ஒரு கண் வைப்பதாவது?

இதில் ஏதோ சூழ்ச்சி இருக்க வேண்டும். அந்தச் சூழ்ச்சி இன்னதென்று தெரியும் வரை இவருடன் நாம் கொஞ்சம் எச்சரிக்கையுடனேயே பழக வேண்டும்...

இந்தத் தீர்மானத்துடன் அவள் அவனை நெருங்கிய போது, ''வா பாமா, வா! என்ன இருந்தாலும் நாம் எல்லோரும் ஒரே ஆபீசில் ·வேலை பார்ப்பவர்கள் அல்லவா? அவன் என்னமோ அன்று நடந்துவிட்ட அந்த அசம்பாவிதத்துக்காக என்னைக் கண்டதும் ஒதுங்கி ஒதுங்கித்தான் நடந்தான். நான்தான், 'அவள் அழகு உன்னை அப்படிச் செய்யச் சொன்னால் அதற்கு நீ என்னடா செய்வாய்? ஆசை எல்லோருக்கும் பொதுவானதுதானே? வாவா!' என்று அவன் தோளில் கையைப் போட்டுத் தள்ளிக்கொண்டு வந்தேன்; அதற்குள் நீ வந்துவிட்டாய்!'' என்றான் அவன், வழக்கம் போல் அசடு வழிய.

''உங்களுக்கு இருக்கும் பெருந்தன்மை எனக்கு இருக்காது என்று நீங்கள் ஏன் நினைக்கவேண்டும்?

என்னைக் கண்டதும் அவருடைய தோளின்மேல் இருந்த கையை நீங்கள் ஏன் எடுக்கவேண்டும்?'' என்றாள் அவள்.

அவ்வளவுதான்; ''என்னை மன்னித்துவிடு பாமா, உன்னைப் பற்றி நான் அப்படி நினைத்தது தப்புத்தான்!'' என்று உடனே அவளிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு விட்டான் அவன்-அவனைப் பெறுத்தவரை அதற்குத்தான் மதிப்பே கிடையாதே!

அன்று மாலை, 'இனி நம் காதலை எங்கே வளர்ப்பது? ஆபீசில் வளர்க்கலாமென்றால் அதற்குக் குறுக்கே பரந்தாமன் வந்து நிற்கிறார்; கடற்கரையில் வளர்க்கலாமென்றால் அதற்குக் குறுக்கே யாராவது ஒரு முரடன் வந்து நிற்கிறான்!- இந்த நிலையில் எஞ்சி நிற்பது சினிமா ஒன்றுதான்!-அங்கே போனால் மனம் விட்டுப் பேசவா முடிகிறது? 'கிசுகிசு'வென்று பேசினால் கூட, 'ஸ், ஸ்!' என்று சீறுவார்கள், அங்கே வருபவர்கள் மகா ரசிகர்கள் மாதிரி! நகரத்தை ஆளுகிறவர்களும், 'காதலர் பூங்கா, காதலர் பாதை' என்று வெறும் போர்டுதான் அங்கங்கே போட்டு வைக்கிறார்களே தவிர, பாதுகாப்பு ஏதாவது செய்கிறார்களா, காதலர்களுக்கு? அன்று அவன் சொன்னதுபோல, நாம்தான் துணைக்குப் போலீசாரை அழைத்துக்கொண்டு போகவேண்டும் போலிருக்கிறது!' என்று எண்ணிக்கொண்டே மோகன் ஆபீசை விட்டு வெளியே வந்தபோது, ''இனிமேல் நீங்கள் என்னைக் கடற்கரைக்கு அழைக்கவே மாட்டீர்கள், இல்லையா?'' என்றாள் பாமா, அவனுக்குப் பின்னால் வந்துகொண்டே.

எப்படியிருக்கும் மோகனுக்கு? 'என்னதான் இருந்தாலும் ஒரு பெண்ணுக்காக, தான் பின் வாங்குவதாவது!' இப்படி நினைத்த அவன் தன்னைத் தானே ஒருவாறு சமாளித்துக்கொண்டு, ''அப்படியொன்றும் இல்லையே? இப்போது கூட நீ விரும்பினால் நான் வரத் தயார்!'' என்றான், 'எங்கே அவள் வந்துவிடுவாளோ?' என்ற அச்சத்துடன்!

அவள் விடவில்ல; "அதற்குத்தான் மறுபடியும் மணியுடன் சிநேகமாகப் போய்விட்டீர்கள் போலிருக்கிறது?" என்றாள் அவனைத் தன் பார்வையால் ஊடுருவி.

அதுவும் ஒரு விதத்தில் உண்மைதான் என்றாலும், அதை அவளிடம் ஒப்புக்கொள்ள அவன் விரும்பவில்லை. எனவே, "அவன் என்னை முந்திக்கொண்டுவிட்டால் அதற்கு நான் என்ன செய்வேனாம்?" என்றான் எங்கேயோ பார்த்தபடி.

"பாவம், உங்களையும் உங்களுடைய வீரத்தையும் நான் ஏன் அனாவசியமான சோதனைக்கு உள்ளாக்க வேண்டும்? பேசாமல் வீடு போய்ச் சேருகிறீர்களா?" என்றாள் அவள், அனுதாபத்துடன்.

அவளுடைய அனுதாபம் அவனுக்குப் பிடிக்கவில்லை. ஆகவே, "என்னை வீணாகப் பயமுறுத்தாதே, உனக்குப் பயமாயிருக்கிறதென்றுசொல்!" என்றான், வராத சிரிப்பை வரவழைத்துக்கொண்டு.

"உண்மைதான்; என்னை யாரிடமாவது விட்டுவிட்டு நீங்கள் ஓடிவிட்டால் என்ன செய்வது என்று நான் பயப்படத்தான் பயப்படுகிறேன்!" என்றாள் அவள், அதற்கும் சளைக்காமல்.

நிலைமை மேலும் மேலும் மோசமாகிக்கொண்டே வருவதை உணர்ந்த மோகன், "போ, பாமா! என்னிடம் நீ இப்படியெல்லாம் விளையாடினால் எனக்குக் கெட்ட கோபம் வரும், தெரியுமா?" என்று குழைவோடு இழைந்து, பாதையையே அடியோடு மாற்றப் பார்த்தான்!

அவள் சிரித்தாள்; சிரித்துவிட்டுச் சொன்னாள்:

"பெண்ணாகப் பிறந்திருக்க வேண்டியவர், நீங்கள்!"

அவன் சொன்னான்: அதற்கு நேராகப் பதில் சொல்ல முடியாமல்தான் சொன்னான்;

''இப்படியெல்லாம் பேசினால் உன்னை நான் அடித்தாலும் அடித்துவிடுவேன்!''

''மிக்க மகிழ்ச்சி; பெண்களையாவது உங்களால் அடிக்க முடியும் என்று நீங்கள் நினைப்பதுபற்றி!''

அவ்வளவுதான்; ஆத்திரம் தாங்கவில்லை அவனுக்கு-''ஏ பாமா, என்னை நீ விரும்புகிறாயா? இல்லை, வெறுக்கிறாயா?'' என்று கத்தினான்.

''அந்தக் கேள்விக்கு இனி இடமில்லை; வாருங்கள், போவோம்!'' என்றாள் அவள், போனாற் போகிறதென்று அத்துடன் விட்டுவிட்டு.

''எங்கே?'' என்றான் அவன்.

''என் வீட்டுக்கு!'' என்றாள் அவள்.

''என்னை உங்கள் வீட்டுக்கு அழைக்கும் அளவுக்குக் கூட உனக்குத் துணிவிருக்கிறதா, என்ன?''

''எனக்கு இல்லை; என் அக்காவுக்கு இருக்கிறது!''

''உன் அக்காவுக்கு இருக்கிறதா?''

''ஆமாம்; அதற்கு வேண்டிய தைரியம்தான் உங்களுக்கு இருக்க வேண்டும். இருக்கிறதோ, இல்லையோ?'' என்றாள் அவள், அவனை ஒரு தினுசாகப் பார்த்துக்கொண்டே.

''ஏன் இல்லை? இருக்கிறது. இருக்கிறது!'' என்று அவன் தன் மார்பைத் தடவி விட்டுக்கொண்டான்; அவளும் அவனுடன் சேர்ந்து அவனுடைய மார்பைத் தடவிவிட்டு விட்டு, அவனுக்குப் பின்னால் ஏறி உட்கார்ந்தாள்.

'ஸ்கூட்டர்' அவள் வீட்டை நோக்கி நகர்ந்தது. ஆம், அவனுக்கிருந்த தயக்கம் அதற்கும் இருந்தது!

இங்கே இப்படியென்றால், அங்கேயோ ஆரத்தி ஒன்றுதான் பாக்கி. அதைத் தவிர, தன் தங்கையின் எதிர்காலக் கணவனை வரவேற்பதற்காக எத்தனை ஏற்பாடுகள் செய்யவேண்டுமோ, அத்தனை ஏற்பாடுகளையும் செய்து வைத்திருந்தாள் ராதா.

அவையனைத்தையும் கவனித்துக் கொண்டிருந்த மீனாட்சி, ''ஏன், ஆரத்தியையும்தான் கரைத்து வைத்து விடேன்!'' என்றாள் சிரித்துக் கொண்டே.

''இப்போது ஏன் அம்மா அது, கல்யாணத்துக்குப் பிறகு வைத்துக் கொள்ளலாமென்று நினைக்கிறேன்!'' என்றாள் ராதா, அவள் சொன்னதை உண்மையாக எடுத்துக் கொண்டு!

''அதுதான் சரி; ஆனால் இங்கே உள்ள தரைவிரிப்பைக் கொண்டு போய் அங்கே விரித்து, இங்கே உள்ள நாற்காலி களைக் கொண்டு போய் அங்கே போட்டு, அவனை நீ அங்கே வரவேற்பதைவிட இங்கேயே வரவேற்றிருக்கலாமே?''

''அப்படித்தான் நினைத்தேன் நான்; ஐயா என்ன நினைப்பாரோ என்னமோ என்று...''

''உனக்குத் தெரியாதா, அவனை வரவேற்பதற்காக அவர் அவனுக்கு முன்னாலேயே வந்து உட்கார்ந்திருக்கிறார்!''

''போம்மா, நீங்கள் பொய் சொல்கிறீர்கள்!''

அதற்குள், ''ஏன் ராதா, நான் வரக்கூடாதா?'' என்றார் அவர், மேலே இருந்தபடி அவளை எட்டிப் பார்த்து.

அவ்வளவுதான்; வெட்கமாகப் போய்விட்டது அவளுக்கு. ஓடிப் போய் அங்கே விரித்த விரிப்பை எடுத்துக் கொண்டு இங்கே வந்தாள் விரிக்க; மீனாட்சி அதைத் தடுத்து, ''உனக்கென்ன, பைத்தியமா? எங்கே வரவேற்றால் என்ன, நாங்கள் அங்கே வந்துவிடுகிறோம்!'' என்றாள்.

''சரி'' என்று ராதா திரும்பியபோது யாரோ ஒரு மாணவி வந்து, ''அம்மா இருக்கிறார்களா?'' என்றுஅவளை விசாரித் தாள். ''இருக்கிறார்கள்!'' என்று அவள் சொல்வதற்குள் மீனாட்சியே அங்கு வந்து, ''வாடி வா! இன்று நாங்கள் இங்கே ஒரு காதல் ஜோடியை வரவேற்கப் போகிறோம்!'' என்று அவளை வரவேற்றபடி, தனக்குப் பின்னால் வந்துகொண்டிருந்த தன் கணவரையும் தன்னுடைய கண்ணால் அவளுக்குக் காட்டினாள்.

அப்போது அன்றொரு நாள் பார்த்த அதே 'ஸ்கூட்டர்' அவர்கள் வீட்டு வாசலில் வந்து நிற்க, ''இந்தக் காதல் ஜோடிதானா நீங்கள் சொன்னது?'' என்றாள் அவர்களுடன் இருந்த மாணவி.

அவ்வளவுதான்; பாமாவை அவசர அவசரமாக இறக்கிக் கீழே விட்டுவிட்டு, ''இன்றுவேண்டாம்; இன் னொரு நாளைக்கு!'' என்று சிட்டாய்ப் பறந்தான், மோகன்.

காரணம் வேறொன்றுமில்லை; அவனைப் பார்த்த அந்த மாணவி, அவன் தங்கை அருணாவாயிருந்ததுதான்!

# 12. கருணை வள்ளலும் காதல் வள்ளலும்

அன்றிரவு அருணா வீட்டுக்கு வந்தாளோ இல்லையோ, ''அப்பா, அப்பா! உங்களுக்கு ஒரு சந்தோஷச் சேதி, அப்பா!'' என்று கத்திக்கொண்டே மாடிப்படிகளில் காலை எடுத்து வைத்தாள்.

இதை எதிர்பார்த்துக் கொண்டிருந்த மோகன் 'விருட்'டென்று தன் அறையை விட்டு வெளியே வந்து, ''அருணா, அருணா! சொல்லாதே அருணா!'' என்று கெஞ்சாத குறையாகக் கெஞ்சி, அவள் கையைப் பற்றி இழுத்தான்.

''சும்மா சொன்னால் கேட்டுக்கொண்டு விடுவேனா, நான்? எடு, ஏதாவது!'' என்று கையை நீட்டினாள் அவள்.

அவள் நீட்டிய கையில் ஒரு ரூபாயை எடுத்து வைத்து, ''இப்போதைக்கு இதை வைத்துக் கொள்; சம்பளம் வந்ததும் உன்னை நான் கவனித்துக்கொள்கிறேன்!'' என்றான் அவன்.

''யாருக்கு வேண்டும், ஒரு ரூபாய்? நீயே வைத்துக் கொள்!'' என்று அதை அவனிடமே திருப்பிக் கொடுத்து விட்டு, ''அப்பா, அப்பா!'' என்றாள் அவள், மறுபடியும்.

'சனியன், பீடை!' என்று தன் மனத்துக்குள்ளேயே கருவிக்கொண்டு, ஐந்து ரூபாயை எடுத்து அவள் கையில் வைத்தான் அவன், ''இது பரவாயில்லை, ஒரு 'பகல் காட்சி'க்காவது போய்விட்டு வரலாம்!'' என்று அவள் அதை எடுத்து வைத்துக் கொண்டு, ''ஏமாந்தாயா, இப்போது அப்பா இங்கே இல்லையாக்கும்?'' என்றாள் சிரித்துக் கொண்டே.

''எனக்கும் தெரியும், அது! இன்றில்லாவிட்டாலும் நாளைக்காவது அழுதுதானே தீரவேண்டும் என்று அழுதேனாக்கும்?'' என்றான் அவன்.

''ஐயோ பாவம், அழாதே அண்ணா!'' என்று தன் இடையில் செருகியிருந்த கைக்குட்டையை எடுத்து அவனிடம் நீட்டினாள் அவள்.

''நான் ஒன்றும் அழவில்லை; நீயே வைத்துக்கொள், உன் கைக்குட்டையை!'' என்று அவன் அதை அவளிடமே விட்டெறிந்துவிட்டுத் திரும்பியபோது, கையில் பிரசாதத்துடன் கோயிலிலிருந்து வந்து கொண்டிருந்த அவனுடைய அம்மா, ''என்ன சங்கதி?'' என்று விசாரித்தாள்.

அவன் அதற்கு என்ன சொல்வது என்று யோசிப்பதற்குள், ''ஒன்றுமில்லை அம்மா! அண்ணா இல்லே, அண்ணா...'' என்று ஆரம்பித்தாள் அவள்.

''என்ன அண்ணாவுக்கு?'' என்று அம்மா கேட்டாள்.

''உத்தியோகத்தில் உயர்வு கிடைத்திருக்கிறது, அம்மா!'' என்றான் அவன், அதற்குள் அவளை முந்திக்கொண்டு.

அப்பொழுதும் அம்மா அவனை நம்பாமல், ''உண்மை யாகவா?'' என்று கேட்டாள், அருணாவின் பக்கம் திரும்பி.

''ஆமாம், அம்மா!'' என்றாள் அவள், தன் அண்ணாவைக் கடைக்கண்ணால் கவனித்துக்கொண்டே.

''எல்லாம் அம்பாளின் கிருபை!'' என்று தன் கையிலிருந்த பிரசாதத்தை அவர்களிடம் கொடுத்துவிட்டு அவள் உள்ளே சென்றாள்; மோகன் பெருமூச்சு விட்டான்.

அத்துடன் அவனை விட்டுவிடவில்லை, அருணா; கூடத்தில் போட்டிருந்த சோபாவில் 'ஜம்'மென்று அமர்ந்து, ''எங்கே, இங்கே இருந்த பத்திரிகையைக் காணோம்?'' என்றாள் அதிகாரத் தொனியில்.

''அப்பாவின் அறையில் இருக்கும்!'' என்றான் அவன், அடக்கமே உருவாக.

''அதைச் சொல்லவா உன்னை நான் கேட்டேன்? போய் எடுத்துக்கொண்டு வா!'' என்றாள் அவள், அதட்டும் குரலில்.

'ஐந்து ரூபாய் வாங்கிக்கொண்ட பிறகுமா இந்த அநீதி!' என்று முணுமுணுத்துக்கொண்டே அவன் மாடிக்குப் போய் அதை எடுத்துக்கொண்டு வந்தான்.

அவள் அதை எடுத்துப் பிரித்துக்கொண்டே, ''அந்த மின்விசிறியைப் போடு!'' என்றாள்.

அவன் போட்டான்.

''அம்மாவிடம் போய்ச் சமையல் ஆகிவிட்டதா என்று கேள்!'' என்றாள் அவள்.

அவன் போய்க் கேட்டுவிட்டு வந்து, ''இன்னும் கொஞ்சம் நேரமாகுமாம்!'' என்றான்.

''சரி! உட்கார்!'' என்றாள் அவள்.

அவன் உட்கார்ந்தான்.

''எழுந்திரு!'' என்றாள் அவள்.

அவன் எழுந்தான்.

''பத்திரிகையில் ஒன்றையும் காணோம்; ரேடியோவைத் திருப்பி வை!'' என்றாள் அவள்.

அவன் திருப்பி வைத்தான்.

''தேவலையே? நான் சொன்னபடியெல்லாம் கேட்கிறாயே, நீ!'' என்றாள் அவள்.

''வேறு வழி? போயும் போயும் உன்னிடமல்லவா அகப்பட்டுக் கொண்டிருக்கிறேன், நான்?'' என்றான் அவன்.

அதற்குமேல் அவனைச் சோதிக்க விரும்பாமல், "ஆமாம், நீ அந்த அண்ணியை எப்போது தேடிப் பிடித்தாய்?" என்று கேட்டாள் அவள்.

"இப்போதுதான்!" என்றான் அவன்.

"அந்த அண்ணியின் அக்கா எங்கள் பேராசிரியை வீட்டுச் சமையற்காரி என்பது தெரியுமா, உனக்கு?"

"தெரியும்!"

"தெரிந்துதான் நீ அந்த அண்ணியைக் காதலித்தாயா?"

"ஆமாம்!"

"அப்படியானால் உன்னைக் 'காதல் மன்னன்' என்று மட்டும் சொன்னால் போதாது; 'காதல் வள்ளல்' என்றும் சொல்லத்தான் வேண்டும்!"

"சொல்லு! உன்னைப் பொறுத்தவரை நீ என்ன வேண்டுமானாலும் சொல்லு! ஆனால் அப்பா, அம்மாவிடம் மட்டும் அந்த அண்ணியைப் பற்றிச் சொல்லிவிடாதே!"

"அதிகச் செலவாகுமே, அதற்கு! சமாளிப்பாயா, நீ?"

"முடிந்தவரை சமாளிக்கிறேன்!"

"அப்படியானால் நானும் முடிந்தவரை சொல்லாமலிருக்கிறேன்!"

இருவரும் சேர்ந்தாற்போல் இந்த முடிவுக்கு வந்தபோது "சார், சார்!" என்று ஒரு குரல் வாசலிலிருந்து வந்தது; அருணா வெளியே வந்து பார்த்தாள்-பார்ப்பதற்குப் 'பெரிய மனிதர் வீட்டுப் பிள்ளை' போலிருந்த 'பிக்-பாக்கெட் பீதாம்பரம்' சுற்றுமுற்றும் பார்த்தபடி அங்கே நின்றுகொண்டிருந்தான்.

"என்னைத் தெரியவில்லையா? அடிக்கடி இங்கே வந்துகொண்டிருப்பவன்தானேம்மா, நான்?" என்றான் அவன்.

"எத்தனையோ பேர் வருகிறார்கள்; எத்தனையோ பேர் போகிறார்கள். அவர்களில் உன்னை யார் என்று தெரியும், எனக்கு?"

''நான்தான் பீதாம்பரம்; ஐயா ஆபத்சகாயத்தைப் பார்க்க வந்திருக்கிறேன்!''

''அவர் வீட்டில் இல்லை; வெளியே போயிருக்கிறார்!''

''எப்போது வருவார் என்று தெரியுமா?''

''தெரியாது!''

''அட, கடவுளே! அவர் வரும் வரை நான் இங்கேயா நின்றுகொண்டிருப்பது? அவ்வளவு நன்றாயிராதே, அது!''

''அதற்கு என்னை என்ன செய்யச் சொல்கிறாய், நீ?'' என்று சொல்லிவிட்டு அவள் உள்ளே வந்தாள்.

''அவன் சொல்வது உண்மைதான், அருணா! அவனை உள்ளே வந்து மேலே போய் உட்காரச் சொல்!'' என்றான் மோகன்

''ஏனாம்?''

''கிட்ட வா, சொல்கிறேன்!'' என்று அவள் காதோடு காதாக, ''அவன் ஒரு பிக்-பாக்கெட்!'' என்றான் அவன்.

''பிக்-பாக்கெட் அப்பாவைத் தேடிக்கொண்டு வருவானேன்?'' என்றாள் அவளும் அவன் காதோடு காதாக.

''மாஜி போலீஸ் அதிகாரி இல்லையா, நம் அப்பா? அவரைத் தேடிக்கொண்டு வேறு யார் வரப்போகிறார்கள்?'' என்றான் அவன், தன் குரலைத் தாழ்த்தி.

''அப்படியானால் அந்தக் காரியத்தை நீயே செய்!'' என்று அவளும் தன் குரலைத் தாழ்த்திச் சொல்லிவிட்டு அடுக்களைக்குச் செல்ல, ''வணக்கம், சின்ன ஐயா!'' என்று கை கூப்பிக் கொண்டே, மோகனுக்கு எதிர்த்தாற்போல் வந்து நின்றான் பீதாம்பரம்.

''போ போ, மாடிக்குப் போ!'' என்று அவனை மாடிக்கு அனுப்பிவிட்டுக் கீழே உட்கார்ந்தான் மோகன்.

''சார், சார்!'' என்று இன்னொரு குரல் வந்தது வாசலிலிருந்து. 'பொழுது போனால் இது ஒரு தொல்லை!'

என்று முணுமுணுத்துக் கொண்டே, ''யாரப்பா, அது?'' என்றான் அவன், இருந்த இடத்திலேயே இருந்தபடி.

''நான்தான் அபேஸ் அய்யாக்கண்ணுங்க!'' என்றான், அந்தக் குரலுக்கு உரியவன் அங்கேயே நின்றது நின்றபடி.

''வா வா, உள்ளே வா!'' என்று அவனையும் வரவேற்று மாடிக்கு அனுப்பிவிட்டு, ''கட்சிக்காரர்கள் வக்கீலைத் தேடிக் கொண்டு வருவதுபோல அல்லவா வருகிறார்கள்!'' என்றான் மோகன், அலுப்புடன்.

''அதில் என்னடா சந்தேகம், நான் காப்பாற்றுவது போல வக்கீலால் கூட அவர்களைக் காப்பாற்ற முடியாதே!'' என்றார் அவன் அப்பா, அப்போது உள்ளே வந்து.

அவர் சொன்னது உண்மைதான்!-பதவியில் இருந்த போதும் சரி, இல்லாதபோதும் சரி; அவரால் நல்லவர்கள் காப்பாற்றப்பட்டார்களோ இல்லையோ, கெட்டவர்கள் தவறாமல் காப்பாற்றப்பட்டு வந்தார்கள்!-அதற்குத் துணையாயிருந்தது, அவர் செய்த உத்தியோகம் மட்டுமல்ல; அந்த உத்தியோகத்தால் அவர் அடைந்திருந்த அனுபவமும் கூட.

இதனால் எவன், எங்கே, எதைத் திருடினாலும் சரி, அதை அப்படியே கொண்டு வந்து அவரிடம் சேர்த்துவிடுவான்; அதை வெளியே தெரியாமல் எப்படி அமுக்க வேண்டுமோ, அப்படி அமுக்கி விடுவார், அவர்!

இந்த அமுக்கலில் திருடன் அடைந்த லாபத்தை விட அவர் அடைந்த லாபம்தான் அதிகம் என்றாலும், பல திருடர்கள் அதை ஒரு பொருட்டாக நினைக்கவில்லை. காரணம், அவர்கள் செய்துவந்த திருட்டுத் தொழில் முதல் இல்லாத தொழில் என்பது மட்டுமல்ல; திருடுவதைவிடப் பதுக்குவது அவர்களுக்குக் கடினமாயிருந்ததும்கூடத்தான்!

அந்தக் கடினமான வித்தையை வெகு சுலபமாகச் செய்து வந்தார் அவர். என்ன இருந்தாலும் சமூகத்தில் 'பெரிய மனிதர்' என்ற அந்தஸ்தை அடைந்து விட்டவர் பாருங்கள்;

திருட்டுப் போன பொருட்கள் அவர் வீட்டிலிருந்து கண்டெடுக்கப்பட்டால்கூட, 'யாரோ கொண்டுவந்து போட்டு விட்டான்?' என்றுதானே உலகம் சொல்லும்?-அந்த உலகம் அவருக்குப் பாதுகாப்பு; அவர் திருடர்களுக்குப் பாதுகாப்பு!

இந்தப் பாதுகாப்பைத் தவிர வேறு எந்தப் பாதுகாப்பும் இல்லாமல் வளர்ந்து வந்த அந்தத் தொழிலுக்குப் போட்டியும் ஓரளவு இருக்கத்தான் இருந்தது. ஆனால், அந்தப் போட்டி அவரைப் பாதிக்கவில்லை-எப்படிப் பாதிக்கும்? ஒரு பக்கம் போட்டி இருந்தாலும், இன்னொரு பக்கம் அந்தப் போட்டியால் திருடர்கள் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாகப் பல்கிப் பெருகி வரும்போது?

இதனால் சமூகத்துக்குத் தீமையென்றாலும், சமூகம் யாருக்கு, எப்படிப் பணம் வருகிறது என்பதையா கவனிக்கிறது? எவனுக்காவது, எப்படியாவது பணம் வந்துவிட்டால் சரி, அவன் அதற்குப் பெரிய மனிதன் தானே?-அத்தகைய பெரிய மனிதர்களில் ஒருவராகத்தான் ஆபத்சகாயமும் திகழ்ந்து வந்தார்-இது வழிப் பிரயாணத்தில் மட்டுமல்ல; வாழ்க்கைப் பிரயாணத்திலும் அவர் கண்ட குறுக்கு வழி!

ஆனால், அந்த வழிக்காகத் தாம் பெரிய மனிதர் என்ற அந்தஸ்தையும் அவர் அடியோடு இழந்துவிடுவதில்லை; அப்படியே இழந்தாலும் இரவில் மட்டுமே ஓரளவு இழப்பார்-அதாவது, திருடனோடு திருடனாக அமர்ந்து, தொழிலைக் கண்ணுங் கருத்துமாகக் கவனிக்கும்போது-பகலிலோ -பேசக்கூடாது; பெரிய மனிதர் பெரிய மனிதர்தான், திருடன் திருடன்தான்!

இதெல்லாம் வீட்டில் உள்ளவர்களுக்குத் தெரியாதா என்றால் தெரியும்; ஆனால் எப்படி?-'ஏழை படும் பாடு' என்ற கதையில் வரும் திருடனிடம் கருணை காட்டிய பாதிரியார் நமக்கு எப்படித் தெரிகிறாரோ, அப்படி; 'புத்தர்

வரலா'ற்றில் வரும் வேசியிடம் கருணை காட்டிய கவுதமர் நமக்கு எப்படித் தெரிகிறாரோ, அப்படி!

அன்றுகூட அப்படித்தான் நடந்தது-அவரைச் சாப்பாட்டுக்கு அழைப்பதற்காக மேலே வந்த அவருடைய மனைவி அன்னபூரணியம்மாள், ''இந்த இழவெல்லாம் உங்களுக்கு என்னத்துக்கு? எந்தத் திருடனாவது, எப்படி யாவது போகிறான்!'' என்று வழக்கம்போல் கடிந்து கொண்டதற்கு அவர் என்ன சொன்னார், தெரியுமா?-''மனசு கேட்கவில்லையேடி! இல்லாத கொடுமை திருடுகிறான்; அவனைப் போலீசாருக்குக் காட்டிக் கொடுப்பதில் எனக்கு என்ன லாபம்?'' என்றுதான் சொன்னார்-உண்மைதானே, லாபம் அவருக்கு இல்லைதானே?

ஆயினும் ஏதோ ஒரு சந்தேகம் நீண்ட நாட்களாகவே அந்த 'நல்ல உள்ள'த்தை அரித்துக்கொண்டு இருந்தது; அந்தச் சந்தேகத்தை மனத்தில் வைத்துக் கொண்டு சொன்னாள்-அதையும் சாப்பாட்டுக்குப் பிறகு வெற்றிலை மடித்துக் கொடுத்துக் கொண்டே சொன்னாள்:

''இன்று ஒரு நல்ல சேதி என் காதில் விழுந்தது-பையனுக்கு உத்தியோகம் உயரப் போகிறதாம்; உத்தியோகம் உயர்ந்தால் ஊதியமும் உயரத்தானே உயரும்?-இனி மேலாவது, அந்தத் திருட்டுப் பயல்கள் இங்கே வராமல் இருக்கட்டுமே?''

அவர் சொன்னார்; அதற்கும் அசைந்து கொடுக்காமல் சொன்னார்:

''போடி பைத்தியமே! நானா வரச்சொல்கிறேன் அவர்களை? அவர்கள் அல்லவா என்னைத் தேடி வருகிறார்கள்?''

இந்தச் சமயத்தில், ''திருடனுக்குக் காட்டும் கருணையை வேறு யாருக்காவது காட்டினால் என்ன, அப்பா?'' என்றாள் அருணா, குறுக்கிட்டு.

"படித்த பெண்ணான நீ கூடவா அப்படிக் கேட்கிறாய்? வருந்துகிறேன் அம்மா வருந்துகிறேன்! மற்றவர்களுக்குக் கருணை காட்ட இந்தப் பாழும் உலகத்தில் எத்தனையோ பேர் முன் வருவார்கள்; திருடனுக்குக் கருணை காட்டத்தான் ஒருவரும் முன்வர மாட்டார்கள் அம்மா, ஒருவரும் முன் வர மாட்டார்கள்!" என்றார் அவர், அதற்கும் அசைந்து கொடுக்காமல்.

"அந்த ஒருவர் நீங்களாயிருப்பது என்னைப் புல்லரிக்கச் செய்கிறது, அப்பா!" என்றான் மோகன்-'காதல் வள்ளல்' அல்லவா, 'கருணை வள்ள'லின் அருமை அவனுக்குத்தானே தெரியும்?

# 13. "அது என்னமோ, எனக்குத் தெரியாது!"

காதல் வள்ளல் தன் தங்கையிடம் அகப்பட்டுக் கொண்டு தவித்தான் என்றால், காதல் வள்ளியோ தன் தமக்கையிடம் அகப்பட்டுக்கொண்டு தவித்தாள். ஆம், பாமா என்ன சொல்லியும் அவள் கேட்கவில்லை; "அங்கிருந்து இவ்வளவு தூரம் வந்தவர், இங்கே வந்ததும் உன்னை விட்டுவிட்டுப் போய் விட்டாரென்றால், நீ ஏதாவது சொல்லித்தான் இருக்கவேண்டும்; இல்லாவிட்டால் அவர் ஏன் அப்படிப் போயிருக்கப் போகிறார்?" என்றாள் அவள், பிடிவாதமாக.

"நான் ஒன்றும் சொல்லவேயில்லை, அக்கா! அவர்தான் வந்ததும் வராததுமாக இருக்கும்போதே, "இன்று வேண்டாம்; இன்னொரு நாளைக்கு' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்!" என்றாள் இவள், பரிதாபமாக.

"அதை அவர் அங்கேயே சொல்லியிருக்கலாமே?"

''நானா வேண்டாமென்றேன், அவர்தான் சொல்ல வில்லை!''

''போடி, போ! இப்போது நான் அவர்களுடைய முகத்தில் எப்படி விழிப்பேன்? என்னுடைய முகத்தில் கரியைப் பூசியது போதாதென்று, அவர்களுடைய முகத்திலுமல்லவா நீ கரியைப் பூசிவிட்டாய்?''

அப்போது, ''யாரும் யாருடைய முகத்திலும் கரியைப் பூசிவிடவில்லை; இப்போது என்னைப் பார்ப்பதற்காக இங்கே வந்திருந்தாளே ஒருத்தி, அவள் அவனுடைய தங்கையாம்-அவளைப் பார்த்ததும் அவன் கம்பி நீட்டிவிட்டிருக்கிறான்; நடந்தது அவ்வளவுதான்!'' என்றாள், அங்கே வந்த மீனாட்சியம்மாள்.

''யார் அம்மா, அது? நான் இந்தத் தரை விரிப்பை எடுத்துக்கொண்டு வரும்போது, 'அம்மா இருக்கிறார்களா?' என்று கேட்டுக்கொண்டு வந்ததே ஒரு பெண், அதுவா?'' என்று கேட்டாள் ராதா.

''ஆமாம், அவளேதான்!'' என்றாள் அவள்.

''தங்கையிடம் அவ்வளவு பயமா, அவருக்கு?''

''பயம் தங்கையிடம் இருக்குமென்றுத் தோன்ற வில்லை; தன்னைப் பெற்றவர்களிடம் இருக்கும் போலிருக்கிறது, அவனுக்கு!''

''அதற்காக?''

''அவள் போய் அவர்களிடம் சொல்லிவிட்டால் என்ன செய்வது என்று பயந்து ஓடிப்போயிருப்பான், அவன்! ஏண்டி பாமா, அப்படித்தானே?'' என்றாள் மீனாட்சியம்மாள், பாமாவின் பக்கம் திரும்பி.

''அது என்னமோ, எனக்குத் தெரியாது!'' என்றாள் அவள், கையைப் பிசைந்துகொண்டே.

அதற்குள் எதையோ நினைத்துப் பெருமூச்சு விட்டபடி ராதா சொன்னாள்:

''பயம் மற்ற விஷயங்களில் இருப்பது சரி; அது இந்த விஷயத்தில் இருப்பது...''

''அவனுக்கும் நல்லதில்லை, நமக்கும் நல்லதில்லை என்றுதான் அவனை நான் இங்கே அழைத்துக்கொண்டு வரச் சொன்னேன். அதற்குக் குறுக்கே வந்து சேர்ந்தாள், அவள் ஒருத்தி!''

''அந்தப் பெண்ணை நீங்கள் ஒன்றும் கேட்க வில்லையா?''

''கேட்டேன்; அவள்தான் சொன்னாள், அவன் என் அண்ணன் என்று, 'ரொம்ப மிரட்டுவாயோ?' என்று அவள் வாயைக் கிண்டிப் பார்த்தேன்; 'பயந்தால் மிரட்ட வேண்டியதுதானே?' என்றாள் அவள்!''

''பொல்லாத பெண்ணாயிருக்கும் போலிருக்கிறதே? அப்படியே அது வந்தால்தான் என்ன? எப்படியும் அதற்குத் தெரிந்தது தெரிந்துவிட்டது; அவர் பாட்டுக்கு உள்ளே வந்திருக்கலாமோ இல்லையோ?''

''அந்த அளவுக்கு தைரியம் இந்த நாட்டு இளைஞருக்கு எங்கேடி, இருக்கிறது? நீதிமன்றத்தில்கூட, 'அவர் என்னை அழைத்துக்கொண்டு போகவில்லை; நான்தான் அவரை அழைத்துக்கொண்டு போனேன்!' என்று ஓடிப்போன காதலியல்லவா ஓடிப்போன காதலனுக்கு முன்னால் வந்து சொல்லி அவனைக் காப்பாற்ற வேண்டியிருக்கிறது?''

''அந்த ரகத்தைச் சேர்ந்த இளைஞராய்த்தான் அவரும் இருப்பார் போலிருக்கிறது!-ஏண்டி, அப்படித்தானே?'' என்றாள் ராதா, பாமாவின் பக்கம் திரும்பி.

''அது என்னமோ, எனக்குத் தெரியாது!'' என்று அவளுக்கும் அதே பதிலைச் சொன்னாள் பாமா.

''செய்வதையெல்லாம் செய்து விட்டு, அதை மறைப்பதாக நினைத்துக்கொண்டு இப்படிச் சொல்வது இந்த நாட்டுப் பெண்களின் வழக்கம். இதனால்தான் இவர்களில்

பலர் கடைசி வினாடியில் தங்கள் உயிரைத் தாங்களே மாய்த்துக் கொள்ள வேண்டியிருக்கிறது!''

மீனாட்சியம்மாள் இப்படிச் சொன்னாளோ இல்லையோ, ராதாவின் கண்களில் நீர் மல்கிவிட்டது; ''அப்படி எதுவும் நடக்கவிடாமல் நீங்கள்தானம்மா, இவளைக் காப்பாற்ற வேண்டும்!'' என்றாள், அவளுடைய கால்களைப் பற்றாத குறையாக.

''அடப் பைத்தியமே, அதற்குள் அழ ஆரம்பித்து விட்டாயா நீ? உண்மையைச் சொல்லப்போனால் யாரையும் யாராலும் காப்பாற்றிவிடமுடியாது; அவரவர்களை அவரவர்களேதான் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். அதற்கு முதலில் எதற்கும் அஞ்சாத நெஞ்சுறுதி வேண்டும்; அது இல்லையென்றால், இவள் அவனைக் காதலிப்பதைவிடக் காதலிக்காமலே இருந்து விடலாம்!'' என்றாள் அவள்.

''இனிமேல் அது எப்படி அம்மா, சாத்தியம்?'' என்றாள் இவள்.

''சாத்தியமில்லைதான்! அதற்காக இவள் எடுத்ததற்கெல்லாம் 'அது என்னமோ எனக்குத் தெரியாது, அது என்னமோ எனக்குத் தெரியாது!' என்று சொல்லிக் கொண்டிருந்தால் எல்லாவற்றையும் நாமே தெரிந்துக் கொண்டு விட முடியுமா, என்ன?''

''நீங்கள் சொல்வதும் உண்மைதான்!-ஏண்டி பாமா, உனக்குத் தெரிந்ததைச் சொல்லேண்டி?'' என்றாள் ராதா, மறுபடியும் பாமாவின் பக்கம் திரும்பி.

அவ்வளவுதான்; ''அது என்னமோ எனக்குத் தெரியாது, அக்கா!'' என்று சொல்லிக்கொண்டே அவள் 'ஓ'வென்று அழவே ஆரம்பித்துவிட்டாள்!

மீனாட்சியம்மாள் சிரித்தாள்; சிரித்துவிட்டுச் சொன்னாள்:

''அது என்னமோ எனக்குத் தெரியாது என்பதற்கு அடுத்தபடியாக இந்த நாட்டு பெண்களுக்குத் தெரிந்தது இது

தான்! ஒரு காரணமும் இல்லாமலே இவர்கள் சிரிப்பார்கள்! இவர்கள் அழுவதற்கும் அர்த்தம் கிடையாது; சிரிப்பதற்கும் அர்த்தம் கிடையாது. இந்த லட்சணத்தில் இவர்களுடையக் காதல் வாழ்வதற்கா பயன்படும்? சாவதற்குத்தான் பயன்படும்!''

''ஐயோ, அப்படிச் சொல்லாதீர்கள் அம்மா! அவள் வாழாவிட்டால் நானும் இந்த உலகத்தில் வாழ முடியாது!''

''இப்போது மட்டும் நீ வாழ்ந்துக் கொண்டா இருக்கிறாய்?-இல்லை; உன் தம்பி வாழ்வதற்காக, உன் தங்கை வாழ்வதற்காக நீ வினாடிக்கு வினாடி செத்துக்கொண்டிருக்கிறாய்!''

இதைக் கேட்டுக் கொண்டே அங்கு வந்த சொக்கலிங்கனார், ''பாரத நாட்டுப் பெண் குலத்தின் பெருமையே அதுதானே?'' என்றார் தம் மனைவியிடம் சிலேடையாக.

''நன்றாகச் சொன்னீர்கள்; இப்படிச் சொல்லிச் சொல்லித் தான் இந்த நாட்டு ஆண்கள், பெண்களை ஏமாற்றிக் கொண்டிருக்கிறார்கள்!'' என்றாள் அவள், அந்தச் சிலேடையைப் புரிந்துகொண்டு.

''உங்களை ஏமாற்ற இன்னொருவர் வேண்டுமா, என்ன? ஒரு பக்கம் ஏமாந்துகொண்டே, இன்னொரு பக்கம் 'நாங்கள் ஏமாற மாட்டோம்' என்று மார்தட்டிக் கொண்டு இருப்பவர்களல்லவா, நீங்கள்?''

''அப்படித்தான் சொல்கிறாள், பாமாவும்!''

''ஏன், அவள் யாரிடமாவது ஏமாந்துவிட்டாளா, என்ன?''

''இல்லை; ஏமாறப் பார்க்கிறாள்!''

இந்தச் சமயத்தில் பாமா கொஞ்சம் துணிந்து, ''அப்படியொன்றும் நான் ஏமாந்துவிட மாட்டேன், அம்மா!'' என்றாள், தன் கண்ணீரைத் துடைத்துக்கொண்டே.

''அப்படிச் சொல்லுடி, அப்படிச் சொல்லு! அதுதானே வேண்டும் என்கிறேன், நான்!'' என்றாள் மீனாட்சியம்மாள், அவளை உற்சாகத்துடன் தட்டிக் கொடுத்து.

''ஆம், பாமா! பாரத நாட்டுப் பெண் குலம் பிறருக்காகச் சாவதை மட்டும் பெருமையாகக் கொண்டால் போதாது; வாழ்வதையும் பெருமையாகக் கொள்ளவேண்டும். என்ன, தெரிந்ததா?'' என்றார் சொக்கலிங்கனார்.

அவள் வாயைத் திறக்கவில்லை; 'தெரிந்தது' என்பதற்கு அடையாளமாகத் தலையை மட்டும் ஆட்டினாள்.

''இதோ பார், மீனாட்சி! இவள் எடுத்ததற்கெல்லாம் 'அது என்னமோ எனக்குத் தெரியாது, அது என்னமோ எனக்குத் தெரியாது' என்று சொல்கிறாளே, அதிலும் அர்த்தமில்லாமற் போகவில்லை. பார்க்கப் போனால், காதலே அர்த்தமில்லாதது தானே?-உதாரணத்துக்கு என்னையும் உன்னையும்தான் எடுத்துக்கொள்ளேன்? -என்னை நீ ஏன் காதலித்தாய், உனக்குத் தெரியாது; உன்னை நான் ஏன் காதலித்தேன், எனக்குத் தெரியாது. அதே மாதிரிதான் இவளும் அவனைக் காதலித்திருப்பாள்; அவனும் இவளைக் காதலித்திருப்பான்-ஏன் பாமா, அப்படித்தானே?''

அதற்கும் அவள் வாயைத் திறக்கவில்லை; 'ஆமாம்' என்பதற்கு அடையாளமாகத் தலையை மட்டும் ஆட்டினாள், குனிந்த தலையை நிமிர்த்தாமல்.

''இருக்கலாம்; காதலுக்கு எந்தவிதமான அர்த்தமும் இல்லாமல் இருக்கலாம். ஆனால் எனக்கும் உங்களுக்கும் இருந்த தைரியம் இவர்களுக்கு இல்லையே?-எனக்கு இருந்ததுபோல் பாமாவுக்கு ஒரு தந்தை இருந்து, அந்தத் தந்தையிடம் ''உங்கள் பெண்ணை நான் விரும்புகிறேன், அவளும் என்னை விரும்புகிறாள். நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' என்று உங்களைப் போல் வந்து கேட்கவேண்டியிருந்தால் அவன் என்ன செய்திருப்பான்? இல்லை, இவள்தான் என்ன செய்திருப்பாள்?''

''ஏன், இவளுடைய தந்தையைப் பார்த்ததும் அவன் மூர்ச்சையாகியிருப்பான். இவள் ஓடோடியும் வந்து அவன் தலையைத் தூக்கித் தன் மடியின் மேல் வைத்துக்கொண்டு, 'இங்கே பாருங்கள், அப்பா போய்விட்டார்; இனிமேல் நீங்கள் தைரியமாகக் கண்ணைத் திறக்கலாம்' என்று சொல்லியிருப்பாள்; 'உண்மைதானே, பொய்யில்லையே?' என்று ஒரு முறைக்கு இரு முறையாகக் கேட்டுத் தெரிந்து கொண்டு, அவன் கண்ணைத் திறந்திருப்பான்!-என்ன பாமா, அப்படித்தானே?''

அவ்வளவுதான்; 'களுக்'கென்று சிரித்துவிட்டாள் அவள்! அவரும் அவளுடன் சேர்ந்து சிரித்தபடி, ''குற்றம் இவள் மீதுமில்லை; அவன் மீதுமில்லை. இந்தக் காலத்து நாகரிகம் அப்படி!-பேண்ட்டும் கோட்டும் அணிந்துக் கொண்டுவிட்டால் 'நாகரிகம் முடிந்தது' என்று ஆண்கள் நினைத்துவிடுகிறார்கள்; கலாசாலை வாசலில் கால் வைத்துவிட்டால், 'நாகரிகத்தின் சிகரத்தையே எட்டிப் பிடித்துவிட்டோம்' என்று பெண்கள் நினைத்து விடுகிறார்கள். உண்மையில், 'நாகரிகம் என்றால் என்ன?' என்பதே இவர்களுக்குத் தெரிவதில்லை. தெரிந்தால் இவர்கள் எதைக் கண்டும் ஓடமாட்டார்கள்; ஒளிய மாட்டார்கள். தங்களுக்கென்று ஒரு குறிக்கோளுக்காக இவர்கள் எதையுமே நேருக்கு நேராகச் சந்திப்பார்கள். சந்தித்து, தாங்கள் கொண்டக் குறிக்கோளில் வெற்றியும் காண்பார்கள். அத்தகைய வெற்றியைத்தான் நம்முடைய காதலில் நாம் கண்டோம். அதே வெற்றியை இவர்களுடைய காதலில் இவர்களும் காணவேண்டுமானால், இவள் மட்டும் தன் அக்காவுக்குத் தெரிந்து அவனுடன் பழகினால் போதாது; அவனும் தன் அப்பாவுக்குத் தெரிந்து இவளுடன் பழக வேண்டும். அதற்கு முதற்படியாகத் தான் இன்று இவள் அவனுடைய காதைப் பிடித்து இழுத்துக்கொண்டு இங்கே வருவாள் என்று நான் எதிர்பார்த்தேன்; ஏமாற்றி விட்டாளே?'' என்றார் இரு கைகளையும் விரித்தபடி.

''நானா ஏமாற்றினேன், அவர்தானே ஏமாற்றினார்?'' என்றாள் பாமா, மேலும் கொஞ்சம் துணிந்து.

''சபாஷ்! அப்படிப் பேசு; அஞ்சாமல் பேசு!'' என்று அவளை ஊக்கினாள் மீனாட்சியம்மாள்.

''நீ இன்று சொல்வது சரி; ஆனால் இன்னொரு நாள் அவன் எங்களை ஏமாற்றும்படி நீ அவனை விட்டுவிடாதே!'' என்றார் சொக்கலிங்கனார்.

அதுவரை அவர்கள் பேசியதனைத்தையும் அங்கே நின்று கேட்டுக்கொண்டிருந்த பாலு, ''அக்கா விட்டாலும் இனி மேல் நான் விடமாட்டேன், மாமா! இன்னொரு முறை அவர் இங்கே வரட்டும்; காது எட்டாவிட்டாலும் கையைப் பிடித்தாவது, இழுத்துக்கொண்டு வந்துவிடுகிறேன்!'' என்றான், எல்லோரையும் தள்ளிக்கொண்டு முன்னால் வந்து நின்று.

''அப்புறம் என்ன, நீ அவனைக் கொண்டு வந்து வாசலில் நிறுத்த வேண்டியதுதான் பாக்கி!'' என்றார் அவர், அவன் முதுகில் தட்டிக் கொடுத்தபடி.

''சரி, இவர்களுடைய காதல் விவகாரம் முடியும் வரை நீ அவனுக்காகக் கொண்டு வந்து போட்ட நாற்காலி மேஜையெல்லாம் இங்கேயே இருக்கட்டும்; அவற்றைத் தூக்க முடியாமல் தூக்கிக்கொண்டு நீ அங்குமிங்குமாக அலைந்து கொண்டிருக்காதே!'' என்று ராதாவிடம் சொல்லிவிட்டுத் திரும்பினாள் மீனாட்சியம்மாள்.

''அங்கேதான் எங்களுக்கு வேண்டிய மட்டும் இருக்கிறதே, இங்கே இருப்பது இங்கேயே இருக்கட்டும்!'' என்று சொல்லிவிட்டுச் சொக்கலிங்கனாரும் தம் மனைவியைத் தொடர்ந்தார்.

''அவருக்காக நான் வீட்டை அலங்காரம் செய்ததோடு நின்றுவிடவில்லை, அம்மா...!'' என்று மேலே சொல்ல முடியாமல் நிறுத்தினாள் ராதா.

''வேறு என்ன செய்து வைத்திருக்கிறாய்?'' என்று கேட்டபடி, மீனாட்சியம்மாள் அவளை நோக்கித் திரும்பினாள்.

''காரத் திரிகோணம் அவருக்கு மிகவும் பிடிக்கும் என்று பாமா சொன்னாள்; அதற்காக அது கொஞ்சம் செய்து வைத்திருக்கிறேன்!'' என்றாள் ராதா.

''எடுக்கும் போதே காரம் மட்டுமா?'' என்று கேட்டார் சொக்கலிங்கனார்.

''இல்லை, இனிப்பும் செய்து வைத்திருக்கிறேன்!'' என்றாள் அவள்.

''என்ன இனிப்பு?''

''கேசரி!''

''சரி, அவற்றைச் சாப்பிட்டு வைக்க இப்போது உனக்கு ஆட்கள் தேவை. அவ்வளவுதானே? கொண்டு வா, 'வாழ்க, பாமா, மோகன்!' என்று வாழ்த்துக் கூறிக்கொண்டே சாப்பிடுவோம்'' என்று உட்கார்ந்தார் அவர்; அவரைத் தொடர்ந்து மீனாட்சியம்மாளும் உட்கார்ந்தாள்.

# 14. அபாய அறிவிப்பு

பொழுது விடிவதற்கு முன்னால் எழுந்து ஓரிரு மைல்கள் ஓடிவிட்டு வந்து குளிப்பது மணியின் வழக்கம். உடற்பயிற்சிக்காகக் கைக்கொண்டிருந்த அந்த வழக்கத்தை யொட்டி, அன்றும் ஓடி விட்டு வந்து அவன் குளித்துக் கொண்டு இருந்தபோது, ''சார் சார், உங்களுக்கு ஓர் அபாய அறிவிப்பு!'' என்றான் சங்கர்.

''என்ன, ஓட்டல் முதலாளி சோற்றில் சுண்ணாம்பைக் கலந்துகொண்டு இருக்கிறாரா? இல்லை, சாம்பாரில் விழுந்த கரப்பானைத் தூக்கி வெளியே போட்டுக்கொண்டு இருக்கிறாரா?'' என்று மணி கேட்டான்.

''இரண்டுமில்லை; உங்களுக்கு அடுத்தாற்போலிருக்கும் அறையில் புது காதல் ஜோடியொன்று குடியேறியிருக்கிறது!'' என்றான் அவன்.

அவ்வளவுதான்; ''அந்தச் சனியன்களுக்கு வேறு அறையொன்றும் இல்லையா. இங்கே?'' என்று இரைந்தான் மணி.

''இருந்தால் உங்களுக்குப் பக்கத்தில் கொண்டு வந்து சேர்த்திருப்பேனா, சார்?'' என்றான் அவன்.

''சரி, கல்யாணமான காதல் ஜோடியா? இல்லை, கல்யாணமாகாத காதல் ஜோடியா?''

''கல்யாணமாகாத காதல் ஜோடி என்றுதான் நினைக்கிறேன்!''

''அப்படிப்பட்ட ஜோடிகளுக்குக் கூடவா இங்கே இடம் கிடைக்கிறது?''

''ஏன் சார், கிடைக்காது? அந்த விஷயத்தில்தான் நம்முடைய ஓட்டல் முதலாளி 'டபிள் எம்.ஏ.'வாயிற்றே?''

''அது என்னடா அது, டபிள் எம்.ஏ.?''

''உங்களுக்குத் தெரியாதா, சார்? இரண்டு எம்.ஏ.க்களைச் சேர்ந்தாற்போல் ஆங்கிலத்தில் எழுதிப் படித்தால் என்ன வருமோ, அதுதான் சார் அது!''

''அடப் பாவி! இது எந்த சர்வகலாசாலைப் பட்டம்?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டான் மணி.

''தெரியாது சார், அக்கம் பக்கத்தில் உள்ளவர்கள் அவரைப் பற்றிப் பேசும்போது அப்படித்தான் பேசுகிறார்கள்!''

''அவ்வளவு கேவலமான மனிதரா, அவர்?''

''அவர் என்னமோ நல்லவர்தான் சார், பணம் அவரை அந்தப் பாடுபடுத்துகிறது!''

''அதற்காக?''

''நாய் விற்றக் காசு குரைக்கவாப் போகிறது என்று அவர் நினைக்கிறார்!''

''எல்லோரும் அப்படி நினைத்துவிட்டால் இந்த உலகம் என்னடா ஆவது?''

''அதுதான் உருண்டை என்கிறார்களே சார், அதை யாரால் ஒரு நிலைக்குக் கொண்டு வந்து நிறுத்த முடியும்? அது பாட்டுக்கு உருண்டுக் கொண்டே இருக்க வேண்டியது தான்!''

''சரி, அந்தக் காதல் ஜோடி இங்கே எத்தனை நாட்கள் இருக்கப் போகிறதென்றாவது தெரியுமா, உனக்கு?''

''தெரியாது சார், அநேகமாக இந்த மாதிரி ஜோடியெல்லாம் இங்கே ஒரு நாள் கூட முழுக்க இருப்பது கிடையாது. அதாவது...''

''வேண்டாம்; அந்தக் கர்மத்தை நீ என் காது கேட்கச் சொல்ல வேண்டாம்!'' என்று துண்டை எடுத்துத் துடைத்துக் கொண்டே தன் அறைக்கு வந்தான் ·மணி.

சங்கர் அவனைத் தொடர்ந்து வந்து, ''காபி, டீபி ஏதாவது வேண்டுமா, சார்?'' என்று கேட்டான்.

''ஒன்றும் வேண்டாம்; இன்று நான் எங்கேயாவது போய் அஞ்ஞாத வாசம் செய்துவிட்டு வரலாமென்று இருக்கிறேன்!''

''ஏன், ஆபீசுக்குப் போகவில்லையா?''

''அந்த வயிற்றெரிச்சலை ஏன் கேட்கிறாய்? அவர்கள் போயும் போயும் இன்றல்லவா எனக்கு விடுமுறை விட்டிருக்கிறார்கள்?''

''அப்படியானால் சோதனைதான் சார், உங்களுக்கு!'' என்று சொல்லிக் கொண்டே சங்கர் திரும்பினான்.

''இது என்ன சோதனை, வாழ்க்கையே எனக்குச் சோதனையாய்த்தான் இருக்கிறது!'' என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்ட மணி, வெளியே போவதற்காகத்

தன்னைத் தயார் செய்து கொண்டிருந்தபோது, ''மாட்டேன்; கல்யாணத்துக்கு முன்னால் உங்களுடைய இச்சைக்கு நான் ஒரு நாளும் இணங்க மாட்டேன்!'' என்ற பெண்ணின் குரல் அவன் காதில் விழுந்தது.

'யார் இந்தப் பெண்? இவள்தான் அடுத்த அறையில் புதிதாகக் குடியேறியிருப்பவளாயிருக்குமோ? அப்படியிருந்தால் இவளுடைய பேச்சிலிருந்து இவள் வன்முறைக்கு ஆளாகியிருப்பதாகவல்லவாத் தோன்றுகிறது?

ஐயோ பாவம்! எந்தக் கிராதகனை நம்பி இவள் இங்கே வந்து இப்படித் தவிக்கிறாளோ? இந்த நிலையில் இவளை விட்டு விட்டா அஞ்ஞாத வாசம் செய்யப் போவது?

மற்ற தர்மங்கள் எப்படியிருந்தாலும், 'மனித தர்மம்' என்று ஒன்று இருக்கிறதே? அந்தத் தர்மம் இந்த நாளில் சிலருக்கு இப்படிப்பட்ட காட்சிகளைக் காணும்போது கண்ணை மூடிக்கொள்வதாக இருக்கலாம்; இப்படிப்பட்ட அவலக்குரல்களைக் கேட்கும்போது காதைப் பொத்திக் கொள்வதாக இருக்கலாம்-தனக்கோ?-அந்தப் 'பக்குவ நிலை' இன்னும் கிட்டவில்லையே?

இருக்க வேண்டியதுதான்; இந்தக் 'காதல் காட்சி'யின் முடிவு என்னவென்று தெரியும் வரை, தான் இங்கேயே இருக்க வேண்டியதுதான்!

'முடியாத உதவியை யாரும் யாருக்கும் செய்ய வேண்டாம்; முடிந்த உதவியைக் கூடவா யாரும் யாருக்கும் செய்யக் கூடாது? அதைக் கூடச் செய்யாத மனம், செய்ய விரும்பாத மனம், எப்படி மனித மனமாயிருக்க முடியும்?

இது என்னக் கேள்வி? அப்படியும் சிலர் இந்த உலகத்தில் இருக்கத்தானே இருக்கிறார்கள்?

இருக்கட்டும். இருந்து, அவர்கள் அவர்களுக்காகவே வாழட்டும்; அவர்கள் அவர்களுக்காகவே சாகட்டும். தன்னைப் பொறுத்தவரை, தான் அப்படி வாழவும் வேண்டாம்; அப்படிச் சாகவும் வேண்டாம்!

மொழி எதுவாயிருந்தாலும் அதில் அர்த்தமில்லாத சொல் என்று ஏதாவது ஒன்று உண்டா? அதே மாதிரி மனித வாழ்க்கையிலும் ஏன் அர்த்தமில்லாத வாழ்க்கை என்று ஒன்றுகூட இல்லாமல் இருக்கக்கூடாது?

அப்படியிருந்தால் இந்த உலகம் எவ்வளவு அழகா யிருக்கும்!-கனவில் காணும் அந்த அழகான உலகத்தை நனவில் காண முடியாதா?

இப்படி நான் மட்டுமா நினைக்கிறேன்... இப்படி நான் மட்டுமா கேட்கிறேன்? இதற்கு முன் எத்தனையோ பேர் இப்படி நினைத்திருக்கிறார்கள்; இதற்கு முன் எத்தனையோ பேர் இப்படிக் கேட்டிருக்கிறார்கள்!

அவர்கள் எல்லாம் இப்போது எங்கே இருக்கிறார்கள், என்ன ஆனார்கள் என்று கேட்டால், 'மணணோடு மண்ணாக மறைந்துவிட்டார்கள்' என்று சொல்பவர்கள் சுலபமாகச் சொல்லலாம். ஆனால், உண்மை அதுவல்ல; அவர்களுடைய உடல் மண்ணில் மறைந்தாலும், உள்ளம் ஒரு சிலருடைய சொல்லிலாவது, ஒரு சிலருடைய செயலிலாவது இன்று வரை இடம் பெற்றுத்தான் வருகிறது. இல்லாவிட்டால் இந்த உலகமாவது, இன்னும் உயிர் வாழ்வதாவது?

அத்தகையவர்களில் ஒருவனாக வாழ விரும்பும் நான், இப்படி ஒரு பெண் இங்கேத் தவிப்பதை அறிந்தபிறகு, எங்கேப் போவது, எப்படிப் போவது?

இருக்க வேண்டியதுதான்; இந்தக் 'காதல் காட்சி'யின் முடிவு என்னவென்று தெரியும் வரை, தான் இங்கேயே இருக்க வேண்டியதுதான்!

இந்தத் தீர்மானத்துக்கு வந்ததும், ''சங்கர், சங்கர்!'' என்று சர்வரை அழைத்தான் மணி.

''என்ன சார், அஞ்ஞாத வாசம் கைவிடப்பட்டதா?'' என்று கேட்டுக் கொண்டே வந்தான் அவன்.

''அது எப்படித் தெரிந்தது, உனக்கு?''

''உங்களைப் பற்றி உங்களுக்குத் தெரிந்திருப்பதைவிட எனக்கு அதிகமாகவே தெரியும், சார்!'' என்றான் அவன்.

''ஆச்சரியமாயிருக்கிறதே?''

''சரி, இப்போது சூடா ஒரு கப் காபி-அவ்வளவுதானே?''

''ஆமாம்!''

அவன் நடந்தான்; மணி கடைசியாகக் காலில் அணிந்த செருப்பைக் கழற்றி விட்ட இடத்திலேயே விட்டுவிட்டுக் கட்டிலின் மேல் உட்கார்ந்தான்.

''ஏன், என்மேல் உனக்கு நம்பிக்கையில்லையா?'' என்ற ஆணின் குரல் அடுத்தாற்போல் அவன் காதில் விழுந்தது.

மணி சிரித்தான்; சிரித்துவிட்டுத் தனக்குத் தானே சொல்லிக்கொண்டான்:

நம்பிக்கை!-வாழ்க்கையின் ஆணி வேரையே அல்லவா அசைத்துப் பார்க்கிறான், அவன்?-எமகாதகப் பயலாயிருப்பான் போலிருக்கிறது!

இருக்கலாம்-அவன்மேல் அவளுக்கு நம்பிக்கை இருக்கலாம்; அவள்மேல் அவனுக்கும் நம்பிக்கை இருக்கலாம். ஆனால் யாரை யார், எதற்கு நம்புவது என்ற விதிமுறை வேண்டாமா, வாழ்க்கைக்கு? நடைமுறை வேண்டாமா, வாழ்க்கைக்கு?

சாவது நிச்சயமென்றாலும் வாழாமல் இருந்து விடுவதில்லை யாரும்!-அத்தகைய வாழ்வுக்கு அடிப்படை, ஆதாரம் எல்லாம் நம்பிக்கைதானே?-அந்த நம்பிக்கையை ஒருவர் மேல் ஒருவர் வைப்பதென்றால், அதிலும் ஒரு பெண் ஓர் ஆணின் மேல் வைப்பதென்றால், அவ்வளவு எளிதில் வைத்து விட முடியுமா, அதை?

அவனுடைய சிந்தனை முடியவில்லை; அதற்குள் காதலி சொன்னாள்:

''நம்பிக்கை வேறு, எச்சரிக்கை வேறு: தயவு செய்து இரண்டையும் ஒன்றாக்கிக் குழப்பாதீர்கள்!''

காதலன் கேட்டான்:

''இப்போது நீ அந்த எச்சரிக்கைக்காகத்தான் என்னை விட்டு விலகி நிற்கிறாயா?''

''ஆம், விலகி மட்டும் நிற்கவில்லை; 'உண்மையான மனிதனை வெளியே பார்க்காதே; நாலு சுவர்களுக்கு நடுவே பார்!' என்று யாரோ ஓர் அனுபவசாலி சொல்லி யிருக்கிறானே, அவன் சொன்ன மனிதனை நேருக்கு நேராகப் பார்த்துக் கொண்டும் இருக்கிறேன்!''

''அவ்வளவு மோசமாகவா நினைக்கிறாய், என்னைப் பற்றி?''

''இப்படிக் கேட்க வெட்கமாயில்லை. உங்களுக்கு? இந்த ஓட்டல் அறைக்கே நீங்கள் என்னை மோசம் செய்துதானே அழைத்துக் கொண்டு வந்திருக்கிறீர்கள்?''

''இதில் என்ன மோசம் இருக்கிறது? எதிர்பாராத விதமாக மகாபலிபுரம் பஸ் தவறிவிட்டது. 'ஐயோ, இரவு எட்டு மணிக்கல்லவா நான் வீட்டுக்கு வருவதாகச் சொல்லி யிருக்கிறேன்? அதுவரை எங்கே தங்குவது?' என்று நீ தவித்தாய். 'தங்குவதற்கா இடமில்லை?' என்று நான் உன்னை இங்கே அழைத்துக்கொண்டு வந்தேன். அவ்வளவு தானே நடந்தது?''

''இல்லை; அதற்கு மேலும் ஏதோ நடக்கப் பார்க்கிறதே, அதைத்தான் இப்போது நான் விரும்பவில்லை என்கிறேன்!''

''இப்போது விரும்பவில்லையென்றால், அதற்கு இந்த மாதிரி ஒரு சந்தர்ப்பம் வேறு எப்போது வாய்க்கப் போகிறது நமக்கு?''

''வேண்டாம்; அதற்கு இந்த மாதிரி ஒரு சந்தர்ப்பம் வேறு எப்போதுமே நமக்கு வாய்க்க வேண்டாம்!''

காதலி இப்படிச் சொன்னாளோ இல்லையோ, ''சபாஷ்!'' என்று தன் தொடையில் தானே தட்டிக்கொண்டான் மணி. அதற்குள் காதலன் சொன்னான்:

''இப்போதுதான் தெரிகிறது எனக்கு, காதலிப்பதற்கே நாம் லாயக்கில்லை என்று!''

''நாம் என்று சொல்லாதீர்கள்; நான் என்று சொல்லுங்கள்!''

''நன்றி, உன் திருத்தத்துக்கு, ஆனால்...''

''ஆனால் என்ன?''

''கனி கண்டவன் தோல் உரிக்கக் காத்திருப்பதில்லை என்பது கவிஞன் வாக்கு; கடவுள் வாக்கும், கவிஞன் வாக்கும் பொய்ப்பதில்லை என்பதை நீ உணர வேண்டும்!''

''நான் கனி அல்ல; கன்னி!''

''தெரியும்; அதனால்தான் இந்த ஓட்டல் அறைக்கு உன்னை அழைத்துக் கொண்டு வந்திருக்கிறேன். இல்லாவிட்டால் தெருவிலேயே தோலை உரித்து எறிந்துவிட்டுக் கனியை விழுங்கியிருக்க மாட்டேனா, நான்?''

அவள் சிரித்தாள்; ''ஏன் சிரிக்கிறாய்?'' என்று அவன் கேட்டான்.

''ஒன்றுமில்லை. கனிக்கு மட்டுமென்ன, கன்னிக்குக் கூட உங்களைப் போன்றவர்களுக்குத் தெருவே போதும் என்று நினைத்தேன்; சிரிப்பு வந்துவிட்டது!''

''சீச்சீ! அவ்வளவு மட்டமாகவா நினைத்துவிட்டாய், என்னை?''

''உயர்தரமாக நினைப்பதற்குத்தான் ஒன்றுமே இல்லையே, உங்களிடம்?''

''ஏன் இல்லை, எத்தனையோ இருக்கிறது!''

''எத்தனை இருந்து என்ன பிரயோசனம்? அந்த ஒன்று இல்லையென்றால் அத்தனையும் வீணே!''

''எந்த ஒன்று?''

''புத்தி!''

அவன் சிரித்தான்; ''ஏன் சிரிக்கிறீர்கள்?'' என்று அவள் கேட்டாள்.

''ஒன்றுமில்லை. உனக்கு இல்லாததை எனக்கு இல்லை என்றுசொல்கிறாயே, என்று நினைத்தேன்; சிரிப்பு வந்து விட்டது!''

காதலன் இப்படிச் சொன்னானோ இல்லையோ, ''ரொம்பச் சரி; அப்படித்தான் நானும் நினைக்கிறேன். ஏனெனில், புத்தி உள்ளவர்கள் காதலிப்பதில்லை!'' என்று மணி தனக்குத்தானே சொல்லிக் கொண்டான். அதற்குள் காபியும் கையுமாக வந்து நின்றான் சங்கர். அதை வாங்கி ஒரு வாய் குடித்ததும் காதலி சொன்னது கேட்டது.

''நீங்கள் சொல்வது நூற்றுக்கு நூறு உண்மை; இருந்தால் உங்களை நான் காதலித்திருக்க மாட்டேன்!''

அவ்வளவுதான்; ''அடிச் சக்கை, கொன்றுவிட்டாளே!'' என்று தன்னை மறந்து எழுந்து நின்றான் மணி. ''அவசரப் படாதீர்கள்; இப்போது அவன் அவளைக் கொல்லப் போகிறான், பாருங்கள்!'' என்றான் சங்கர். மணி உட்கார்ந்தான்; காதலன் சொன்னான்:

''இப்போது மட்டுமென்ன, என்னை நீ காதலிப்பதாகத் தெரியவில்லையே, எனக்கு?''

''அதைத் தெரிந்துகொள்ளும் வழி இதுவல்ல; வேறு!''

''இருக்கலாம்; ஆனால் அவற்றுக்கெல்லாம் அடிப்படை இதுவே!''

''காதலுக்கு இதுதான் அடிப்படை என்றால், அதை நான் வெறுக்கிறேன்!''

''வெறுப்பும் விருப்பும் இனி உன் கையில் இல்லை; என் கையில்தான் இருக்கிறது!''

இதை அந்தக் காதலன் சொன்னதுதான் தாமதம், இருவரும் கட்டிப் புரளும் சத்தம் மணியின் காதில்

விழுந்தது. அதற்குமேல் அவன் தாமதிக்கவில்லை; விருட்டென்று எழுந்து வெளியே வந்து கதவைத் தட்டினான்.

''யார் அது?'' என்று உள்ளேயிருந்து ஒரு கேள்வி பிறந்தது.

''மனிதன்!'' என்றான் மணி.

''உள்ளேயிருப்பவனும் மனிதன்தான்; நீ போய் உன் வேலையைப் பார்!'' என்றான் அவன்.

அவ்வளவுதான்; அடுத்தகணம் உதை ஒன்றாயிருந்தாலும் கதவு இரண்டாயிற்று!

''நீங்களா!'' என்றாள் அருணா, வியப்புடன்.

''நீயா!'' என்றான் மணி, தன் தலையைத் தானே தொங்க விட்டுக்கொண்டு.

# 15. கலாச்சாரத்தில் ஓர் அனாச்சாரம்!

கதவு உடைந்த சத்தம் கேட்டதும், ''என்னடா, அது?'' என்று கீழே இருந்தபடியே, தம்முடைய குரலை உச்சகட்டத்துக்கு உயர்த்தினார் ஓட்டல் முதலாளி.

''என்ன சர்மாஜி?'' என்று பதிலுக்குக் குரல் கொடுத்துக் கொண்டே, 'மடமட'வென்று கீழே இறங்கி வந்தான் மணி.

அவனைக் கண்டதும் அவருடைய சுருதி ஏனோ குறைந்தது; ''ஒன்றுமில்லை. மேலே ஏதோ சத்தம் கேட்டதே என்று கேட்டேன்-ஏன், கேட்கலாமோ இல்லையோ?'' என்றார் அவர், நெளிவு குழைவுடன்.

''கேளுங்கள் கேளுங்கள், தாராளமாகக் கேளுங்கள்: காலையில் ஒரு காதல் ஜோடிக்கு நீங்கள் இங்கே இடம் கொடுத்தீர்கள் அல்லவா? அந்தக் காதல் ஜோடி முறை தவறி நடக்க முயன்றது; நான் அதைத் தடுக்க முயன்றேன். அதன் பலன் கதவு உடைந்தது-ஏன், உடையலாமோ

இல்லையோ?'' -என்றான் மணி, பேசுவதில் தானும் அவருடைய பாணியையே பின்பற்றி.

''என்ன, இப்படிக் கேட்டுவிட்டீர்கள்! தர்மத்துக்காக எதையும் செய்யலாம் என்று சாஸ்திரமே சொல்கிறதே?- அப்புறம் என்ன, நான் சொல்வது சரியோ இல்லையோ?''

''சரி ரொம்பச் சரி; ஆனால் அந்தத் தர்மம் கல்யாண மாகாத காதல் ஜோடிகளுக்குக் கூட இங்கே இடம் கொடுக்கலாம் என்று சொல்கிறதா? இல்லை, தெரியாமல் தான் கேட்கிறேன்-ஏன், கேட்கலாமோ இல்லையோ?''

''நன்றாகக் கேட்டீர்கள்! புண்ணியத்திலும் புண்ணியம் மகா புண்ணியமல்லவா, அது? தாகத்துக்குத் தண்ணீர் கொடுப்பதில் எத்தனை புண்ணியம் இருக்கிறதோ, அத்தனை புண்ணியம் அதிலும் இருக்கிறது என்று பெரியவர்கள் சொல்கிறார்கள். இல்லையென்றால் அவர்களுக்கு நான் இங்கே இடம் கொடுத்திருப்பேனா?- ஏன், கொடுக்கலாமோ இல்லையோ?''

''கொடுங்கள் கொடுங்கள், தாராளமாகக் கொடுங்கள். ஆனால் தாகத்துக்குத் தண்ணீர் கொடுப்பதில் புண்ணியம் இருக்கலாம்; ஒரு பெண் தன் கற்பை இழப்பதற்கு வசதி செய்துக் கொடுப்பதில் கூடவாப் புண்ணியம் இருக்கிறது?- இதைப்பற்றிப் பெரியவர்கள் என்ன சொல்கிறார்கள், அதை நானும் தெரிந்துக் கொள்ளலாமோ இல்லையோ?''

அவ்வளவுதான்; தர்மத்தையும் புண்ணியத்தையும் விட்டுச் சற்றே நழுவி, ''யார் எதை இழந்தால் என்ன. சுவாமி? அதற்காக எனக்குக் கிடைக்கும் காசைநான் இழந்துவிட முடியுமா? உங்களைப் போன்றவர்களுக்கு ஓர் அறையை வாடகைக்கு விட்டால் நாளொன்றுக்கு ஒரு ரூபாய் எனக்குக் கிடைக்கிறது. அதே அறையை அவர்களைப் போன்றவர்களுக்கு விட்டால் நாளொன்றுக்குப் பத்து ரூபாய் எனக்குக் கிடைக்கிறது. இதில் எதை விரும்புவான் ஒரு வியாபாரி ? அவனுக்குத்தான் கொள்கை,

குறிக்கோள் என்று ஒன்றுமே கிடையாதே!- என்ன, நான் சொல்வது உண்மையோ இல்லையோ?'' என்றார் அவர், வியாபாரத் தோரணையில்.

''இது இல்லாவிட்டால் அது; அது இல்லாவிட்டால் இது. எது இருந்தாலும், எது இல்லாவிட்டாலும் ஒன்று மட்டும் நிச்சயம். அதாவது, எந்த அக்கிரமத்தைச் செய்தாலும் அந்த அக்கிரமத்தைத் தர்மம், புண்ணியம், சாஸ்திரம். சம்பிரதாயம் என்று ஏதாவது ஒன்றின் மேல் செய்ய வேண்டியது. இதுதான் உங்கள் கொள்கை, குறிக்கோள் எல்லாம்- இல்லையா?''

''அதுவேதான், அதுவேதான்''

இதைச் சொல்லிவிட்டு அவர் சிரித்தார்; அந்தச் சிரிப்போ அவனுக்கு நெருப்பாயிருந்தது. இருந்தாலும் அதை ஒருவாறு அடக்கிக் கொண்டு, ''இப்போதுதான் எனக்குத் தெரிகிறது. தன்னுடைய லட்சிய சித்திக்காகப் போரைத் துவங்கிய ஹிட்லர், முதலில் அங்கிருந்த வியாபாரிகளையெல்லாம் ஏன் சுட்டுக் கொல்லச் சொன்னான் என்று?'' எனக் கருவிக்கொண்டே அவன் மேலே போனான்.

''தப்பிவிட்டார்கள் சார், அவர்கள் உங்களிடமிருந்து -தப்பிவிட்டார்கள்!'' என்றான் சங்கர்.

''தொலையட்டும் சனியன்கள்! அந்தச் சனியன்களை அதற்கு மேல் என்னால் என்ன செய்ய முடியும்? என் கண்ணுக்கு முன்னால் படுகுழியில் விழுவதற்கு இருந்தனர். அதை என்னால் பார்த்துக்கொண்டு இருக்க முடியவில்லை. தடுத்தேன்; அவ்வளவுதான் என்னால் முடிந்தது!'' என்று சொல்லிக் கொண்டே தன் அறைக்குள் நுழைந்த மணி. கழற்றி விட்ட செருப்பை மறுபடியும் தன்னுடையக் காலில் மாட்டிக்கொண்டு ''ஏண்டா சங்கர், இந்த ஓட்டல் முதலாளியை இழுத்துக் கொண்டு போய்ப் போலீசாரிடம் ஒப்படைத்துவிட்டு வந்தால் என்ன?'' என்றான் ஏதோ யோசனையுடன் அப்படியும் இப்படியுமாக நடை போட்டுக்கொண்டே.

''வீண் வேலை, சார்!'' என்றான் அவன் உதட்டைப் பிதுக்கி.

''என்னடா, இப்படிச் சொல்கிறாய்?''

''வேறு எப்படிச் சார் சொல்ல முடியும்? அவர்களுக்குத் தெரியாமல் இவர் இங்கே ஒன்றுமே செய்வதில்லையே, சார்!''

''என்ன?''

''ஆமாம் சார், மாதந்தோறும் அவர்களுக்குக் கொடுக்க வேண்டிய 'மாமூ'லை ஒழுங்காகக் கொடுத்துவிட்டுத்தான் இவர் சட்டத்துக்கு விரோதமாக இங்கே என்னவெல்லாம் செய்ய முடியுமோ அவற்றையெல்லாம் ஒழுங்காகச் செய்து கொண்டிருக்கிறார்!''

''அட, பாவிகளா! இதில் ஒழுங்கு வேறு வாழுகிறதா, ஒழுங்கு?''

''சட்டத்துக்கு அடுத்தாற்போல் அதிகமாகப் பேசப்படுவது அதுதானே சார்?''

''ஆமாம், இங்கே எல்லாமே பேசத்தான் படுகிறது!''

''ஏன், எழுதக் கூட எழுதுகிறார்கள், சார்!''

''என்ன இழவோ! நின்று சாதிக்கும் தெய்வமோ இங்கே நின்றுகொண்டே இருக்கிறது; அன்றே சாதிக்கும் அரசோ இங்கே அகப்பட்டதைச் சுருட்டிக்கொண்டு இருக்கிறது. இரண்டும் இப்படியிருந்தால் இந்த உலகத்துக்கு என்று தாண்டா விமோசனம்?''

''இது வேண்டாத கவலை சார், உங்களுக்கு? 'உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பல கற்றும் கல்லார் அறிவிலாதார்!' என்று நம் வள்ளுவர் பெருமான் கூடச் சொல்லியிருக்கிறார், பாருங்கள்! அதுதான் சார், நல்ல வழி!''

''அவர் கூட எதையும் ஒரு நிலையில் வைத்து, எதை யும் ஒரு நிலையில் பார்த்து, ஒன்றையும் சொல்லியி

ருப்பதாகத் தெரியவில்லையேடா, எனக்கு? கொஞ்சம் நிதானமாகப் பார்க்கப் போனால், கல்யாண வீட்டுக்கும் அவர் பூசணிக்காயாயிருந்திருக்கிறார், கருமாந்திர வீட்டுக்கும் அவர் பூசணிக்காயாயிருந்திருக்கிறார் என்றுதான் சொல்லத் தோன்றுகிறது, எனக்கு!''

''அவர் என்ன செய்வார், பாவம்! அதுதான் சார், அந்தக் காலத்திலேயே அவருக்கும், பிழைக்கும் வழியா யிருந்திருக்கிறது; அதுவேதான் சார், இன்றும் நாளையும் கூட நமக்கெல்லாம் பிழைக்கும் வழியாயிருக்கிறது, இருக்கப்போகிறது!''

''வேண்டாம்; அப்படிப்பட்ட உலகத்தில் இன்று வேண்டுமானால் நான் வாழ்ந்துவிட்டுப் போகிறேன்; நாளை நான் வாழவே வேண்டாம்!''

இதைச் சொன்னதும் அவன் நிற்கவில்லை; காலில் இருந்த செருப்பைக் கழற்றி மறுபடியும் விட்ட இடத்திலேயே விட்டு விட்டுக் கட்டிலின் மேல் தொப்பென்று விழுந்தான். விழுந்தவன், தலையணையில் முகத்தைப் புதைத்துக் கொண்டு விம்மி விம்மி அழுதான்.

அந்த அழுகையினூடே ஒரு பாடல்-பாரதியாரின் பாடல்தான் அது-ஆனால் அவன் வழக்கமாகப் பாடும் பாடல்-அவனுடைய இதயத்தின் அடிவாரத்தில் இருந்து மெல்ல எழுந்து ஒலித்தது:

''மோகத்தைக் கொன்றுவிடு-அல்லாலென்
மூச்சை நிறுத்திவிடு!''

ஏதாவது ஒரு விஷயம் தன் சக்திக்கு அப்பாற்பட்ட விஷயம் என்று தோன்றிவிட்டால், அவன் இப்படித்தான் புலம்ப ஆரம்பித்துவிடுவது வழக்கம்; அவன் புலம்பும் போது அவனுடைய இதயமும் மேற்கண்ட பாடலைப் பாடி, அவனுடன் சேர்ந்து புலம்பும். இது அவனையும் அறியாமல் அவனுக்கென்றே அமைந்துவிட்ட வழி; அந்த வழிக்குக்

குறுக்கே சங்கர் என்றும் நிற்பதில்லையாதலால் அன்றும் நிற்கவில்லை!

இப்போதெல்லாம் யார் எங்கே, எந்தத் தவறு செய்தாலும் ஒரு புதிய சமாதானம் சொல்லப்படுவதை நீங்கள் கேட்டிருப்பீர்கள்; அதுதான் 'அவனும் மனிதன் தானே, இவனும் மனிதன்தானே?' என்பது. அதாவது, 'மனிதன் என்றால் தவறு செய்யாமல் இருக்க முடியாது' என்பது அதன் உட்பொருள்!

இருக்கலாம்; சில விஷயங்களில் அது உண்மையா யிருக்கலாம். ஆனால், எல்லா விஷயங்களிலும் அதுதான் உண்மை என்று ஆகிவிடக் கூடாதல்லவா?

அதைத்தான் அருணாவும் சொன்னாள்-'தப்பினோம், பிழைத்தோம்' என்று ஓட்டலை விட்டு வெளியே வந்த சுந்தர், ''நானும் மனிதன்தானே?'' என்று சொல்லி, மறுபடியும் தன்னை ஏமாற்ற முயன்றபோது!

''இப்படிச் சொல்ல வெட்கமாயில்லை, உங்களுக்கு? நீங்களும் மனிதர்தான் என்றால், இந்த உலகத்தில் நாகரிகம், கலாச்சாரம் என்றெல்லாம் பேசப்படுகிறதே, அதெல்லாம் அனாச்சாரமாக அல்லவா ஆகிவிடும்?'' என்றாள் அவள், ஆத்திரத்துடன்.

''எது அனாச்சாரம், எது கலாச்சாரம் என்று தெரியாமல் பேசுகிறாய், நீ! அன்று தன் மேல் காதல் கொண்ட துஷ்யந்தன் தன்னை நெருங்கியபோது, எந்தவிதமானத் தடையும் சொல்லாமல் தன்னை அப்படியே அவனிடம் ஒப்படைத்து விட்டாளே ஒரு பெண். அதுதான் கலாச்சாரம்; இன்று உன்மேல் காதல் கொண்ட சுந்தர் உன்னை நெருங்கியபோது, மூன்றாவது மனிதன் ஒருவன் முண்டியடித்துக் கொண்டு வரும் வரை நீ அவனைப் படாத பாடுபடுத்தி வைத்தாயே, அதுதான் அனாச்சாரம்!'' என்றான் அவன், அமைதியுடன்.

''அட, என் துஷ்யந்த ராஜாவே! இன்று நான் எந்த விதமான தடையும் சொல்லாமல் என்னை அப்படியே உன்னிடம் ஒப்படைத்துவிட வேண்டும்; நாளை நான் கையில் குழந்தையுடன் வந்து உனக்கு முன்னால் நிற்க வேண்டும். நீ என்னைப் பார்த்து, 'யார் நீ?' என்று கேட்க வேண்டும். நான் உன்னைப் பார்த்து, 'அடப் பாவி, என்னையா தெரியவில்லை உனக்கு?' என்றுக் கதற வேண்டும். இதுதானே நீங்கள் சொல்லும் கலாச்சாரம்? -வேண்டாம், ஐயா! என்னுடைய அனாச்சாரம் என்னோடு இருக்கட்டும்; உன்னுடைய கலாச்சாரம் உன்னோடு இருக்கட்டும். நான் வருகிறேன்!'' என்று கடைசியாக அவனைக் கையடித்துக் கும்பிட்டுவிட்டு அவள் நடந்தாள்.

அவள் சென்ற திசையையே ஏமாற்றத்துடன் பார்த்துக் கொண்டு நின்ற அவனை நெருங்கி, ''மன்னிக்க வேண்டும். எதிர்பாராத விதமாக ஏதோ நடந்துவிட்டது; அதைப் பெரிதாக எடுத்துக்கொள்ளாமல் எப்போதும் போல உங்கள் ஆதரவை எனக்கு நீங்கள் அளிக்க வேண்டும்!'' என்றார் சர்மாஜி.

''சரிதான் போங்காணும்! என்னைப் போன்ற 'பெரிய மனிதர் வீட்டுப் பிள்ளைகள்' வந்து தங்கும் இடத்தில் அவனைப் போன்ற 'பொறுக்கிப் பயல்க'ளுக்கு நீர் எப்படி இடம் கொடுக்கலாம்? உம்மால் வந்த வினைதானே இவ்வளவும்?'' என்றான் அவன், எரிந்து விழுந்து.

''கோபித்துக் கொள்ளக் கூடாது! மாதம் பிறந்தால் முப்பதுரூபா முழுசாகக் கிடைக்கிறதே என்று விட்டேன்; அவன் என்னடாவென்றால் வம்புக்காரப் பயலாயிருக்கிறான். நீங்களும் இதுவரை எத்தனையோப் பெண்களை அழைத்துக் கொண்டு இங்கே வந்திருக்கிறீர்களே, இப்படி ஒரு நாளாவது நடந்ததுண்டா?''

''அப்போதெல்லாம் அவனைப் போன்ற தற்குறிகள் இங்கே இல்லை; அதனால் நடக்கவில்லை!''

''தற்குறியாவது, அவன் எம்.ஏ. பட்டதாரி, சார்! சர்க்கார் வேலையில் இருக்கிறான்; நல்ல சம்பளம். தனக்குப் போக மிஞ்சியதையெல்லாம் ஊருக்கு அழுதுவிட்டு, எப்பொழுது பார்த்தாலும் 'உலகம், உலகம்' என்று உளறிக் கொண்டிருக்கிறான்! தனக்கென்று ஒரு கல்யாணமில்லை; தனக்கென்று ஒரு வீடு வாசல் இல்லை. கேட்டால், 'எத்தனையோ பேர் இந்த உலகத்தில் கல்யாணம் செய்துகொள்ள வசதியில்லாமல் இருக்கும்போது எனக்கு மட்டும் ஏன் கல்யாணம்?' என்கிறான்; 'எத்தனையோ பேர் இந்த உலகத்தில் வீடு வாசல் இல்லாமலிருக்கும்போது எனக்கு மட்டும் ஏன் வீடு வாசல்?' என்கிறான்!''

''அப்படிப்பட்டவன் நடைபாதையில் இருக்க வேண்டும்; இங்கே வந்து நம்முடைய கழுத்தை அறுப்பானேன்?''

''அதை எப்படி அவனிடம் சொல்வது என்றுதானே எனக்குத் தெரியவில்லை; சொன்னால் அடித்துவிடுவானோ என்று பயமாயிருக்கிறது!''

''போலீசாரின் உதவியை நாடுவதுதானே?''

''அதற்கும் எங்களுக்கும் சம்பந்தமில்லை என்கிறார்களே, அவர்கள்?''

''சம்பந்தப்படுத்த வேண்டும், நாம்!''

''அந்தக் காரியத்தை நீங்களே செய்துவிட்டால் எனக்கும் நல்லது; உங்களுக்கும் நல்லது!''

''ஆகட்டும், செய்கிறேன்!'' என்று சொல்லிவிட்டு, அவன் ஏதோ எண்ணித் துணிந்தவனாக அங்கிருந்து நகர்ந்தான்; ''மறந்துவிடாதீர்கள்!'' என்று மறுபடியும் அதை அவனுக்கு நினைவூட்டிவிட்டுத் திரும்பினார் சர்மாஜி.

# 16. சிரிப்பும் கண்ணீரும்

திட்டமிட்டுத் தன்னைக் கற்பழிக்கத் துணிந்தவன் ஒரு சட்டக் கல்லூரி மாணவன்!-இதை நினைக்க நினைக்க அருணாவுக்கு வியப்பாக மட்டுமில்லை; வேதனையாகவும் இருந்தது.

படிக்காதவர்கள் எதையும் திட்டமிடாமல் செய்தால், படித்தவர்கள் எதையும் திட்டமிட்டுத்தான் செய்வார்கள் போலிருக்கிறது! இல்லாவிட்டால் அவர்கள் அகப்பட்டுக் கொள்வதைப் போல இவர்களும் அல்லவா அகப்பட்டுக் கொள்வார்கள்?

அதிலும், இவன் சட்டம் படிப்பவன்; நாளைக்கு யோக்கியனை அயோக்கியன் என்றும், அயோக்கியனை யோக்கியன் என்றும் நிரூபிக்க வேண்டி என்னைப் போன்ற அபலைகளை ஏமாற்றுவதன் மூலம் இப்போதே தன்னைத் தயார் செய்துகொள்கிறான் போலிருக்கிறது!

இவன் மனிதனாம்!-தவறு செய்பவர்கள் எல்லாம் மனிதர்கள் என்று ஆகிவிட்டால், தவறு செய்யாதவர்கள் எல்லாம் தெய்வமா, என்ன?

இவர்கள் சொல்வதைப் பார்த்தால், யாரோ ஒரு ஞானி பட்டப்பகலில் விளக்கை ஏற்றிக்கொண்டு தேடினானாமே மனிதனை, அந்த ஞானி இப்போது இருந்தால் கண்ணை மூடிக் கொண்டு மனிதனைக் கண்டுபிடித்து விடலாம் போலிருக்கிறதே?

'சுந்தரம்' என்ற பெயரைச் 'சுந்தரி' என்று மாற்றி வைத்துக்கொண்டு இவன் அடிக்கடிக் கல்லூரிக்குப் 'போன்' பண்ணும்போதே எனக்குச் சந்தேகந்தான். முன் அனுபவம் இல்லாமல் இந்த முன் யோசனை இவனுக்கு எப்படி உதித்தது என்று? 'அதில் சந்தேகம் ஒன்றுமில்லை' என்று இப்போதல்லவா தெரிகிறது எனக்கு?

இல்லாவிட்டால் மகாபலிபுரம் பஸ்ஸைத் தவற விடுவதற்கு அந்த முன் யோசனை இவனுக்கு உதவியிருக்குமா? இல்லை, பொழுது போக்குக்கென்று ஓட்டலில் அறை எடுக்கத்தான் அந்த முன் யோசனை இவனுக்கு உதவியிருக்குமா?

நல்லவேளை, மணி அண்ணன் மட்டும் அங்கே இல்லாமல் இருந்திருந்தால், என் கதி என்னவாகியிருக்கும்?

எனக்குத் தெரியாமல் என் கதி ஒன்றும் ஆகியிருக்காதென்றாலும், ஊர் சிரிக்கும் அளவுக்கல்லவா அந்தக் கிராதகனுடன் நான் போராடவேண்டியிருந்திருக்கும்?

இப்போது மட்டுமென்ன, ஊர் சிரிக்காவிட்டாலும் என் உள்ளமே என்னைப் பார்த்துச் சிரிக்கிறதே! இனி நான் அந்த மணி அண்ணன் முகத்தில் எப்படி விழிப்பேன்? என்னுடன் இருந்த 'புண்ணியாத்மா யார்' என்று கேட்டால், என்னவென்று சொல்வேன்?

இனி அவர் என்னைப் பற்றி என்ன நினைப்பார்? என்னுடன் இருந்தவனைப் பற்றித்தான் என்ன நினைப்பார்?

இது ஒரு வேளை அவரால் அப்பாவுக்குத் தெரிந்தால், அம்மாவுக்கும் தெரிந்தால், அண்ணாவுக்குத் தெரிந்தால், அவர்கள்தான் என்னைப்பற்றி என்ன நினைப்பார்கள்?

அவர்கள் என்ன நினைப்பார்களோ என்னமோ, அந்த நினைப்பே எனக்கு வேதனையாயிருக்கிறதே!

இனி என் விளையாட்டு, வேடிக்கையெல்லாம் அந்த வேதனையோடு வேதனையாக வேண்டியதுதானா?-அடப் பாவி, இதற்கா உன்னை நான் காதலித்தேன்?

'காதலிப்பவர்கள் சிரிப்பதற்கு மட்டும் தயாராயிருந்தால் போதாது; கண்ணீர் விடுவதற்கும் தயாராயிருக்க வேண்டும்' என்பது என்னமோ எனக்கும் தெரிந்ததுதான்; ஆனால் அந்தக் கண்ணீரை இந்த நிலையிலா விடுவது, நான்?

கொடுமை, கொடுமை! இனம் தெரிந்து கொள்ள முடியாத இந்த இளம் பிராயத்தில் நான் இந்த மனிதனைக் காதலித்ததும் கொடுமை; அந்தக் காதலின் விளைவாக இன்று நான் கண்ணீர் விடுவதும் கொடுமை!

போதும்; ஏழேழு பிறவிக்கும் இந்த அனுபவமே போதும்!

இந்தத் தீர்மானத்துக்கு வந்ததும் மணியிடம் ஓடோடியும் சென்று, ''அண்ணா! என்னை மன்னித்து விடுங்கள், அண்ணா! இனிமேல் நான் இந்த மாதிரி வேலைக்கே போக மாட்டேன்; என்னைப் பற்றி யாரிடமும் சொல்லி விடாதீர்கள், அண்ணா!'' என்று கேட்டுக்கொள்ள வேண்டும் போல் தோன்றிற்று அவளுக்கு; திரும்பினால்-அந்தப் பாவி இன்னும் அங்கேயே நின்றுகொண்டிருந்தால்?...

நின்று கொண்டிருந்தால் என்ன, அவன் முகத்தில் காறித் துப்பிவிட்டு மேலேப் போவது!

நினைப்பதற்கு எல்லாம் சுலபமாய்த்தான் இருக்கிறது; ஆனால் நினைத்தபடி நடப்பதென்பது அவ்வளவு சுலபமாகவா இருக்கிறது?

அவனால் நான் கெடவில்லை என்பதும் ,என்னால் அவன் கெடவில்லை என்பதும் என் மனதுக்கும் தெரியும்; அவன் மனதுக்கும் தெரியும். ஆனால் உலகத்தின் மனதுக்கு அதுத் தெரியுமா?-ஆத்திரத்தில் அவன் ஏதாவது தப்பும் தவறுமாகச் சொல்லி வைக்க, அதையும் நாலு பேர் நம்பி வைக்க, அதனால் போவது என் மானமாகவல்லவா இருக்கும்?-வேண்டாம்; இப்போது போய் மணி அண்ணனைப் பார்க்க வேண்டாம்!...

இந்த எண்ணத்துடன் அவள் முன்னால் வைத்த காலைப் பின்னால் வைத்தபோது, ''ஏண்டி, இங்கே நின்று அழுது கொண்டிருக்கிறாய்?'' என்று யாரோ கேட்பது அவள் காதில் விழுந்தது. திடுக்கிட்டுச் சுற்றுமுற்றும் பார்த்தாள்; பக்கத்தில் இருந்த புத்தகக் கடையில் ஏதோ ஒரு புத்தகத்தை வாங்கிக்

கொண்டிருந்த மீனாட்சியம்மாள் அவளை நோக்கி வந்து கொண்டிருந்தாள்.

அவளைக் கண்டதும் அவசர அவசரமாகத் தன் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, ''நானா, அழுகிறேனா? இல்லையே!'' என்று சிரித்தாள் அருணா.

''தேவலையே? இந்த வயதிலேயே அழுவதற்கும், அதே சமயத்தில் சிரிப்பதற்கும் கற்றுக்கொண்டு இருக்கிறாயே, நீ!''

''ஆமாம், நேற்று வரை எனக்குச் சிரிப்பதற்கு மட்டுந் தான் தெரிந்திருந்தது; இன்று அழவும் தெரிந்துவிட்டது!''

''யாரால் தெரிந்தது, அது?''

''யாராலா, யாராலா? என் அம்மாவால்தான் தெரிந்தது, அது!''

அவள் சொன்ன தோரணையிலிருந்தே அது பொய் என்று ஊகித்துக் கொண்ட மீனாட்சியம்மாள், அதற்கு மேல் அவளைச் சோதனைக்கு உள்ளாக்க விரும்பாமல், ''போகட்டும்; ஆனால் ஒன்றை மட்டும் நீ எப்போதும் உன்னுடைய நினைவில் வைத்துக் கொள்-'இந்த உலகத்தில் நீ சிரிக்கும்போது உன்னுடன் சேர்ந்து சிரிக்க எத்தனை பேர் வேண்டுமானாலும் தயாராயிருப்பார்கள்; அழும்போது உன்னுடன் சேர்ந்து அழ ஒருவரும் தயாராயிருக்க மாட்டார்கள்' என்பதுதான் அது!'' என்று சொல்லி, அவளை லேசாகத் தட்டிக் கொடுத்துவிட்டு மேலே சென்றாள்.

''எவ்வளவு பெரிய உண்மை! அதை எப்பேர்ப்பட்ட சமயத்தில் அவர்கள் எனக்கு நினைவூட்டிவிட்டுச் செல்கிறார்கள்!'' என்று வியந்த அருணா, வைத்த விழி வாங்காமல் அவளையேப் பார்த்துக்கொண்டு நின்றாள்!

அப்போது, 'அன்று மாலை வரை எங்கேயாவது பொழுதை ஓட்டவேண்டுமே' என்ற கவலை அருணாவின் உள்ளத்தில் எழுந்தது-அதற்கும் மீனாட்சி அம்மாளின் வீட்டையே தஞ்சமடைந்தால் என்ன?

''அம்மா, அம்மா! நானும் வருகிறேன், அம்மா!'' என்று கத்திக்கொண்டே இரண்டடி எடுத்து வைத்தாள் அவள். அதற்குள், 'ஏன் வருகிறாய், எங்கே வருகிறாய் என்று அவர்கள் கேட்டால் என்ன பதில் சொல்வது?' என்ற எண்ணம் குறுக்கிட்டது-ஏதோ காரியமாகப் போனோம், வந்தோம் என்றால் பரவாயில்லை; ஒரு காரியமும் இல்லாமல் ஒரு நாள் முழுவதும் ஒரு வீட்டில் உட்கார்ந்திருப்பது என்றால்?-பார்ப்பவர்களின் உள்ளத்தில் எத்தனையோ விதமான சந்தேகங்களை எழுப்புமே, அது!

அதற்கெல்லாம் என்ன சமாதானம் சொல்லிக்கொண்டு இருப்பது? அப்படியே சொன்னாலும் அதை எத்தனை பேர் நம்புவார்கள்?

வேண்டாம்; அனாவசியமாக அவர்களுக்குத் தொந்தரவு கொடுக்க வேண்டாம்!

இந்த முடிவுக்கு வந்ததும் அவள் மறுபடியும் முன்னால் எடுத்து வைத்தக் காலைப் பின்னால் எடுத்து வைத்தாள்.

ஒரு வேளை நாம் அழைத்தது அவர்களுடைய காதில் விழுந்திருக்குமோ?-பார்த்தாள்; கண்ணுக்கு எட்டிய தூரம் வரை பார்த்தாள்-இல்லை; விழவில்லை.

விழுந்திருந்தால் இந்நேரம் திரும்பி வந்து, ''ஏன்?'' என்று கேட்டிருக்க மாட்டார்களா, அவர்கள்?-இல்லை, விழவில்லை.

நல்ல வேளை, பிழைத்தேன்!-நீண்ட பெருமூச்சுடன் தன் கைக்கடிகாரத்தைப் பார்த்தாள் அவள்; மணி ஒன்று!

எப்படியோ அரை நாளைக் கழித்துவிட்டோம்; இன்னும் அரை நாள்தான் பாக்கி-எங்கேயாவது போய், எதையாவது சாப்பிட்டுவிட்டு...

எங்கே போவதாம், எதைச் சாப்பிடுவதாம்?-ஒன்றும் இறங்காது; இப்போதுள்ள நிலையில் இன்னும் இரண்டு நாட்களுக்கு ஒன்றுமே இறங்காது!

பேசாமல் ஏதாவது ஒரு பகல் காட்சிக்குப் போய்...

...அங்கே படமாத் தெரியப் போகிறது, தனக்கு? வேறு என்னென்னவோ அல்லவா தெரியும்?-எது தெரிந்தால் என்ன?-தனக்குப் படமா முக்கியம், பொழுது போவதல்லவா முக்கியம்?

பையில் சில்லறை இருக்கிறதா என்று பார்த்தாள்; இருந்தது-''சரி!'' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டு அவள் பஸ் ஏறப் போனபோது ''நில்'' என்று யாரோ தன்னை அதட்டும் குரல் கேட்டுத் திரும்பினாள்-மணி. கொஞ்ச நேரத்துக்கு முன்னால் அவள் எந்த மணியைப் பார்க்க வேண்டுமென்று விரும்பினாளோ, அந்த மணி!

''என்ன அண்ணா?''-அவள் குரல் தழுதழுத்தது.

''இன்னொரு முறை கூப்பிடாதே, என்னை அண்ணா என்று!''-அவன் குரலில் இடிஇடித்தது.

''இல்லை, கூப்பிடவில்லை!''

''உன்னுடன் பேசக்கூட எனக்கு விருப்பமில்லைதான்; ஆனாலும் பேசுகிறேன்-என்னைக் கண்டு நீ வீணாக மிரண்டுக் கொண்டு இருக்கக் கூடாதே என்பதற்காக!''

''இப்படிப் பேசி என்னை வதைப்பதைக் காட்டிலும் நீங்கள் என்னை அடித்தே வதைக்கலாமே, அண்ணா!''

''மூடு வாயை; உன்னை அடிக்கும் அளவுக்கு நான் இன்னும் மிருகமாகிவிடவில்லை-போ, தைரியமாகப் போ! உன் அண்ணன் உன்னைப் பற்றி, உன்னுடைய நடத்தையைப் பற்றி, யாரிடமும் எதுவும் மறந்துக் கூடச் சொல்லமாட்டான் என்ற நம்பிக்கையுடன் போ, போ! தைரியமாகப் போ!''

''இதைச் சொல்லத்தான் நீங்கள் இவ்வளவு தூரம் வந்தீர்களா, அண்ணா?''

''ஆமாம்; உன்னுடைய பயத்தைக் கொண்டே உன்னைச் சித்திரவதை செய்ய நான் விரும்பவில்லை-அதற்காகத்தான் வந்தேன்; நீ போகலாம்!''

அவன் திரும்பினான்; அவனுக்குத் தெரியாமல் அவன் பாதம் பட்ட இடத்தைத் தொட்டுத் தன் கண்ணில் ஒற்றிக் கொண்டு அவள் கிளம்பினாள்!

அன்று என்னமோ, தெரியவில்லை-சினிமாக் கொட்டகையிலாவது அருணாவுக்குச் சோதனையில்லாம லிருந்ததா என்றால், அதுவும் இல்லை. காரணம், அவளுக்கு முன்னாலேயே மோகனும், பாமாவும் அங்கே உட்கார்ந்திருந்ததுதான்!

# 17. அறிமுகம்

மனிதன் குற்றம் செய்யாதவரை, அப்படியே செய்தாலும் அது பிறருக்குத் தெரியாதவரை, யாரைக் கண்டும் அவன் பயப்படுவதில்லை. செய்து விட்டாலோ, செய்த குற்றம் பிறருக்குத் தெரிந்து விட்டாலோ, மற்றவரைக் கண்டு மட்டும் அவன் பயப்படுவதில்லை; தன்னைத் தானே கண்டும் பயப்படுகிறான். ஏன், தன்னுடைய நிழலைக் கண்டும் பயப்படுகிறான்!-அந்த நிலையிலேதான் அன்று இருந்தாள், அருணா.

ஆகவே, தனக்கு முன்னால் மோகனும், பாமாவும் அங்கே வந்து உட்கார்ந்திருப்பதைக் கண்டதும், அவள் முதலில் எழுந்து போய்விடலாமா என்று நினைத்தாள்-ஆனால் எங்கே போவது?-அதுதான் தெரியவில்லை, அவளுக்கு.

டிக்கெட்டை மாற்றிக்கொண்டு மேல் வகுப்புக்குப் போய் விடலாம் என்றாலோ, அவள் வந்திருந்த மேல் வகுப்புக்கு மேல் அந்தத் தியேட்டரில் வேறு எந்த மேல் வகுப்பும் இல்லை!

கீழ் வகுப்புக்கு வேண்டுமானால் போய்விடலாம். அதற்காக இப்போதுள்ள டிக்கெட்டை மாற்றிக்கொள்ள

முடியாதென்றாலும், வேறு டிக்கெட்டை வேண்டுமானாலும் வாங்கிக் கொண்டு விடலாம். ஆனால்,கீழ் வரிசைக்குப் போகும்போது மேல் வரிசையில் உள்ளவர்கள் தன்னைப் பார்த்துவிட்டால்?- அதனாலென்ன, விளக்கை அணைத்த பிறகு போய் உட்கார்ந்து கொண்டுவிட்டால் போகிறது!

இது என்ன பைத்தியக்காரத்தனம்!-அணைக்கப்பட்ட விளக்குகள் எப்போதும் அணைக்கப்பட்ட விளக்குகளாகவே இருந்துவிடுமா, என்ன? மறுபடியும் அவை ஏற்றப் படாதா?-அப்போது நான் எங்கே போவேன்? அப்போது நான் இவர்களுடைய பார்வையிலிருந்து எப்படித் தப்புவேன்?

நல்ல வேடிக்கை இது!-நேற்றுவரை வாழ்க்கையில் வெளிச்சத்தை எதிர்பார்த்துக்கொண்டு இருந்தவள் நான்; இன்றோ இருட்டை எதிர்பார்க்கிறேன்!

ஆம்; திருடனுக்குப் பிடிக்காத வெளிச்சம், எனக்கும் பிடிக்கவில்லை இப்போது!

வேண்டும்; நன்றாக வேண்டும்!-பெற்றோர் செலவில் பெற்ற புத்திசாலித்தனத்தை வைத்துக்கொண்டு, பெற்றோரையே முட்டாள்கள் என்று நினைத்துக் கொண்டு விட்டவள் அல்லவா, நான்?-வேண்டும்; நன்றாக வேண்டும்!

அந்தச் சண்டாளனுக்காக அவர்களிடம் நான் சொன்னதென்னமோ ஒரே ஒரு பொய்தான்! அந்த ஒரே ஒரு பொய்யை மெய்யாக்குவதற்காக இப்போது நான் எத்தனை பொய்கள் சொல்லவேண்டியிருக்கிறது? என்ன பாடு படவேண்டியிருக்கிறது?

அந்தப் பொய்யைக் கூட நானா சொன்னேன், அவர்களிடம்? - இல்லை; அவன் சொன்னதை நான் அப்படியே சொல்லிவிட்டேன் அவர்களிடம்!-உண்மையில் எனக்கும் தெரியாதே, அன்று அவன் சொன்னது பொய் என்று?

சொன்னது பொய்யாயிருந்தாலும், அதை எவ்வளவு அழகாகச் சொன்னான், அவன்!-'கடவுளுக்கு, உருவம் கொடுத்தவன் சிற்பி; காதலுக்கு உருவம் கொடுத்தவன்

கவிஞன். இருவர் கொடுத்த உருவங்களும் கற்பனைதான் என்றாலும், இன்று அவை வாழ்க்கையின் இரு பெரும் உண்மைகளாகிவிட்டன. ஒன்று, பரலோக வாழ்க்கைக்கு வழி காட்டுகிறது; இன்னொன்றோ இகலோக வாழ்க்கைக்கு வழி காட்டுகிறது; இரண்டையும் ஒன்றாகப் பார்த்து அனுபவிக்கக் கூடிய ஒரே இடம், மகாபலிபுரம்; அந்த மகாபலிபுரத்துக்குத்தான் நாளை நாம் போகப் போகிறோம்' என்றல்லவா அவன் சொன்னான்?

கடைசியில் நடந்தது என்ன?-கடவுளுக்குச் சிற்பி அங்கே உருவம் கொடுத்திருக்கிறானோ இல்லையோ, காதலுக்கு இங்கே உருவம் கொடுக்க ஆரம்பித்து விட்டான் இவன்!-வெட்கக்கேடுதான், போ!

இவ்வாறு நினைத்தபடி, அவள் தன் தலையில் தானே தட்டிக் கொண்டபோது, ''பாட்டுப் புத்தகம் வேண்டுமா அம்மா, பாட்டுப்புத்தகம்?'' என்று கேட்டுக்கொண்டே பையன் ஒருவன் அந்தப் பக்கமாக வந்தான். ''பாட்டுப் புத்தகம் வேண்டாம்; தலைவலி மருந்து ஏதாவது இருந்தால் கொடு!'' என்றாள் அவள். அவன் அவளை ஒரு தினுசாகப் பார்த்துக் கொண்டே மேலே சென்றபோது, ''பாட்டுப் புத்தகம், ஏ பாட்டுப் புத்தகம்!'' என்றுஅவனுக்கே 'பாட்டுப் புத்தகம்' என்ற பெயரை வைத்து அவனை அழைத்தான் மோகன், அவள் இருந்த பக்கமாகத் திரும்பி.

அவ்வளவுதான்; ''இனி இங்கே இருந்தால் ஆபத்து!'' என்று துணிந்து கீழே இறங்கி வந்தபோது, இன்னொரு எதிர்பாராத அதிர்ச்சி அவளுக்கு அங்கே காத்துக்கொண்டு இருந்தது; அந்த அதிர்ச்சி சுந்தர் உருவிலே வந்து அங்கே நின்றுகொண்டு இருந்தது!

இவன் யாருக்காக இங்கே வந்திருக்கிறான்? தனக்காக வந்திருக்கிறானோ?-தனக்காக வந்திருக்கிறான் என்றால், தான் இந்தத் தியேட்டருக்குள் நுழைந்ததைக் கூடப் பார்த்துவிட்டு வந்திருக்கிறானோ?

பார்த்து விட்டு வந்திருந்தால் இவன் டிக்கெட்டை வாங்கிக்கொண்டு நேராக மேலே அல்லவா வந்திருக்க வேண்டும்? இங்கே நின்று வாசலைப் பார்த்துக்கொண்டு இருக்கக் காரணம்?

நண்பர்கள் யாரையாவது எதிர்பார்த்துக் கொண்டு இருக்கிறானோ? அப்படியிருந்தால், இவன் இங்கே எவ்வளவு நேரம் நின்றுகொண்டு இருப்பானோ? அதுவரை நான் எங்கே நிற்பது?

இது என்னத் தொல்லை!-அந்தப் பக்கம் போனால் அண்ணன்; இந்தப் பக்கம் வந்தால் இவன்!-வேறு எந்தப் பக்கம் போவேன், நான்?

இந்தத் தியேட்டருக்கே ஒரு முழுக்குப் போட்டுவிட்டு, வேறு தியேட்டருக்குப் போய்விடலாமென்றாலும் இப்போது முடியாது போலிருக்கிறதே?

'சரி, நடப்பது நடக்கட்டும்!' என்ற தீர்மானத்துடன் தான் ஏற்கெனவே உட்கார்ந்திருந்த இடத்துக்கே போய் உட்கார்ந்து விடுவது என்று நினைத்து அவள் திரும்பியபோது, மோகனும் பாமாவும் சுற்றுமுற்றும் பார்த்துக்கொண்டே வெளியே வருவதுத் தெரிந்தது.

இது என்னக் கூத்து? இவர்கள் ஏன் இப்போது வெளியே வருகிறார்கள்?-இவர்களைக் கண்டு நான்தான் பயப்பட்டேன் என்றால், இவர்களும் அல்லவா என்னைக் கண்டு பயப்படுகிறார்கள்போல் இருக்கிறது!

அதோ, அவன் அவளை அந்த 'ஐஸ்-கிரீம்' கடைக்குப் பின்னால் அழைத்துக் கொண்டு போய் ஏதோ சொல்கிறான் போல் இருக்கிறதே!-என்ன சொல்கிறான்?

''நீ இங்கேயே நின்று கொண்டிரு; நான் போய வேறுவகுப்புக்கு டிக்கெட் வாங்கிக்கொண்டு வந்து விடுகிறேன். அவளுடன் உட்கார்ந்து நம்மால் நிம்மதியாகப் படம் பார்க்கவும் முடியாது; பேசவும் முடியாது!''

''ஏன் முடியாது? அவளுக்குத் தெரிந்து என்னுடன் பழக உங்களுக்குப் பயமாயிருக்கிறதென்றுச் சொல்லுங்கள்!''

''உனக்குத் தெரியாது, அவள் சமாச்சாரம்! இன்று காலையில் அவள் என்னிடம் என்ன சொல்லிவிட்டு வந்தாள், தெரியுமா? 'மகாபலிபுரம் போகிறேன்; மாலைதான் வருவேன்' என்று சொல்லிவிட்டு வந்தாள். இப்போது பார்த்தால் அவள் நம்மைத் தொடர்ந்து இங்கே வந்திருக்கிறாள்!''

இதைக் கேட்டதும், அந்த நிலையிலும் அருணாவுக்குச் சிரிப்பு பொத்துக் கொண்டு வந்தது-இப்படியும் ஓர் அண்ணா இருப்பானா, தனக்கு? மகாபலிபுரம் போகிறேன் என்று சொல்லிவிட்டு, இவனைத் தொடர்ந்து நான் இங்கே வந்திருக்கிறேனாமே?-என்ன அபூர்வமான கண்டுபிடிப்பு!

அசடு!-அந்த அசடையும் காதலிக்க ஒருத்தி கிடைத்திருக்கிறாளே, அதைச் சொல்லு!

தன்னைப் பொறுத்தவரை அவன் அப்படி இருப்பது ஒரு விதத்தில் நல்லது; அதுவும் இந்தச் சமயத்தில் மிகமிக நல்லது!

இப்படி எண்ணி அவள் கொஞ்சம் தைரியம் அடைந்த போது, பாமா சொன்னாள்:

''அப்படியேதான் வந்திருக்கட்டும்; அவளுக்காக இப்படி நாம் எத்தனை நாட்கள் பதுங்கிப் பதுங்கி வாழ்வது?''

மோகன் சொன்னான்:

''எல்லாம் கல்யாணம் ஆகும் வரையில்தானே? அதற்குப் பிறகு நம்மை யார் என்ன செய்ய முடியும்?''

''அதுதான் கூடாது என்கிறார்கள், எங்கள் மீனாட்சியம்மாள்! 'இந்த மாதிரி காதல் விவகாரங்கள் எல்லாம் கல்யாணம் ஆன பிறகு நாலு பேருக்குத் தெரிவதைவிட, கல்யாணம் ஆவதற்கு முன்னாலேயே தெரிவதுதான் நல்லது' என்று அவர்கள் சொல்கிறார்கள்!''

''ஆண் வர்க்கத்தின் மேல் அவ்வளவு நம்பிக்கைபோல் இருக்கிறது, அவர்களுக்கு!-ஆனாலும் நான் சொல்வதையும்

நீ கேட்கத்தான் வேண்டும்; அவர்கள் நினைப்பதுபோல் நமது சமூகம் இன்னும் அந்த அளவுக்கு முன்னேறவில்லை!''

''சமூகம், சமூகம் என்கிறீர்களே, சமூகம் என்று ஒன்று தனியாக இருக்கிறதா, என்ன? நீங்களும் நானும் சேர்ந்ததுதானே சமூகம்? அந்தச் சமூகத்தோடு ஒட்டாமல் நாம் எடுத்ததற்கெல்லாம் பிரிந்து நின்று, 'அது இன்னும் அந்த அளவுக்கு முன்னேறவில்லை, அது இன்னும் அந்த அளவுக்கு முன்னேறவில்லை' என்று சொல்லிக்கொண்டு இருந்தால், அது என்றுதான் அந்த அளவுக்கு முன்னேறுவது? நீங்கள் பேசாமல் இருங்கள்; நானே உங்கள் தங்கையைக் கூப்பிடுகிறேன்-அருணா, அருணா!''

மோகன் பதறிப் பாய்ந்து அவள் வாயைப் பொத்துவதற்குள், பாமா அவளைக் கூப்பிட்டே விட்டாள்; அவளும் அதுதான் சமயமென்று அமைதியே உருவாய் அவர்களுக்கு முன்னால் வந்து நின்றுவிட்டாள்!

அசட்டு அண்ணனுக்கு ஒன்றும் புரியவில்லை: 'அத்தனை அமைதி தன் தங்கையிடம் திடீரென்று எப்படித் தோன்றிற்று?' என்று எண்ணிக் குழம்பியவனாய், அவன் அவளையே ஒரு கணம் மேலுங் கீழுமாகப் பார்த்தான். மறுகணம் தன்னை மறந்து, ''என்ன அருணா, என்ன உடம்புக்கு?'' என்று அவளை மெல்ல விசாரித்தான்.

''ஒன்றுமில்லை; உலகம் இன்றுதான் புரிந்தது, எனக்கு!'' என்றாள் அவள், எங்கோ பார்த்து நிலைத்த கண் நிலைத்தபடி.

''எதைச் சொல்கிறாய்? 'மணியைப் பார்க்கப் போகிறேன்' என்று சொல்லிவிட்டுப் படம் பார்க்க வந்திருக்கிறேனே, அதைச் சொல்கிறாயா?''

''இல்லை, 'மகாபலிபுரம் போகிறேன்' என்று சொல்லி விட்டு இங்கே வந்து நிற்கிறேனே, அதைச் சொல்கிறேன்!''

அவன் சொன்னது அவளுக்குப் புரியவில்ல; அவள் சொன்னதும் அவனுக்குப் புரியவில்லை!-ஆயினும், ஏதோ

புரிந்துவிட்டதுபோல அவர்கள் இருவரும் ஒருவரைப் பார்த்து ஒருவர் சிரித்துக்கொண்டார்கள்!

''ஆமாம், உள்ளே உட்கார்ந்திருந்த நீ ஏன் திடீரென்று எழுந்து வெளியே வந்தாய்?'' என்று அருணாவைக் கேட்டாள் பாமா.

''உங்களுக்குப் பயந்துதான்!'' என்றாள் அவள்.

''அட, கடவுளே! இவரும் உனக்குப் பயந்துதான் என்னை இழுத்துக்கொண்டு வெளியே வந்தார்!''

''இனிமேல் யாரும் யாருக்கும் பயப்பட வேண்டாம்; வாருங்கள், உள்ளே போவோம்!'' என்று அவர்களை அழைத்துக்கொண்டு அருணா உள்ளே சென்றாள்.

திரை விலகிற்று-தியேட்டரின் திரை மட்டும் அல்ல; அவர்கள் மூவருடைய மனத்திரையும்தான்!

காட்சி ஆரம்பமாயிற்று-வாழ்க்கையில் பலரை வஞ்சிப்பதற்கு உதவும் காதல், திரையிலும் அல்லவா லட்சோப லட்சம் மக்களை வஞ்சிப்பதற்கு உதவுகிறது!

அவர்களில் ஒருத்தியாகத் தானும் அங்கே உட்கார்ந்திருப்பதை உணர்ந்தபோது, அருணாவுக்கு ஏனோ சுந்தரைப் பற்றிய நினைவு வந்தது.

அவன் இப்போது எங்கே இருப்பான்? வாசலில் நின்று கொண்டிருப்பானா? அல்லது, மேலே வந்திருப்பானா?

மேலே வந்திருந்தால் தனியாக வந்திருப்பானா? அல்லது, தன் நண்பர்களுடன் வந்திருப்பானா?

அவன் எப்படி வந்திருந்தால் என்ன? அவனைப் பற்றித் தன் மனம் ஏன் இன்னும் நினைக்க வேண்டும்?-நினைக்கத் தெரிந்த மனத்துக்கு மறக்கத் தெரியாதா?

இப்படியெல்லாம் எண்ணி அவள் மேலும் மேலும் குழம்பிக்கொண்டு இருந்தபோது, இடைவேளை மணி கிணுகிணுத்தது; அணைக்கப்பட்டு இருந்த விளக்குகள் அத்தனையும் மறுபடியும் குபீரென்று எரிந்தன.

''ஆளுக்கோர் 'ஐஸ்-கிரீம்' சாப்பிடுவோமா?'' என்றான் மோகன், அனாவசியமான பயத்தால் ஏற்கெனவே வறண்டு போயிருந்த தன் நெஞ்சை அதைக் கொண்டாவது கொஞ்சம் ஈரமாக்கிக் கொள்ளலாமே என்று!

'கொண்டு வரச் சொல்; அதனாலாவது என் உள்ளம் குளிருகிறதா என்று பார்ப்போம்!' எனச் சொல்லலாமா என்று தோன்றிற்று அருணாவுக்கு; ஆனால் சொல்லவில்லை.

அதற்குள் ஐஸ்-கிரீம் பையனே அங்கு வந்து நின்று விடவே, ஆளுக்கோர் ஐஸ்-கிரீமை எடுத்துக் கொடுத்தாள் பாமா.

அப்போது, ''அட, அருணாவா, நான் பார்க்கவே யில்லையே?'' என்று யாரோ சொல்வது தன் காதில் விழவே, அருணா திரும்பிப் பார்த்தாள்; அழகன் ஒருவனுடன் நின்று கொண்டு இருந்த அழகி ஒருத்தி, ''இதுவரை உனக்கு என்னை மட்டும் தான் தெரியும், இல்லையா? இப்போது இவரையும் தெரிந்துகொள்; இவர் என் காதலர்-நீங்களும் தெரிந்து கொள்ளுங்கள்; இவள் என் சிநேகிதி அருணா!'' என்று தன்னுடன் இருந்த தன் காதலனை அவளுக்கு அறிமுகப்படுத்தி வைத்தாள், ஆங்கிலத்தில்!

அவ்வளவுதான்!-அருணாவின் கையிலிருந்த ஐஸ்-கிரீம் நழுவிக் கீழே விழுந்தது; அவள் மூர்ச்சையானாள்!

காரணம் வேறொன்றும் இல்லை; அந்த அழகியுடன் இருந்த அழகன் சுந்தராயிருந்ததுதான்!

# 18. யார் இந்தச் சுந்தர்?

வாழ்க்கை எத்தனையோ பேருக்கு எத்தனையோ விதமாகத் தோன்றுகிறது. ஆனால் சுந்தருக்கோ அது ஒரு விளையாட்டாகத் தோன்றிற்று. காரணம், அவன் அப்பா சுகானந்தத்துக்கே அது இன்னும் ஒரு விளையாட்டாக இருந்து வந்ததுதான்!

வாழ்க்கையென்றால் பொறுப்புணர்ச்சி மிக்கதாயிருக்க வேண்டும் என்று சொல்லப்படுகிறது அல்லவா? அந்தப் பொறுப்புணர்ச்சியெல்லாம் அவரிடம் கிடையாது-கண்டதேக் காட்சி; கொண்டதேக் கோலம். அதுதான் அவருடைய வாழ்க்கை!-அத்தகைய வாழ்க்கைக்கு அடிப்படையாயிருந்தது சர்வ வல்லமையுள்ள பணம்!

ஆம், ஏற்றுமதி-இறக்குமதி வியாபாரிகளில் குறிப்பிடத்தக்க ஒருவராயிருந்து வந்த அவருக்குச் சென்னை மாநகரில் மட்டும் நாலைந்து குடும்பங்கள் இருந்தன-நாலைந்து குடும்பங்கள் என்றால் நாலைந்து 'துணைவிமார்' கள் என்று அர்த்தம். இந்தத் துணைவிமார்களைத் தவிர, 'மனைவி' என்று ஒருத்தியும் அவருக்கு உண்டு. சாத்திரத்துக்காகவும், சம்பிரதாயத்துக்காகவும்!-இவர்களைத் தவிர கல்கத்தா, பம்பாய், டெல்லி போன்ற நகரங்களிலும் அவருக்கு ஆசை நாயகிகள் பலர் இருப்பதாகக் கேள்வி!

போதும் போதாததற்கு அவற்றிலும் ஒரு மாறுதல் வேண்டும் என்று தோன்றும்போதெல்லாம், அவர் அதற்கென்றே அயல்நாடுகளுக்கும் போய்விடுவாராம்; அங்கெல்லாம் அவருக்கு வியாபாரத் தொடர்பு உண்டோ இல்லையோ, 'அந்தத் தொடர்பு' மட்டும் உண்டு என்று அவருடன் நெருங்கிப் பழகும் 'அவரைப் போன்ற பெரிய மனிதர்கள்' சொல்கிறார்கள்!

சொல்கிறார்கள் என்றால், அவருடைய பெருமைக்கு அதை ஓர் இழுக்காகக் கருதிச் சொல்லவில்லை; சிறப்பாகக் கருதியே சொல்கிறார்கள்!

அத்தகைய பெரிய மனிதர் வீட்டுப் பிள்ளைகளில் ஒருவனாகப் பிறந்துவிட்ட சுந்தருக்குத் தன் அப்பாவைப் போலவே தானும் இருக்க வேண்டுமென்ற ஆசை இருக்காதா?-இருந்தது; ஆனால் அதற்கு வேண்டிய பணம்தான் அவன் பொறுப்பில் இல்லை!

அதை நினைக்கும் போதெல்லாம் ஆத்திரம் ஆத்திரமாக வரும் அவனுக்கு. அப்பா நினைத்தால் ஒரு பெண்ணைப்

பிடிக்கிறார்; உடனே அவளுக்கு நகை, நட்டு, துணிமணி, வீடு வாசல் எல்லாம் வாங்கிக் கொடுக்கிறார். அவள் மேல் கொண்ட ஆசை தீரும் வரை அவளுடன் குடித்தனம்; அதற்குப் பிறகு தடித்தனம்-அதாவது 'தன்னை விட்டால் போதும்!' என்ற நிலைக்கு அவளைக் கொண்டு வந்து விட்டுவிட்டுத் தான் தப்பிவிடுவது!

இந்த முறையில் வெற்றியும் உண்டு, தோல்வியும் உண்டு என்றாலும், அதை 'நிரவல்' செய்ய அவரிடம் எல்லாம் வல்ல பணம் இருக்கிறது. அந்தப் பணத்தின் பக்க பலத்தைக் கொண்டு, 'அடுத்தது, அடுத்தது?' என்று அவர் பாட்டுக்குத் தாவிக்கொண்டே இருக்கிறார்!

தனக்கோ?-ஏதோ கேட்கும்போது ஏதாவது கொடுத்து விட வேண்டியது-அதோடு சரி!

அப்படித்தான் என்ன கேட்க முடிகிறது. அவரை?-மைனர் சங்கிலி கேட்க முடிகிறது; டெர்லின் சட்டை கேட்க முடிகிறது. 'ரோலெக்ஸ்' கடிகாரம் கேட்க முடிகிறது; வைர மோதிரம் கேட்க முடிகிறது; செலவுக்கு ஐம்பதும் நூறும் வேண்டுமென்றால் கேட்க முடிகிறது-அவற்றைத் தவிர?

அருணாவைப்போன்ற ஆரணங்குகளுக்கு நகை நட்டு வேண்டுமென்றால் கேட்க முடிகிறதா? துணிமணி வேண்டு மென்றால் கேட்க முடிகிறதா? வீடு வாசல் வேண்டு மென்றால் கேட்க முடிகிறதா?

அதெல்லாம் கேட்க முடியாமல்தானே அவளைப் போன்றவர்களைத் தன் காரியம் முடியும் வரை 'கல்யாணம் செய்து கொள்கிறேன், கல்யாணம் செய்துகொள்கிறேன்!' என்று சொல்லிக் காதலித்துத் தொலைக்க வேண்டி யிருக்கிறது? அதனால்தானே பல சிக்கல்களுக்கு உள்ளாகித் தான் அவ்வப்போது தவிக்க வேண்டியிருக்கிறது?

என்னத் தொல்லை, போங்கள்! - ஏழையாய்ப் பிறந்தாலும் தொல்லையாயிருக்கிறது; பணக்காரனாய்ப் பிறந்தாலும் தொல்லையாயிருக்கிறது!

என்ன வேதனை, என்ன வேதனை!-நினைக்கும்போதே நெஞ்சம் பதறுகிறதே?

இப்போதுப் பார், இந்த அருணா இங்கே வந்திருப்பாள் என்று நான் நினைத்தேனா?-இல்லை, ஓட்டல் வாசலோடு என்னை விட்டிருப்பாள் என்று நினைத்தேன்!-'இவள் போனால் இன்னொருத்தி' என்று ரூபாவை இங்கே வரச் சொல்லிவிட்டு வந்தேன்; அவளும் வந்தாள்-ஆனந்தமாக சினிமாப் பார்த்து விட்டு அடுத்தாற்போல் வேறுஏதாவது ஓர் ஓட்டல் அறையை நாடலாமென்று இருந்தேன்!-அதற்குள் என்ன நடக்கிறது?-இவள் எனக்கு அவளை அறிமுகம் செய்து வைக்கிறாளாம், அறிமுகம்!

இனிமேல் நான் இங்கே நிற்க முடியுமா? நழுவ வேண்டியதுதான்!- இப்படி எத்தனை நாட்கள் நழுவிக் கொண்டு இருப்பேன், நான்?

இந்த இடம் மட்டும் பொதுஇடமாயில்லாமல் தனிஇடமாயிருந்திருந்தால்?-அருணாவும் என்னிடமிருந்து தப்பியிருக்க முடியாது; ரூபாவும் என்னிடமிருந்து தப்பியிருக்க முடியாதே!

இதற்குத்தான் எவ்வளவு சீக்கிரம் முடியுமோ, அவ்வளவு சீக்கிரம் அப்பா சாகவேண்டுமென்று நான் நினைக்கிறேன்.எங்கே சாகிறார்?

சில பெரிய இடத்துப் பிள்ளைகளுக்கென்றே உண்டான இந்த வருத்தத்துடன் அவன் அங்கிருந்து நழுவியபோது, வலிமை மிக்க கை ஒன்று அவனுடைய கையை அழுத்திப் பிடித்தது. திடுக்கிட்டு அவன் திரும்பிப் பார்த்தபோது அந்தக் கை மணியின் கையாயிருந்தது!

# 19. சலோ, பாண்டிச்சேரி!

மணியின் கரம் சுந்தரின் கரத்தைப் பற்றிக்கொண்டு இருந்தாலும், அவனுடைய கண்கள் மட்டும் பேச்சு மூச்சின்றி அப்படியே சோபாவில் சாய்ந்துவிட்ட அருணாவையே நோக்கிக்கொண்டு இருந்தன.

சுந்தரை அவளுக்கு அறிமுகம் செய்து வைத்த ரூபா ஒன்றும் புரியாமல், ''என்ன அருணா, என்ன உடம்புக்கு?'' என்று அவள் தோளைப் பிடித்து உலுக்கினாள். ''உடம்புக்கு ஒன்றுமில்லை; நீங்கள் கொஞ்சம் எட்டி நில்லுங்கள்!'' என்று அவளைக் கொஞ்சம் எட்டி நிற்கச் செய்துவிட்டு, மோகன் ஒரு சோடாவைத் திறந்து வாங்கி அவள் முகத்தில் அடித்து குடிக்கச் செய்தான். மேலே சுழலும் மின்சார விசிறியின் காற்று போதாதென்று நினைத்தோ என்னமோ, பாமா வேறு தன் கையிலிருந்த பாட்டுப் புத்தகத்தால் அவளுக்கு விசிறினாள்!

'மொடக், மொடக்!'-என்று இரண்டு 'மொடக்கு' சோடா உள்ளே சென்றதுதான் தாமதம், கண் விழித்த அருணா தன்னைச் சுற்றி நின்றவர்களை நோக்கி, ''எல்லோரும் என்னை ஏன் பார்த்துக் கொண்டு இருக்கிறீர்கள்?'' என்றுக் கேட்டாள் வியப்புடன்.

''இன்னொரு முறை மூர்ச்சையாக மாட்டாயா என்று தான் பார்த்துக் கொண்டு இருக்கிறோம்!'' என்றான் மோகன், சிரித்துக்கொண்டே.

அப்போதுதான் தன்னுடைய நிலையை ஒருவாறு உணர்ந்த அருணா,''ஓ, நான் மூர்ச்சையாகிவிட்டேனா? ஆகியிருப்பேன், ஆகியிருப்பேன்!'' என்று சொல்லிக் கொண்டே ரூபாவின் பக்கம் திரும்பி, ''உனக்கும், உனது காதலருக்கும் எனது இதயம் கனிந்த வாழ்த்துக்கள், ரூபா! போய் வா, அவசியம் நேரும்போது நாம் மறுபடியும்

சந்திப்போம்!'' என்றாள், அவளை அங்கிருந்து சீக்கிரம் அனுப்பிவைக்கும் நோக்கத்துடன்!

''நன்றி; நான் என்னமோ ஏதோ என்று பயந்து விட்டேன்!'' என்று சொல்லிக்கொண்டே அவள் ஏற்கெனவே உட்கார்ந்திருந்த இடத்துக்குத் திரும்பியதும், ''இப்போது நீ போகலாம்!'' என்றான் மணி, சுந்தரின் கையை விட்டு!-ஆம், அருணாவுக்கு ஒன்றுமில்லை என்று தெரிந்த பிறகு அவனுடைய கையைப் பிடித்துக் கொண்டிருக்க அவன் விரும்பவில்லை!

இதை ஒருவாறுப் புரிந்துகொண்ட சுந்தர், அப்பாடா! என்று திரும்பியபோது, இடைவேளை மணி மறுபடியும் கிணுகிணுத்தது. அதைத் தொடர்ந்து தியேட்டரின் விளக்குகள் மட்டும் ஒன்றன் பின் ஒன்றாக அணையவில்லை; சுந்தரின் ஆசை விளக்கும் அணைந்தது!-அணையாதா, பாழாய்ப்போன மணி அதுவரை தன்னைப் படுத்தி வைத்த பாடு போதாதென்று தனக்குப் பக்கத்தில் வேறு வந்து உட்கார்ந்துவிட்டால்?

ஒரு வினாடி, இரண்டு வினாடி, மூன்று வினாடி, நான்கு வினாடி என்று ஐந்து வினாடிகளும் ஆயின. சுந்தர் படத்தைப் பார்ப்பதாகத்தான் தெரிந்ததே தவிர, தன்னைப் பார்ப்பதாகத் தெரியவில்லை, ரூபாவுக்கு!

இது என்ன அதிசயம்! விளக்கை அணைத்து ஐந்து வினாடிகள் ஆனபிறகும் இவரா இப்படி உட்கார்ந்திருக்கிறார்? நம்ப முடியவில்லையே, தன்னால்?

இடைவேளைக்கு முன்னால் இருட்டைத் துணையாகக் கொண்டு இவருடைய விரல்கள் தன்னைப் படுத்திய பாடு!-எங்கெல்லாமோ தொட்டுத் தடவி, உரசி, நெருடி...

ஒரு கணம் தன்னை மறந்து அந்த இன்பக் கிளுகிளுப்பைக் கண்ணை மூடி அனுபவித்துப் பார்த்தாள் அவள்; மறுகணம் என்ன இருந்தாலும் தான் உயர்ந்த வகுப்பைச் சேர்ந்தவள் என்பதை எந்த நிலையிலும் மறந்து

விடக் கூடாது என்பதற்காக, ''சீச்சீ! ஆபாசம், ஆபாசம்!'' என்று தனக்குத்தானே சொல்லிக்கொண்டு சுந்தரைப் பார்த்தாள். அப்போது குறும்பு செய்த அவனுடைய கைவிரல்கள் இப்போது ஏன் செய்யவில்லை என்றுதான்!

ஆனால் அவனோ அவள் நினைத்ததுபோல் படத்தைக் கூடப் பார்க்கவில்லை; படத்தைப் பார்ப்பது போல் பக்கத்தில் இருந்த மணியைப் பார்த்துக் கொண்டிருந்தான்!

இந்த சினிமா முடிந்த பிறகாவது இவன் தன்னை விடுவானா?-எங்கே விடப் போகிறான், இவன் தொடர்வதைப் பார்த்தால் ஏழேழு பிறவிக்கும் அல்லவா தன்னைத் தொடர்ந்து கொண்டே இருப்பான் போலிருக்கிறது!

அதிலும், இன்று அருணா தன் வீட்டுக்குப் போய்ச் சேரும் வரை இவன் தன்னை விடப்போவதில்லை. அத்துடன், ரூபா வேறு சேர்ந்துகொண்டு விட்டாள், இப்போது!-கேட்க வேண்டுமா, இவர்கள் இருவருடைய கற்பையும் காப்பதாக நினைத்துக்கொண்டு இவன் தனக்கு வேண்டாதத் தொந்தரவையெல்லாம் கொடுத்துக்கொண்டே இருக்கப் போகிறான்!-பைத்தியக்காரன், இப்படி எத்தனை நாட்கள் இவர்களுடைய கற்பை இவனால் காப்பாற்றிக் கொண்டு இருக்க முடியும்?

உலகம் வினாடிக்கு வினாடி மாறிக்கொண்டே இருக்கிறது; வளர்ந்து வரும் நாகரிகத்துக்கு முன்னால் பழைய சட்ட திட்டங்களெல்லாம் தவிடு பொடியாகிக்கொண்டு வருகின்றன நேற்று ஒருத்தி ஒருவனை சாகும்வரை பிரிய முடியாது சட்ட ரீதியாக; இன்று நினைத்தால் பிரிந்து விடலாம்-பிரிந்தவள், இன்னொருவனைத் திருமணமும் செய்துகொண்டு விடலாம்; செய்துகொண்டும் விடுகி றார்கள்!-அப்போது எங்கே போகிறது, கற்பு?

ஒருத்தி ஒருவனிடம் இருக்கும்போது வேண்டுமானால், தன் கற்பை இன்னொருவனிடம் இழக்காமல் இருக்கட்டும், அவ்வாறு இழப்பது குற்றமாகவோ, துரோகமாகவோ

கருதப்படட்டும்; அந்தக் குற்றத்தையும் துரோகத்தையும் வேண்டுமானால், இவனைப் போன்றவர்கள் வந்துத் தடுக்கட்டும். இந்த ரூபாவும் அருணாவும் யாரிடம் இருக்கிறார்கள், இப்போது? இல்லை, நான்தான் யாரிடம் இருக்கிறேன், இப்போது?-யாரும் யாரிடமும் இல்லை! அப்படியிருக்கும்போது, நான் ஏன் இவர்களைக் காதலிக்கக் கூடாது? இல்லை, இவர்கள்தான் ஏன் என்னைக் காதலிக்கக் கூடாது!

காதல் என்றால் ஒருவன் ஒருத்தியைத்தான் காதலிக்க வேண்டும், ஒருத்தி ஒருவனைத்தான் காதலிக்க வேண்டும் என்று சிலர் சொல்லலாம். இருக்கட்டுமே, அதனாலென்ன? -பகிரங்கமாகக் காதலிப்பதுதானே பண்புக்குக் குறைவு!

அப்படியே இருந்தாலும் என்னப் பண்பு வேண்டிக் கிடக்கிறது, இந்தக் காலத்துக் காதலில்?-அந்தக் காலத்துக் காதல் என்றால் அதன் அர்த்தமே வேறு; இந்தக் காலத்துக் காதல் என்றால் இதன் அர்த்தமே வேறு-இரண்டையும் ஒன்றாக்கி இவனைப் போன்றவர்கள் குழப்பிக்கொண்டு இருந்தால் அதற்கு நானா பொறுப்பு?

அந்தக் காலத்தில் காதலுக்கும் கற்புக்கும் தவறிக்கூடப் பங்கம் நேர்ந்துவிடக் கூடாது என்பதற்காக இறந்த கணவனோடு இறக்காத மனைவியையும் சேர்த்து வைத்துக் கொளுத்தினார்கள்; இந்தக் காலத்தில் அப்படியாக் கொளுத்துகிறார்கள்? 'ஒருவன் போனால் இன்னொருவன்' என்று மறுமணம் அல்லவா செய்துகொள்ளச் சொல்கிறார்கள்!

இதெல்லாம் எதைக் காட்டுகிறது, காதலுக்கும் கற்புக்கும் விடுதலை வேண்டும் என்பதைத்தானே காட்டுகிறது? அந்த விடுதலைதான் எனக்கும் வேண்டும், இவர்களுக்கும் வேண்டும் என்கிறேன் நான்-அதைத் தடுக்க இவன் யார்?

யாராக வேண்டுமானாலும் இருந்துவிட்டுப்போகட்டும். -இவனை நேருக்கு நேராக எதிர்த்து நிற்பதென்பதுத்

தன்னால் இப்போது முடியாத காரியம். ஆகவே, இவனும் இவனால் தடுத்தாட்கொள்ளப்படுபவர்களும் எப்படியாவது போய்த் தொலையட்டும் என்று சினிமா விட்டதும் தான் பாண்டிச்சேரிக்குப் புறப்பட்டுவிட வேண்டும். இன்றைய இரவையாவது எந்தவிதமான ஏமாற்றமும் இல்லாமல் இன்பமுடன் கழிக்க!

அங்கேதான் மனிதனுக்குப் பூரண சுதந்திரம் இருக்கிறது; அங்கேதான் உலகப் பெருங் கவிஞன் உமர்கய்யாம் வாழ்ந்துக் காட்டிய வாழ்க்கை நெறி அப்படியே கடைப்பிடிக்கப்படுகிறது-அதாவது, மதுவும், மங்கையுமே வாழ்க்கை; மனிதனுக்கு அதை விட்டால் வேறு வாழ்க்கையும் இல்லை, இன்பமும் இல்லை!

என்ன அற்புதமான தத்துவம், என்ன அற்புதமான தத்துவம்!-இல்லாதவன் அதை வெறுக்கலாம்; இருப்பவன் அதை ஏன் வெறுக்கவேண்டும்?-எல்லாம் விதி விட்ட வழி!-ஆம், எனக்குப் பக்கத்தில் இப்போது உட்கார்ந்து கொண்டு இருக்கும் இந்தப் பயல், காலையிலிருந்து என் கழுத்தை அறுத்துக் கொண்டு இருக்கிறானே, அது கூட விதி விட்ட வழிதான்!

பெண்ணே! நீ இந்த மதுக் கிண்ணத்தை நிரப்பு, நிரப்பிக்கொண்டே இரு!-அச்சமின்றி இப்படிக் கேட்க இப்போதும் ஓர் இடம் இருக்கிறதென்றால், அதுதான் பாண்டிச்சேரி; சலோ பாண்டிச்சேரி!

இப்படி தனக்குத்தானே உத்தரவு போட்டுக்கொண்டு அவன் தன்னை மறந்து எழுந்தபோது, "படம் இன்னும் முடியவில்லை, உட்கார்!" என்று அவன் தோளின்மேல் கையை வைத்தான் மணி: "ஓகோ, படம் இன்னும் முடியவில்லையா?" என்று ஏமாற்றத்துடன் சொல்லிக் கொண்டே சுந்தர் உட்கார்ந்தான்!

படம் முடிந்தால் என்ன, முடியாவிட்டால் என்ன? இவனைத் தான் ஏன் உட்கார வைக்கவேண்டும்? தான் வந்த

வேலையோ அநேகமாக முடிந்துவிட்டது; அருணா தன் அண்ணனுடன் சேர்ந்துவிட்டாள்; தற்செயலாக அவள் அடைந்த மூர்ச்சையும் தெளிந்துவிட்டது; தன்னை இனம் காட்டிக் கொள்ளாமல் தனக்கு அடுத்தாற்போல் சுந்தரிடம் ஏமாறுவதற்குத் தயாராகிக்கொண்டு இருக்கும் ரூபாவையும் அவளே வாழ்த்தியும் அனுப்பிவிட்டாள். அதற்குப் பிறகு இங்கே தனக்கு என்ன வேலை இருக்கிறது? 'சினிமா' என்னும் பேரால் ஒரு குற்றமும் செய்யாமல் மற்றவர்கள் அனுபவிக்கும் 'மூன்று மணி நேரச் சிறைவாச'த்தைத் தானும் ஏன் அனுபவிக்க வேண்டும்?-அதிலும், கஷ்டப்பட்டுச் சம்பாதித்த காசைக் கொடுத்து!

ஏதோ ஒரு வெறி, ஏதோ ஒரு தூண்டுகோல்-இந்தக் காதலனிடமிருந்து அந்தக் காதலியைக் காக்க வேண்டுமென்று தன்னை உந்தித் தள்ளிற்று; அதற்காக ஏதோ செய்தோம்-அவ்வளவுதான்!

அதற்கு மேல் தன்னால் என்ன செய்யமுடியும்?-இவர்களைச் சேர விடாமல் தடுக்க முடியுமா? இல்லை, சேர்த்துத்தான் வைக்க முடியுமா?-இரண்டுமே தன்னால் முடியாத காரியம்!

ஒருவேளை இவனுடைய விருப்பத்துக்கு அவள் இணங்கியிருந்தால்?-இவர்களுடைய விஷயத்தில் தான் தலையிட்டிருக்கப் போவதேயில்லை-காதலை உள்ளத்தில் வளர்ப்பதற்குப் பதிலாக வேறு எங்கோ வளர்க்கும் கழுதைகளோடு கழுதைகளாக இந்தக் கழுதைகளையும் சேர்த்து விட்டுப் போயிருப்பேன்!-ஆனால் நடந்தது வேறு; எனவே தானும் வேறுவிதமாக நடந்துகொள்ள நேரிட்டுவிட்டது!

அதனாலென்ன, அது தன் கடமை!-அந்தக் கடமையையும் பிறருக்காகத் தான் ஆற்றவில்லை; தனக்குத்தானே ஆற்றிக்கொண்ட கடமை, அது!

இதைத் தவிர இவர்கள் விஷயத்தில் வேறொன்றும் செய்ய முடியாது, தன்னால்?-உலகத்தில் ஏமாறுபவர்கள்

இருக்கும் வரை, ஏமாற்றுபவர்களும் இருக்கத்தான் இருப்பார்கள்; ருசி கண்ட பூனை உறியை உறியைத் தாவிக்கொண்டுதான் இருக்கும்; சூடு காணும் வரை அடுப்பில் காயும் பாலைக்கூட அது நக்கி நக்கிக் குடிக்க முயன்று கொண்டுதான் இருக்கும்!

இந்த விஷயத்தில் சாஸ்திர சம்பிரதாயங்கள் மட்டுமல்ல; தார்மீக ஆன்மீகத் தத்துவங்கள் மட்டுமல்ல; தீராத வியாதி வெக்கைகள் மட்டுமல்ல; சட்டம், நீதிமன்றம், சிறைச்சாலை ஆகியவையெல்லாம் கூட அன்றும் தோல்வியையேக் கண்டன; இன்றும் தோல்வியையேக் கண்டு வருகின்றன.

எத்தனையோ அவதார புருஷர்கள் இந்த நாட்டிலே தோன்றினார்கள்; மறைந்தார்கள். எத்தனையோ உபதேசங்கள் அவர்களால் செய்யப்பட்டன; சொல்லப்பட்டன. ஆனால், மனிதன் தனக்குத் தானே தேடிக் கொள்ளும் தீமைகள் மட்டும் அன்றும் மறையவில்லை; இன்றும் மறையவில்லை!

இவற்றையெல்லாம் பார்க்கும்போது தான் ஒன்றுமே இல்லைதான்!-ஆனால் கண்ணிருந்தும் பாராமல் காதிருந்தும் கேளாமல், கையிருந்தும் செயல்படாமல் செத்த பிணம் வேண்டுமானால் இருக்கலாம்; உயிருள்ள மனிதன், உணர்ச்சியுள்ள மனிதன் அப்படி இருக்க முடியாது அல்லவா? அப்படி இருக்கக்கூடாது அல்லவா?- அதனால்தான் இவர்களுடைய விஷயத்தில் தான் தலையிட நேர்ந்தது; தன்னால் முடிந்ததையும் செய்ய நேர்ந்தது. இனி, தான் போய்விடலாம்; இந்தச் சுந்தரைத் தவிர மற்றவர்கள் தன்னைப் பார்ப்பதற்கு முன்னாலேயே தான் போய் விடலாம்...

இந்த முடிவுடன் மணி எழுந்தபோது, "படம் இன்னும் முடியவில்லை; உட்கார்!" என்று தன்னை யாரோ பழிக்குப் பழி வாங்குவதை அவன் உணர்ந்தான். ஒருவேளை சுந்தராயிருக்குமோ என்ற அதிசயத்துடன் மணி, தன்னை

அந்த உணர்வுக்கு உள்ளாக்கியவனைத் திரும்பிப் பார்த்தபோது, அவன் சுந்தராயில்லை; மோகனாயிருந்தான்!

''நீ வேறு பார்த்துவிட்டாயா, என்னை?'' என்றான் மணி, மறுபடியும் உட்கார்ந்துகொண்டே.

''ஏன், பார்க்கக்கூடாதா?'' என்றான் மோகன்.

''அதற்குச் சொல்லவில்லை...''

''பின் எதற்குச் சொல்கிறாய்? 'சினிமா பாவத்தின் பிறப்பிடம்' என்று இத்தனை நாட்களாகச் சொல்லிக் கொண்டிருந்துவிட்டு, இன்று நீ யாருக்கும் தெரியாமல் இங்கே வந்திருக்கிறாயே, அதற்குச் சொல்கிறாயா?''

''இது நான் எதிர்பார்த்ததுதான்!''

''இருக்கலாம்; ஆனால், நான் எதிர்பார்க்கவில்லை!''

அதற்குமேல் அதை விவரிப்பது அருணாவை அவனுக்குக் காட்டிக் கொடுப்பதில்தான் போய் முடியும் என்று அஞ்சிய மணி, ''அது சரி, நீ ஏன் அவர்களை அங்கே விட்டுவிட்டு இங்கே வந்துவிட்டாய்?'' என்று பேச்சை மாற்றினான்.

''அவர்கள் இருவரும் பேசுவதற்கு இதுவரை தடையாயிருந்தது போதும் என்று எண்ணித்தான் வந்தேன்!'' என்றான் மோகன்.

அதற்குள் 'ஸ்ஸ்' என்று பின்னால் இருந்த ரசிகர்கள் இரையவே, இருவரும் பேசுவதை நிறுத்திவிட்டுத் திரையைப் பார்த்தார்கள்; காதலியை அடைய முடியாத காதலன் கண்ணில் நீருடன், அடிவானத்தை நோக்கிப் போய்க்கொண்டு இருந்தான்!

''அழவேண்டியதுதான், வாழ்க்கையில் அதைத் தவிர அடைவதற்கு வேறு என்ன இருக்கிறது?'' என்றான் மணி, வெறுப்புடன்.

அவன் சொன்னதைப் பொருட்படுத்தாமல், ''ச்சூச்சூ!'' என்று தங்கள் அனுதாபத்தைக் கதாநாயகனுக்குத்

தெரிவித்துக் கொண்டே ரசிகர்கள் எழுந்தார்கள்; அந்த ரசிகர்களுக்குத் தன்னுடைய அனுதாபத்தை மானசீகமாகத் தெரிவித்துக் கொண்டே மணியும் எழுந்தான்!

அப்போது அவனைப் பார்த்த அருணாவுக்குத் 'திக்' கென்றது-அதுவரை அவர் தன் அண்ணாவுடன் அல்லவா பேசிக்கொண்டு இருந்திருக்கிறார்? தன்னைப்பற்றி அவர் அவனிடம் என்ன சொன்னாரோ,'என்னமோ?' என்றுதான்!

# 20. காணாமற்போன காதலன்!

தான் நினைத்தது தவறு என்பதைத் தெரிந்துக்கொள்ள அருணாவுக்கு வெகுநேரம் பிடிக்கவில்லை; வெளியே வந்ததுமே அது அவளுக்குத் தெரிந்துபோயிற்று-ஆம், அவள் அவ்வாறு நினைக்கக்கூடும் என்பதை உணர்ந்த மணி, ''என்ன அருணா, சமய சந்தர்ப்பம் தெரியாமல் நீ உன் அண்ணாவை வளைய வந்துக் கொண்டிருக்கிறாயே? பாமா உன்னை வெளிப்படையாகத் திட்டாவிட்டாலும் உள்ளுக்குள்ளாவது திட்டிக் கொண்டிருக்காதா?'' என்றான் சிரித்துக்கொண்டே.

''நானும் அதை நினைத்துத்தான் அவர்களை விட்டு ஒதுங்கி ஒதுங்கி நடந்துக்கொண்டிருக்கிறேன்; இருந்தாலும் இந்தத் தியேட்டருக்கு நான் வந்திருக்கக்கூடாது என்பதை இப்போதுதான் உணர்கிறேன்!'' என்றாள் அவள்.

அதற்குள் பாமா குறுக்கிட்டு, ''நான் ஒன்றும் உன்னைத் திட்டிக்கொண்டிருக்கவில்லை; நீ இந்தத் தியேட்டருக்கு வந்ததிலும் எனக்கு ஒன்றும் வருத்தம் கிடையாது!'' என்றாள் பொய்யானக் கோபத்துடன்.

''அதெல்லாம் சும்மா; நீ நம்பாதே, அருணா! எதிர்பாராமல் ஏதோ நடந்தது நடந்துவிட்டது; இப்போதாவது நீ அவர்களை விட்டுப்பிரிந்து, வீட்டுக்குப் போய்ச் சேருவதைப் பார்!'' என்றான் மணி.

"அப்போது மட்டும் எங்களால் நிம்மதியாக இருந்துவிட முடியுமா, என்ன? வீட்டுக்குப் போய் இவள் எங்களைப் பற்றி என்ன சொல்வாளோ, என்னமோ?" என்றான் மோகன்.

"சொன்னால் சொல்லட்டுமே, அதனாலென்ன? நாளைக்கு நீ யாருக்கும் தெரியாமலா பாமாவைக் கல்யாணம் செய்துக் கொள்ளப் போகிறாய்?" என்றான் மணி.

இந்தச் சமயத்தில் பாமா ஏதோ முணுமுணுத்தது மணியின் காதில் விழுந்தது; "என்ன பாமா, என்ன சொல்கிறாய் நீ?" என்று அவன் அவளைக் கேட்டான்.

"ஒன்றும் சொல்லவில்லை; நீங்கள் சொல்வதைத்தான் நானும் இவரிடம் சொல்லிக்கொண்டு இருந்தேன் என்றேன்!" என்றாள் அவள்.

"நீயும் சொன்னாயா, அதுதான் சரி! வேறு எந்த விஷயத்தில் ரகசியம் இருந்தாலும் இருக்கலாம்; இந்தக் காதல் விஷயத்தில் மட்டும் ரகசியம் இருக்கவேக் கூடாது, பாமா! இருந்தால் இவனுக்கு ஒன்றும் ஆபத்தில்லை; உனக்குத்தான் ஆபத்து!" என்றான் மணி, மோகனை அவளுக்குச் சுட்டிக் காட்டி.

இதை அவன் சொல்லக் கேட்டபோது, பாமாவின் நெஞ்சம் ஏனோ நெகிழ்ந்தது-இப்படிப்பட்ட ஓர் உத்தமனைப்பற்றி இவர் தன்னிடம் என்னவெல்லாம் சொன்னார்? ஒரு வேளை தங்களுக்கு இயற்கையாகவே வாய்க்கப்பெற்ற கற்பனா சக்தியால், குழந்தைகள் தாங்கள் சொல்வது பொய் என்று தெரியாமல் எதையும் மிகைப்படுத்திச் சொல்கின்றனவே, அந்தக் குழந்தைகளில் இந்தக் குழந்தையும் ஒன்றாயிருக்குமோ?-ஐயோ, என் குழந்தையே! உன்னை நான் எப்படித் திருத்தப் போகிறேனோ, தெரியவில்லையே?

இப்படி அவள் எண்ணிக்கொண்டு இருந்தபோது, "என்ன பாமா, என்ன யோசிக்கிறாய்? அண்ணனுக்குத்தான்

தன் தங்கையிடம் நம்பிக்கை இல்லையென்றால், உனக்குமா அதனிடம் நம்பிக்கையில்லை?'' என்று மணி கேட்டான்.

''என்னைப் பொறுத்தவரை எனக்கு அந்தக் கவலையே இல்லை; இவர் விரும்பினால் இப்போதே வேண்டு மானாலும் நான் இவருடன் இவருடைய வீட்டுக்கு வரத் தயார்!'' என்றாள் பாமா, மேலும் கொஞ்சம் துணிந்து.

''ஐயோ, வேண்டாம்! சினிமாக்களில் வரும் அப்பாக்களைப் போல் என் அப்பாவும் துப்பாக்கியை எடுத்து என்னிடம் கொடுத்து, 'முதலில் என்னைச் சுடு; அப்புறம் பாமாவைக் கல்யாணம் செய்துக்கொள்!' என்று சொன்னாலும் சொல்வார்!'' என்று அலறினான் மோகன்.

அருணா சிரித்தாள்; சிரித்துவிட்டுச் சொன்னாள்:

''பயப்படாதே அண்ணா, அப்பாவிடம் இப்போது துப்பாக்கி இல்லை!''

''இல்லாவிட்டால் என்ன, வேண்டுமென்று தோன்றும் போது அது அவருக்குக் கிடைக்கும்!''

''அதற்காக?''

''என்னைப்பற்றி நீ என்ன வேண்டுமானாலும் அவரிடம் சொல்லு; பாமாவைப்பற்றி மட்டும் ஒன்றும் சொல்லி விடாதே என்கிறேன்!''

''இவ்வளவுதானே? நிச்சயமாகச் சொல்லமாட்டேன்; நீ தைரியமாகப் போய் வா!''

அருணா திரும்பினாள்; மோகன் கால்சட்டைப் பைக்குள் கையை விட்டுக்கொண்டே கேட்டான்:

''அதற்காக ஏதாவது...''

மணிக்கு ஒன்றும் புரியவில்லை; ''என்ன ஏதாவது?'' என்று குறுக்கிட்டான்.

''லஞ்சம்!'' என்றான் மோகன், சிரித்துக் கொண்டே.

''அதுகூடக் கொடுப்பதுண்டா, நீ?''

''ஏற்கெனவே ஐந்து ரூபாய் வாங்கியிருக்கிறாளே, என்னிடம்!''

''அந்த அருணா இப்போது இல்லை அண்ணா, இவள் வேறு அருணா! எனக்கு ஒன்றும் வேண்டாம்; நீ போய் வா!''

அருணா மறுபடியும் திரும்பினாள்; அதற்குள் ரூபா அவளைத் தேடிக்கொண்டு வந்து, ''ஏண்டி அருணா, நீ அவரைப் பார்த்தாயா?'' என்று கேட்டாள்.

''எவரை?''

''அவரைத் தாண்டி, என்னுடன் வந்திருந்தாரே ஒருவர்...அவரை!'' ,

''இல்லையே, உன்னோடு பார்த்ததுதான்; அதற்குப் பிறகு நான் அவரைப் பார்க்கவேயில்லையே!''

''தியேட்டரை விட்டு இருவரும் ஒன்றாய்த்தான் வெளியே வந்தோம்; 'பஸ் ஸ்டாப்'பில் வந்து நின்று திரும்பிப் பார்த்தால் ஆளைக் காணோம்!''

''ஒருவேளை கூட்டத்தோடு கூட்டமாக...''

''அப்படி ஏதாவது இருக்குமோ என்றுதான் நான் கூட்டம் கலையும் வரை அங்குமிங்குமாக அலைந்து அலைந்து, அவரைத் 'தேடு, தேடு' என்று தேடிப் பார்த்தேன்; கால் வலித்ததுதான் மிச்சம்!''

இந்தச் சமயத்தில், ''அவன் வரமாட்டான்; இனி அவன் உங்களைத்தேடி வரவே மாட்டான்!'' என்று யாரோ சொல்வது அவர்கள் காதில் விழுந்தது; இருவரும் திரும்பிப் பார்த்தார்கள்-மணி அவர்களை நோக்கி வந்துக் கொண்டிருந்தான்.

''ஏன், உங்களுக்கும் தெரியுமா அவரை?'' என்று ரூபா கேட்டாள்.

''தெரியும், அவனுக்கு வாழ்க்கை ஒரு விளையாட்டு என்று!''

''அப்படியென்றால்?''

''அவன் உங்களை மட்டும் காதலிக்கத் தயாராயில்லை, ஏமாந்தால் இந்த உலகத்திலுள்ள அத்தனைப் பெண்களை யுமே காதலிக்கத் தயாராயிருக்கிறான் என்று அர்த்தம்!''

அவ்வளவுதான்; ரூபா அதற்குமேல் அங்கே நிற்கவில்லை. விடுவிடுவென்று தன் வீட்டை நோக்கி நடக்க ஆரம்பித்துவிட்டாள்!

அவள் சென்ற திசையையே ஒரு கணம் பார்த்துக் கொண்டு நின்ற அருணா, ''என்னிடம் கூடச் சொல்லிக் கொள்ளாமல் போகிறாளே?'' என்றாள், மணியின் பக்கம் திரும்பி.

''காதலன் சொல்லிக்கொண்டுபோனால்தானே காதலி சொல்லிக் கொண்டு போக?'' என்றான் அவன்!

தன்னுடன் மணி வரவில்லையென்றாலும், தான் வீடு போய்ச் சேரும் வரை அவன் தனக்குத் 'தோன்றாத் துணை'யாயிருப்பான் என்ற உறுதி அருணாவுக்கு இருந்தது. ஆனால், அந்த உறுதி அவளுடைய நடையில் பிரதிபலித்த அளவுக்கு உள்ளத்தில் பிரதிபலிக்கவில்லை. தான் செய்த தவறு அந்தத் 'தோன்றாத் துணை'யால் தன் அண்ணாவுக்குத் தெரியாமல் இருக்கலாம்; அப்பாவுக்குத் தெரியாமல் இருக்கலாம்; அம்மாவுக்கும் தெரியாமல் இருக்கலாம். ஆனால் அது தனக்குத் தெரியாமல் இருக்க முடியாது அல்லவா?-அந்த தவற்றை மற்றவர்களுக்குத் தெரியாமல் மறைத்தாலும் தனக்குத் தெரியாமல் மறைக்க முடியாது அல்லவா?-தன்னைப் பொறுத்தவரை அது என்றும் தன் இதயத்தில் விழுந்தக் கீறலாகத்தானே இருக்கும்? அதை என்னதான் ஆற்றினாலும் அதன் வடு என்றும் தன் இதயத்தில் மறையாமல்தானே இருக்கும்?

பாமா சொல்வதைப் போல், மணி அண்ணன் சொல் வதைப் போல், அவன் தன்னைப் பகிரங்கமாகக் காதலித்தி ருந்தால் இந்த அவலத்துக்கு, இந்த அவமானத்துக்குத் தான்

உள்ளாகியிருக்க முடியாது; தனக்கு அஞ்சாவிட்டாலும் பிறருக்கு அஞ்சியாவது அவன் தன்னை இந்தப் பழிக்கு, இந்தப் பாவத்துக்கு ஆளாக்கியிருக்க முடியாது.

இந்த உலகத்தில் பிறருக்கு அஞ்சி வாழ்வதைவிட தனக்குத் தானே அஞ்சி வாழ்வதுதான் எவ்வளவு கொடுமையானது! எவ்வளவு குரூரமானது!

அத்தகைய கொடுமைக்கும் குரூரத்துக்கும் தன்னை ஆளாக்கிய அதே நாளில், இன்னொருத்தியையும் அதே கொடுமைக்கு, அதே குரூரத்துக்கு அந்தப் பாவி ஆளாக்கத் துணிகிறான்?-மணி அண்ணன் சொல்வதுபோல அவனுக்கு வாழ்க்கை ஒரு விளையாட்டாகத்தான் இருக்கும் போல் இருக்கிறது!

அவன் விளையாடலாம்; அவனை நம்பி ஒரு பெண் விளையாட முடியுமா?-அப்படி விளையாடினால் கடைசியில் அவள் தன் விதியுடன் அல்லவா விளையாட வேண்டியிருக்கும்?-நல்லவேளை, நான் பிழைத்தேன்!

அன்றொரு நாள் தன்னுடன் சேர்ந்து 'போட்டோ' எடுத்துக் கொள்ளவில்லை என்பதற்காக அவன் தன்னைப் படுத்திய பாடு!-கடவுள்தான் காப்பாற்றினார், தனக்கு அந்தச் சமயத்தில் அந்த நல்ல புத்தியைக் கொடுத்து!- இல்லாவிட்டால் அதை வேறு வைத்துக்கொண்டு அவன் தன்னை என்ன பாடு படுத்தியிருப்பானோ?

காதல் கடிதம் மட்டும் தான் அவனுக்கு நாலோ, ஐந்தோ எழுதியிருப்பதாக ஞாபகம். அவற்றைக் கூடத் தவிர்க்க முடியாமல்தான் எழுத நேர்ந்தது. அவன் பாட்டுக்கு நூற்றுக்கணக்கில் காதல் கடிதங்கள் எழுதிக்கொண்டே இருந்தால்? நான் நாலோ, ஐந்தோகூட எழுதாமல் இருக்க முடியுமா?

அந்தக் கடிதங்களைப்பற்றிக்கூட இப்போது தான் கவலைப் படவேண்டிய அவசியமில்லை-அவன்தான் கண்ணறாவிக் காதலனாயிருக்கிறானே,அவற்றைத் தன்னைப்

போல் அவனும் கண்ணில் ஒற்றிக்கொண்டா பத்திரப்படுத்தி வைத்திருக்கப்போகிறான்?

இருக்காது; வந்த அன்றைக்கே படித்துப் பார்த்துவிட்டு அவன் அவற்றைக் கிழித்து எறிந்துவிட்டிருப்பான்!

தான் மட்டும் அவற்றை இனிப் பத்திரப்படுத்தி வைத்து என்ன பிரயோசனம்?-வீட்டுக்குப் போனதும் அம்மாவுக்குத் தெரியாமல் அவற்றை எடுத்து அக்கினி பகவானுக்கு இரையாக்கிவிட வேண்டும். 'சுந்தரி' என்ற பெயருடன் அவன் வாங்கிக் கொடுத்த பேனா ஒன்று வீட்டில் இருக்கிறது; அதையும் தூக்கித் தூர எறிந்துவிட வேண்டும்!

ஆனால் அவனுடைய நினைவுகள் பல தன் உள்ளத்தில் இடம் பெற்றிருக்கின்றனவே, அவற்றைத் தூக்கித் தூர எறிந்தால்தான் உண்டு; இல்லாவிட்டால் அது தன்னை உறுத்திக்கொண்டேதான் இருக்கும்!-இருக்கட்டுமே, தான் செய்தத் தவற்றுக்கு அந்தத் தண்டனையைக் கூடவா அனுபவிக்கக் கூடாது?

எல்லா மடத்தனங்களுக்கும் சிகரம் வைத்தாற்போல் தான் செய்த இன்னொரு மடத்தனம், கவிஞர் தாகூர் எழுதிய 'காதலர் பரிசு' என்ற புத்தகத்தை வாங்கி அவனுக்கு அன்பளிப்பாகக் கொடுத்தது!-அப்படித்தான் கொடுத்தேனே, சும்மாவாவது கொடுத்தேனா? அதுவும் இல்லை; அப்போதிருந்த நிலையில் ஏதோ 'கன்னாபின்னா' என்று எழுதிக் கையெழுத்து வேறு போட்டுக் கொடுத்திருக்கிறேன்!

அவன் அதைப் படித்தா இருக்கப் போகிறான்! ரசித்தா இருக்கப் போகிறான்?-ஊஹூம்; அந்த மாதிரி ரசனையெல்லாம் அவனுக்கு இருந்தால், இந்த மாதிரி ஈனத்தனங்களில் எல்லாம் அவன் ஏன் ஈடுபடப் போகிறான்?

ஆனால் ஒன்று-படித்தாலும் படிக்காவிட்டாலும், ரசித்தாலும் ரசிக்காவிட்டாலும், அந்தப் புத்தகத்தை மட்டும் அவன் பத்திரப்படுத்தி வைத்திருப்பான்-எதற்கு, தன்னுடைய நினைவுக்காகவா? அப்படியொன்றும் இருக்காது; தன்னைப்

போன்ற சிலர் தன்னை மதிக்க வேண்டுமென்றால், மதித்துத் தன்னிடம் மயங்கவேண்டுமென்றால், அப்படிச் சிலப் புத்தகங்களும் தன்னுடையப் புத்தக அலமாரியில் இடம் பெற்றிருக்க வேண்டும் என்பதற்காக அவன் அதைப் பத்திரப்படுத்தி வைத்திருப்பான்!

அந்தப் புத்தகத்தை மட்டும் அவனிடம் இருந்து எப்படியாவது கிளப்பிவிட்டால்?-யாரால் முடியும் அது?-ரூபா அவனுடன் கொண்டிருந்த தொடர்பு நீடித்திருந்தாலும்...

நீடித்திருந்தால் மட்டும் என்ன? அவளிடம் அதை எப்படிச் சொல்லியிருக்க முடியும்? சொல்லியிருந்தால், அவள் தன்னைப் பற்றி என்ன நினைத்திருப்பாள்? இல்லை, அவனைப் பற்றித்தான் என்ன நினைத்திருப்பாள்? -வெட்கக்கேடுதான்!

மணி அண்ணனிடம் சொன்னால் அது ஒரு வேளை நடக்கலாம்; ஆனால் அதை இப்போதா சொல்வது?-கூடாது, கூடவே கூடாது.

இன்று காலை மீனாட்சியம்மாள் சொன்னார்களே, 'இந்த உலகத்தில் நீ சிரிக்கும்போது உன்னுடன் சேர்ந்து சிரிக்க எத்தனை பேர் வேண்டுமானாலும் தயாரா யிருப்பார்கள்; அழும்போது உன்னுடன் சேர்ந்து அழ ஒருவரும் தயாராயிருக்கமாட்டார்கள்!'' என்று. அது என்னமோ உண்மைதான். ஆனால் அந்த ஒரு விஷயத்தில் மட்டும் தான் பாக்கியசாலி! தான் அழுதால் தன்னுடன் சேர்ந்து அழத் தனக்கு ஓர் அண்ணா இருக்கிறார்; அவர்தான் மணி அண்ணா!

கால்கள் தங்கள் விருப்பம்போல் நடக்க, மனம் தன் விருப்பம்போல் எண்ணிக் குமைய, அவள் பஸ்ஸை மறந்து-ஏன், தன்னையே மறந்து போய்க்கொண்டிருந்தபோது, 'விர்'ரென்று வந்த 'டாக்சி' ஒன்று அவளுக்கு அருகே 'டக்' கென்று நின்றது; அந்த டாக்சியிலிருந்து வெளியே வந்த ஒரு கை 'லபக்'கென்று அவள் கையைப் பிடித்தது!

# 21. பெரிய இடத்து விவகாரம்

*டாக்சி; அதிலிருந்து ஒரு கை!-அப்படியே திடுக்கிட்டு நின்றுவிட்டாள் அருணா.*

*''என்ன அருணா. பயந்துவிட்டாயா?'' என்றார் அவளுடைய அப்பா ஆபத்சகாயம், வண்டிக்குள்ளிருந்து சிரித்தபடி.*

*''போங்கப்பா, இப்படியா திடீரென்று என் கையைப் பிடிப்பார்கள்? பேசாமல் வண்டியை நிறுத்தி ஒரு குரல் கொடுத்திருந்தால் போதாதா?''*

*''போதும்தான்! என்ன இருந்தாலும் போலீஸ் இலாகாவில் வேலை பார்த்தவன் பார், என்னுடைய புத்தி அப்படித்தான் போகும்-அது சரி நீ இப்போதுதான் மகாபலிபுரத்திலிருந்து வருகிறாயா?''*

*''ஆமாம், பஸ் தவறிவிட்டது!''*

*ஏதோ ஞாபகத்தில் இப்படிச் சொல்லிவிட்ட அருணா, அடுத்தக் கணமே தவற்றை உணர்ந்து நாக்கைக் கடித்துக் கொண்டாள். அதற்குள், ''பஸ் தவறிவிட்டதா!'' என்று வியப்பினால் வாயைப் பிளந்தார் ஆபத்சகாயம்.*

*''இல்லை அப்பா, பஸ் வர நேரமாகிவிட்டது என்றேன்!'' என்றாள் அவள், அதற்குள் தன்னைச் சமாளித்துக் கொண்டு.*

*''அதையா இவ்வளவு அழகாகச் சொல்கிறாய்? அரசாங்கக் காரியம் எதுதான் நேரத்தோடு நடக்கிறது, பஸ் நேரத்தோடு வர?'' என்றார் அவர், தானும் ஒரு முன்னாள் அரசாங்க அதிகாரிதான் என்பதை அறவே மறந்து.*

*அப்போது, ''அதை ஏன் சொல்கிறீர்கள், போங்கள்! சுதந்திரம் கிடைத்தாலும் கிடைத்தது,மனிதனுக்கு எதிலும் சுதந்திரம் இல்லை இப்போது; எடுத்ததற்கெல்லாம் பெர்மிட், லைசென்ஸ், கோட்டா என்று உயிரை வாங்கி*

விடுகிறார்கள்!'' என்று இன்னொரு குரல் அந்தக் காருக்கு உள்ளேயிருந்து வந்தது.

''அது யார், அது?'' என்று குனிந்து பார்த்தாள் அருணா.

அதற்குள், ''என்னம்மா அப்படிப் பார்க்கிறாய்? அவர் வேறு யாருமில்லை; என்னுடைய நண்பர் சுகானந்தம்தான்! வழியில் அவருடைய கார் படுத்துக்கொண்டு விட்டது; தவித்துக் கொண்டு இருந்தார். நான்தான் 'போகிற போக்கில் உங்களையும் கொண்டுபோய் உங்கள் வீட்டில் விட்டு விடுகிறேன், வாருங்கள்!' என்று அவரை அழைத்துக் கொண்டு வருகிறேன். மனிதர் எதிலும் சுதந்திரமில்லை என்று சும்மா ஒரு பேச்சுக்குச் சொல்கிறாரே தவிர, இவரைப் பொறுத்தவரை எல்லாச் சுதந்திரங்களையும் எந்தவிதமான தடையுமின்றி அனுபவித்துக்கொண்டுதான் வருகிறார்!- என்ன சுவாமி, நான் சொல்வது சரிதானே?'' என்றார் ஆபத் சகாயம், தன் கண்களில் ஒன்றை மட்டும் ஓர் அடி அடித்து.

இம்மாதிரி 'கண்ணடிக்கும் வழக்க'மெல்லாம் 'சோதாப் பயல்க'ளிடம்தானே உண்டு!-ஆனால் ஒரு வித்தியாசம்- சோதாப் பயல்கள் அடித்தால் அது சோதாத்தனம்; பெரிய மனிதர்கள் அடித்தால் அது பெரிய மனிதத்தனம்!

எனவே, அவர் தன்னைப் பார்த்துக் கண் அடித்ததைச் சிறுமையாக எடுத்துக்கொள்ளாமல் பெருமையாகவே எடுத்துக்கொண்டு, ''அப்படியே அனுபவித்தாலும் அடி வயிற்றில் நெருப்பைக் கட்டிக்கொண்டுதானே அனுபவிக்க வேண்டியிருக்கிறது?'' என்றார் சுகானந்தம்.

''யாரிடம் இதைச் சொல்கிறீர்கள், என்னிடமா? நீங்கள்தான் யாரை வேண்டுமானாலும் விலைக்கு வாங்கிக்கொண்டு விடுவீர்களே, ஐயா! நீங்களாவது, அடிவயிற்றில் நெருப்பைக் கட்டிக்கொண்டு இருப்பதாவது?- நீ ஏறம்மா, வண்டியில்!'' என்றார் ஆபத்சகாயம்.

அப்போது அவரை முந்திக்கொண்டு சுகானந்தம் தான் உட்கார்ந்திருந்த 'பின் ஸீட்'டின் கதவைத் திறந்துவிட,

''நீங்கள் வந்து இப்படி உட்கார்ந்துகொள்ளுங்களேன், அப்பா!'' என்றாள் அருணா, டிரைவருக்குப் பக்கத்தில் 'முன் ஸீட்'டில் உட்கார்ந்திருந்த ஆபத்சகாயத்தை நோக்கி.

''சும்மா உட்கார் அம்மா, அவர் உனக்கு அப்பா மாதிரி!'' என்றார் அவர்.

அருணா, தயக்கத்துடன் உட்கார்ந்து கதவைச் சாத்த, ''நீ போப்பா!'' என்றார் ஆபத்சகாயம், டிரைவரை நோக்கி.

அதற்குமேல் ஆபத்சகாயத்திடம் பேச விரும்பாமல், ''எப்படியிருந்தது மகாபலிபுரம்?'' என்று அவருடைய பெண்ணுடன் பேச ஆரம்பித்துவிட்டார், சுகானந்தம்!

அப்போது அவர் தன்னைப் பார்த்த பார்வை 'அப்பா பார்க்கும் பார்வை' மாதிரி இல்லாமல் இருக்கவே, ''எப்படி இருக்க வேண்டுமோ, அப்படி இருந்தது!'' என்றாள் அவள், நறுக்குத் தெறித்தாற்போல!

''தேவலையே, ரத்தினச் சுருக்கமாகப் பேசுகிறாளே!'' என்றார் அவர், அவளை மேலும் ஆழம் பார்க்கும் நோக்கத்துடன் அவள் முதுகை லேசாகத் தடவி.

அருணா அதற்கு இடம் கொடாமல் நெளிந்து, ''இதென்னப்பா இது! இன்னும் நான் குழந்தையா என்ன, இவர் என் முதுகில் தடவிக் கொடுக்க?'' என்றாள் எரிச்சலுடன்.

''எனக்கு நீ குழந்தையென்றால், அவருக்கும் குழந்தைதான்!'' என்றார் அந்த அசட்டு அப்பா.

அவர் சொன்னது பிடிக்கவில்லை அவளுக்கு, ''அது என்ன இழவோ!'' என்று தனக்குள் முணுமுணுத்தவாறே கொஞ்சம் நகர்ந்து உட்கார்ந்தாள்.

''கல்லூரியில் படிக்கிற பெண்ணா, லட்சணமாயில்லையே? கலகலப்பாகப் பேசிப் பழகக்கூடத் தெரியவில்லையே, இவளுக்கு!'' என்றார் சுகானந்தம், அவளைத் தன் கடைக்கண்ணால் கணித்துக்கொண்டே.

''வித்தியாசமாக நினைக்காதீர்கள்! இவள் அம்மா கொஞ்சம் கர்நாடகம்; அதனால் இவளும் கொஞ்சம் கர்நாடகமாயிருக்கிறாள்!'' என்று அவருக்குச் சமாதானம் சொன்னார் ஆபத்சகாயம்.

''ஓஹோ! இவளுக்கு எப்போதுக் கல்யாணம் செய்வதாக உத்தேசம்?''

''இந்த வருடத்தில் செய்துவிடலாமென்று இருக்கிறேன்!''

''மாப்பிள்ளை?''

''இனிமேல்தான் தேடவேண்டும்!''

சுகானந்தம் சிரித்தார்; சிரித்துக்கொண்டே கேட்டார்:

''எனக்குக் கல்யாணம் செய்து கொடுத்து விடுகிறீரா இவளை?''

ஆபத்சகாயம் திரும்பி, ''இன்னும் எத்தனை கல்யாணங்கள்தான் செய்துகொள்ளப் போகிறீர்கள் ஐயா, நீங்கள்?'' என்று கேட்டார், தானும் அவருடன் சேர்ந்து சிரித்துக் கொண்டே.

''அதற்கும் தான் கட்டுப்பாடு விதித்துவிட்டார்களே, நமது சுதந்திர சர்க்கார்!'' என்றார் அவர்.

''அதனாலென்ன, அதற்காக நீங்கள் ஏகபத்தினி விரதம் இருப்பதாகத் தெரியவில்லையே, எனக்கு!''

சுகானந்தம் மறுபடியும் சிரித்தார்; சிரித்துக்கொண்டே சொன்னார்:

''ஏதோ என்னாலானத் தொண்டு; பெண்ணைப் பெற்றவர்களின் துயரை அந்த வகையிலாவதுத் துடைக்கிறேனே!''

''பொல்லாத ஆளய்யா, நீங்கள்! அதையும் ஒருத் தொண்டாகவா எடுத்துக்கொண்டுவிட்டீர்கள்?'' என்றார், ஆபத்சகாயமும் அவருடன் சேர்ந்து மறுபடியும் சிரித்துக்கொண்டே.

அந்தப் பெரிய மனிதர்களின் சிரிப்பையும், சிருங்காரரசத்தில் அவர்களுக்கு இருந்த லயிப்பையும் அருணாவால் தாங்க முடியவில்லை; "அப்பா! வண்டியைக் கொஞ்சம் நிறுத்தச் சொல்லி என்னை இறக்கிக் கீழே விட்டுவிடுங்களேன்; நான் பேசாமல் பஸ்ஸிலேயே வீட்டுக்குப் போய்விடுகிறேன்!" என்றாள் அவசர அவசரமாக.

அவள் எவ்வளக்கெவ்வளவு அவசரப்பட்டாளோ, அவ்வளவுக்கவ்வளவு அமைதியாக, "அவசரப்படாதே, அம்மா, ஐயாவைக் கொண்டு போய் அவருடைய வீட்டில் விட்டுவிட்டுப் போனால் போச்சு!" என்றார் அவர்.

அப்போது, "ஐயாவின் வீடு எங்கே இருக்கிறது? அதைச் சொல்லவில்லையே. எனக்கு!" என்றான் டிரைவர்.

"அவருக்கு எத்தனையோ வீடுகள்! எந்த வீட்டுக்குப் போகிறாரோ, என்னமோ, ஏன் சுவாமி, எங்கே போகவேண்டும் நீங்கள்?"

"கீழ்ப்பாக்கத்திலுள்ள கீதாவின் வீட்டுக்கு!"

அவ்வளவுதான், கார் கீழ்ப்பாக்கத்தை நோக்கித் திரும்பியது.

அங்கே...

வந்தது காராக இல்லாமல் டாக்சியாயிருக்கவே, "கோன் ஹை?" என்றான் கூர்க்கா, அதை நிறுத்தி.

"துமாரா ஸாப், அந்தர் தேக்கோ!" என்றார் ஆபத்சகாயம், தனக்குத் தெரிந்த இந்தியில்.

"மேரா ஸாப்!" என்று வியப்புடன் சொல்லிக்கொண்டே அவன் குனிந்துப் பார்த்துவிட்டு, "சலாம் ஸாப், அச்சா ஜாவ்!" என்றான் 'கேட்'டைத் திறந்து.

டாக்சி உள்ளே சென்றுப் 'போர்டிகோ'வில் நின்றதுதான் தாமதம், உள் பக்கம் தாளிடப்பட்டிருந்த கதவை அவசர அவசரமாகத் திறந்துக் கொண்டு அரைக்கால்

சட்டை, பனியனுடன் வெளியே வந்த ஒருப் பேர்வழி, ''யார் அது?'' என்றான், வியர்த்து விறுவிறுத்திருந்த நிலையிலே.

அந்த நிலையிலும் அவனை இனம் கண்டுக்கொண்ட ஆபத்சகாயம், ''என்னடா வேணு, என்னைத் தெரிய வில்லையா உனக்கு?'' என்றார் ஓர் அசட்டுச் சிரிப்புடன்.

அதற்குள், ''வேணுவா! அவன் ஏன் வந்தான், இங்கே?'' என்றுக் கேட்டுக்கொண்டேத் தனக்குப் பக்கமாக இருந்த கதவைத் திறந்துகொண்டுக் கீழே இறங்கினார் சுகானந்தம்.

அவரைப் பார்த்தானோ இல்லையோ, ''ஐயோ முதலாளி!'' என்று கத்திக் கொண்டே அவன் எடுத்தான் ஓட்டம்!

ஆபத்சகாயம் ஒன்றும் புரியாமல் கீழே இறங்கி, ''அவன் ஏன் உங்களைக் கண்டதும் ஓடுகிறான்?'' என்றார் சுகானந்தத்தை நோக்கி.

''அதுதானே எனக்கும் தெரியவில்லை?'' என்றார் அவர்!

''என்ன இப்படிச் சொல்கிறீர்கள், அவனும் உங்கள் டிரைவர்தானே?''

''ஆமாம். ஆனால், இப்போது அவன் இங்கே வேலையில் இல்லை!''

''நிறுத்திவிட்டீர்களா?''

''வேறு வழி? வரவர நடையுடை பாவனைகளில் அவனுக்கும் எனக்கும் வித்தியாசமே தெரியாமற் போய்விட்டது. எங்கேயாவது டீ, டின்னர் என்று போனால் முதலில் அவனைத்தான் வரவேற்கிறார்கள்; 'நான் இல்லை. இவர்தான் முதலாளி!' என்று அவன் சொன்ன பிறகே என்னை வரவேற்கிறார்கள்!''

''இந்தக் கேலிக்கூத்து பொதுவாக எல்லாப் பெரிய மனிதர் வீடுகளிலும் இருக்கிறது!''

''எப்படி இல்லாமற் போகும்? அதே சாப்பாடு, அதேத் துணிமணி, அதேக் கார் சவாரி, அதே சுக சௌகரியங்கள்...''

''இதற்குத்தான் வெள்ளைக்காரன் டிரைவர்களுக்கென்று தனி உடுப்பு தைத்துக் கொடுத்துவிடுகிறான்!''

''நான் மட்டும் தைத்துக் கொடுக்காமலா இருக்கிறேன், தைத்துக் கொடுக்கத்தான் செய்கிறேன்! ஆனால் அவன் அதைப் போட்டால்தானே?''

''போடாவிட்டால் நிறுத்திவிட வேண்டும்!''

''அதைத்தான் செய்தேன் நான்; அவன் என்னடா என்றால்...''

அவர் முடிக்கவில்லை; அதற்குள் கலைந்துபோன தன் ஆடை அணிகளைச் சரி செய்துகொண்டே அங்கே வந்த கீதா, ''நன்றாயிருக்கிறது, நீங்களும் உங்கள் டாக்சியும்! எனக்குப் 'போன்' பண்ணியிருந்தால் கூட நான் உங்களுக்கு வண்டி அனுப்பியிருப்பேனே?'' என்றாள் அவருடைய 'அந்தஸ்'தை அவருக்கு ஞாபகப்படுத்தி அந்த அந்தஸ்தைக் கொண்டே தன் அயோக்கியத்தனத்தையும் மறைத்துக் கொள்வதற்காக!

அவரோ அவள் எதிர்பார்த்ததற்கு நேர்விரோதமாக, ''அது சரி, அந்த வேணு ஏன் இங்கே வந்தான் இப்போது?'' என்றார் அவளை ஊடுருவிப் பார்த்தபடி.

''வேலை வேண்டுமென்று வந்தான்! வேறு ஆள் வைத்தாய்விட்டது. நீ போய் வா என்றேன்; போய்விட்டான்!''

''வேலை கேட்க வந்தவனா கதவை உள்ளே தாளிட்டுக் கொண்டு வந்துக் கேட்டான்?''

''கதவை உள்ளேத் தாளிட்டுக்கொண்டு இருந்தானா! அதை நான் பார்க்கவேயில்லையே? அவன் வரும்போது நான் 'டிரஸ்ஸிங் ரூ'மில் இருந்தேன்!''

''டிரஸ்ஸிங் ரூமில் இருந்தாயா! எங்கே, அந்தப் புது டிரைவர்?''

''வேலை ஒன்றுமில்லையே என்று வீட்டுக்கு அனுப்பிவிட்டேன்!''

''சமையற்காரன்?''

''ஆஸ்பத்திரியில் இருக்கும் தன் மகளைப் பார்ப்பதற்காகப் போயிருக்கிறான்!''

''இப்போது நீ இந்த வீட்டில் தனியாகத்தான் இருக்கிறாயா?''

''ஆமாம், அதில் என்ன சந்தேகம் உங்களுக்கு?''

''ஒன்றுமில்லை; என்னைக் கண்டதும் அவன் ஏன் ஓடவேண்டும்?''

''கதவைத் தாளிட்டுக்கொண்டு அவன் ஏதாவது திருடிக்கொண்டு இருந்தானோ என்னமோ?''

அவள் திரும்பினாள்; ''அப்படியும் செய்வதுண்டு சில திருட்டுப்பயல்கள்! நீங்களும் உள்ளேப் போய்ப் பாருங்கள்!'' என்றார் ஆபத்சகாயம்.

''நான் மட்டுமென்ன? நீரும் வாரும் ஐயா, உள்ளே!'' என்றார் சுகானந்தம்.

''நீயும் வாம்மா!'' என்று ஆபத்சகாயம் தன் மகள் அருணாவையும் அழைத்துக் கொண்டு உள்ளே சென்றார்.

''சரிதான்! நேற்று நீங்கள் என் செலவுக்காக ஐநூறு ரூபாய் கொடுக்கவில்லையா, அதை அடித்துக் கொண்டு போய் விட்டான் அவன்!'' என்று சொல்லிக்கொண்டே, கீதா அவர்களுக்கு எதிர்த்தாற்போல் வந்து நின்றாள்.

''நான் நினைத்தது சரியாய்ப் போய்விட்டது; லேசில் விடக்கூடாது அவனை!'' என்றார் ஆபத்சகாயம்.

''விடாமல் என்ன செய்வதாம்?'' என்றாள் கீதா.

''ஏன், போலீஸில் புகார் செய்வது!''

''ஆமாம், போங்கள்! அந்த ஐநூறு ரூபாய்க்காகப் போலீஸ் ஸ்டேஷனுக்கும் வீட்டுக்குமாக யார் அலைவதாம்?''

''அதற்குமேல் உங்கள் விருப்பம்; நான் வரட்டுமா?''

திரும்பினார் ஆபத்சகாயம்; ''உட்காருங்கள், காபி சாப்பிட்டுவிட்டுப் போகலாம்!'' என்றார் சுகானந்தம், அவரை விட்டாலும் அவருடையப் பெண்ணை விட மனமில்லாமல்!

அதற்குள், ''சமையற்காரன் கூட இல்லையே, காபிப் போட?'' என்றாள் கீதா, கையைப் பிசைந்துக் கொண்டே.

''அவன் இல்லாவிட்டால் என்ன, கூர்க்காவை ஓட்டலுக்கு அனுப்பி வாங்கி வரச் சொல்லேன்?'' என்றார் அவர்.

''சரி!'' என்று அவள் வெளியேப் போனாள்; ''எங்களால் உங்களுக்கு ஏன் இவ்வளவு சிரமம்?'' என்றார் ஆபத்சகாயம்.

''நன்றாயிருக்கிறது, வீடு தேடி வந்தவர்களை சும்மாவா அனுப்பிவிடுவது? நீங்கள் இங்கேயே உட்கார்ந்திருங்கள்; நான் போய் உடை மாற்றிக் கொண்டு வந்துவிடுகிறேன்!'' என்று சுகானந்தம் உள்ளே போனார்.

'அதுவரை டாக்சி நிற்பானேன்? போகும்போது வேறு டாக்சி பிடித்துக்கொண்டால் போகிறது!' என்று நினைத்த ஆபத்சகாயம், ஐந்து ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்து அருணாவிடம் நீட்டி. ''அந்த டாக்சியை அனுப்பிவிட்டு வாம்மா!'' என்றார்.

அதை வாங்கிக்கொண்டு வெளியே வந்தபோது அவள் கண்ட ஒரு காட்சி அவளைத் திடுக்கிட வைக்கவே, ''அப்பா, அப்பா! இங்கே பார்த்தீர்களா, அப்பா?'' என்றாள் அவள்.

''என்னம்மா அது?'' என்று கேட்டுக்கொண்டே வெளியே வந்தார் ஆபத்சகாயம்.

''அதோ பாருங்கள்!''

அருணா காட்டிய திசையில் ஆபத்சகாயத்தின் பார்வை சென்றது-அங்கே மதிற்சுவருக்கு அப்பால் வேணு நின்று கொண்டிருந்தான்; அவசரத்தில் மறந்து வைத்துவிட்டுப் போன அவன் சட்டை வேட்டியை எடுத்து அவனிடம் கொடுத்துக்கொண்டிருந்தாள் கீதா!

''இப்படியும் நடப்பதுண்டா இங்கே?'' என்றாள் அருணா வியப்புடன்.

''ஸ், பேசாதே! அதெல்லாம் பெரிய இடத்து விவகாரம்!'' என்று அவள் வாயைப் பொத்தினார் ஆபத்சகாயம்!

# 22. அருணா பெற்ற அனுபவம்

பெரிய இடத்து விவகாரம்!-அதைப்பற்றிப்பேசக் கூடாது! பேசினால் பண்புக் குறைவு!

அசிங்கத்தை எவ்வளவு அழகானத் திரையிட்டு மறைக்கிறார்கள், இவர்கள்! உண்மையில் இவர்கள் நேசிப்பதுப் பண்பையா, பணத்தையா?

இப்படிப் பேசும் இவர்கள் எங்கே போய்க்கொண்டிருக் கிறார்கள்? இல்லை, தாங்கள் அங்கம் வகிக்கும் சமூகத்தைத்தான் எங்கேத் தள்ளிக்கொண்டிருக்கிறார்கள்? சமுத்திரத்திலா, சாக்கடையிலா?

அருவருக்கத் தக்க இவர்களுடன் தொடர்பு கொண்டிருக்கும் இந்த அப்பாவுக்குத்தானா பெண்ணாய்ப் பிறந்திருக்கிறேன், நான்? மாசு படிந்த இவருடைய மடியில்தானா இத்தனை நாளும் வளர்ந்திருக்கிறேன், நான்?-வெட்கக் கேடு!

தொடர்பென்றால் அந்தத் தொடர்பும் இன்று நேற்றுக் கொண்டத் தொடர்பாகவா இருக்கிறது?-இல்லையே, எத்தனையோ வருடங்களாகக் கொண்டத் தொடர்பாக வல்லவா இருக்கிறது?

இல்லையென்றால் இந்த வீட்டுப் பெரிய மனிதரையும் தெரிந்திருப்பதோடு, அவருடையக் கார் டிரைவரையும் தெரிந்திருக்குமா இவருக்கு?

பெரிய இடமாம், பெரிய இடம்!-இருக்க ஒரு குடிசைக் கூட இல்லாமல் இந்த உலகத்தில் தவிப்போர் எத்தனையோ பேர்! ஆனால் இந்த வீட்டுப் பெரிய மனிதருக்கோ ஒரு வீடல்ல, இரண்டு வீடல்ல-எத்தனையோ வீடுகள் இந்தச் சென்னைமாநகரிலே இருக்கின்றனவாம்!

வீடுகள் என்றால் சாதாரண வீடுகளாகவா இருக்கும்?-இருக்காது; ஒவ்வொன்றும் ஒரு குட்டி நகரமாகவே இருக்கும்!

உதாரணத்துக்கு இந்த ஒரு வீடே போதுமே?-தெருவிலுள்ள 'கேட்'டுக்கும், பங்களாவை ஒட்டினாற் போலுள்ள 'போர்டிகோ'வுக்கும் கிட்டத்தட்ட ஒரு பர்லாங் தூரமாவது இருக்கும். முன்னால்தான் இப்படியென்றால், பின்னாலோ?-ஒரு காடே உருவாகியிருக்கிறது!-எத்தனை மரங்கள், எத்தனைச் செடிகள், எத்தனைக் கொடிகள்!

ஏன் இந்தக் காடு இங்கே?-ஒருவேளை தன் ஆசை நாயகியுடன் ஓடிப் பிடித்து விளையாடுவதற்காக இருக்குமோ?-அப்படியே விளையாடினாலும் அவள் அந்த டிரைவருடன் அல்லவா விளையாடுவாள் போலிருக்கிறது!

விசுவாசமுள்ள வேலைக்காரன்!-எஜமான் இட்ட வேலையை மட்டுமல்ல; எசமானி இட்ட வேலையையும் தட்டாமல் செய்யும் விசுவாசமுள்ள வேலைக்காரன்!-அந்த வேலையில் எந்த விதமான பேதமும் பார்ப்பதில்லை போலிருக்கிறது, அவன்!

வேலையில் இருந்தபோது மட்டுமல்ல; இல்லாத போதும் அவன் விசுவாசமுள்ள வேலைக்காரனாகவே இருக்கிறான்போல் இருக்கிறது!-ஒருவேளை இந்த வேலைக்கும் அவனுக்கு ஏதாவது கூலி கிடைக்கிறதோ என்னமோ, யார் கண்டது?

இந்த லட்சணத்தில் வாசலில் ஒரு கூர்க்கா; அவனுக்கு ஒரு 'காங்கிரீட்' குடை!-எல்லாம் ஒரே வேடிக்கைதான், போ!

அந்த வேடிக்கைகளில் ஒன்று அவர் டாக்சியில் வந்தார் என்பதற்காக அவள் கோபித்துக்கொள்வது!-கோபித்துக் கொள்வதாவது, அதில் ஒரு பெருமை அவளுக்கு! அதாவது, 'நாங்கள் ஒன்றும் ஒரு காரோடு இல்லை; ஒன்று கெட்டால் இன்னொன்று இருக்கிறதாக்கும் எங்களுக்கு!' என்று அவள் சொல்லாமல் சொல்கிறாள்!

போகட்டும்; வேறு எந்தப் பெருமை இல்லாவிட்டாலும் அந்த ஒரு பெருமையாவது அவர்களுக்கு இருக்க வேண்டாமா?-இருந்துவிட்டுப் போகட்டும்!

ஆனால், கார்களில் ஒன்று கெட்டால் இன்னொன்று இருப்பது சரி; காதலர்களிலும் ஒருவன் கெட்டால் இன்னொருவன் இருக்கலாமா?-ஒருவேளை இதுவும் அவர்களுடைய பெருமைகளில் ஒன்றாயிருக்குமோ?-இருந்தாலும் இருக்கும்!

இருப்பவர்களுக்கு அந்தப் பெருமை தெரியும்; அந்தப் பெருமையின் அருமையும் தெரியும். இல்லாதவர்களுக்கு அந்தப் பெருமை எங்கே தெரியப் போகிறது? அந்தப் பெருமையின் அருமைதான் எங்கே தெரியப் போகிறது?

ஐநூறு ரூபா ஒரு பொருட்டாகப் படவில்லை அவளுக்கு; அது ஒரு குறையாகப் படவில்லை அவருக்கு!-அந்த அளவுக்குப் பணத் திமிர் பிடித்த அவருக்குத்தான் பெர்மிட் வேண்டாமாம்; லைசென்ஸ் வேண்டாமாம்; கோட்டா வேண்டாமாம்!-அவையெல்லாம் இருக்கும்போதே இந்த நிலை என்றால் இல்லாவிட்டால் இன்னும் என்ன நிலையில் இருப்பாரோ?

இப்படிப்பட்ட உத்தமோத்தமர்களைச் சட்ட திட்டங்களால் மாற்ற முயல்வது தவறு, தார்மீக ஆன்மீக உபதேசங்களால் மாற்ற முயலவேண்டும் என்று சிலர் சொல்கிறார்களே, அவர்களை என்ன செய்தால் தேவலை?

அவர்கள் சொல்லும் தார்மீக ஆன்மீக உபதேசங்கள் எல்லாம் இந்தச் 'சத்திய சீலர்'களுக்கு முன்னால் செயலற்றுப் போன பிறகுதானே சட்டதிட்டங்கள் வந்திருக்கின்றன, இவர்களை மாற்ற? அவையும் வேண்டாமென்றால், தலைமுறைத் தலைமுறையாக இவர்களால் கசக்கிப் பிழியப்பட்டு வரும் மக்கள், நசுக்கி மிதிக்கப்பட்டு வரும் மக்கள் என்னதான் ஆவது?-கொடுமை, கொடுமையிலும் கொடுமை!

இவ்வாறு எண்ணி அவள் கொதித்துக் குமுறிக் கொண்டிருந்தபோது, ''என்னம்மா, இங்கேயே நின்று விட்டாய்?'' என்றார் உள்ளே போன அவள் அப்பா, அவளைக் காணாமல் வெளியே வந்து.

''கால் கூசுகிறது அப்பா, உள்ளே வர!'' என்றாள் அவள், முகத்தைச் சுளித்து.

''மனம்தான் கூசும் என்று சொல்வார்கள்; உனக்குக் காலும் கூசுகிறதா?-நல்ல பெண்தான், போ! இப்படிப்பட்ட இடங்களுக்கு வந்து உனக்குப் பழக்கமில்லை! அதனால்தான் கூசுகிறது!-வாழ்க்கை என்றால் இவர்கள் வாழ்வதுதான் வாழ்க்கை அம்மா, நாமெல்லாம் வாழ்வது ஒரு வாழ்க்கையா? வா உள்ளே; இன்னும் நீ இங்கே தெரிந்துக் கொள்ள வேண்டியது எவ்வளவோ இருக்கிறது!''

''வேண்டாம் அப்பா, தெரிந்து கொண்டவரை போதும்!''

''எதைத் தெரிந்துகொண்டாய், நீ?''

''எஜமான் இல்லாத வேளையில் மாஜி டிரைவரை எப்படி உள்ளே வரவழைப்பது, வந்துவிட்டால் அவனை எப்படி வெளியே அனுப்புவது என்பதையெல்லாம் தெரிந்துகொண்டேன், அப்பா!''

''விட்டுத் தள்ளு, அதை! அவருக்குள்ள எத்தனையோ 'ஸ்டெப்னிக'ளில் அது ஒன்று. அந்த ஸ்டெப்னி எக்கேடு கெட்டால் உனக்கு என்ன? நீ அவரைப் பார், அவர் காரைப்

பார். அவருடைய பங்களாவைப் பார், அந்தப் பங்களாவின் மூலை முடுக்குகளையெல்லாம் அழகு படுத்தும் அகில உலக சித்திர விசித்திரங்களையெல்லாம் பார் அம்மா, பார்!''

''எல்லாவற்றையும் பார்த்துவிட்டேன், அப்பா!''

''அதிலிருந்து என்னத் தெரிகிறது, உனக்கு?''

''பணத்திமிர்!''

''ஐயோ பெண்ணே, அப்படியா நினைக்கிறாய் நீ?, வாழ்க்கை ஒரு கலை என்று சொல்கிறார்களே, அந்தக் கலையை நீ இங்கே பார்க்கவில்லையா?''

''பார்த்தேன்! அது கண்ணீர் விட்டுக்கொண்டிருக்கிறது, பாழும் பணம் தன்னையும் விலை கொடுத்து வாங்கி விடுகிறதே என்று!''

''ஆச்சரியமாயிருக்கிறது, என்னுடைய பெண்ணா இப்படிப் பேசுகிறாள் என்று எனக்கே ஆச்சரியமா யிருக்கிறது!''

இந்தச் சமயத்தில், ''ஆச்சரியம் உங்களுக்கு மட்டு மல்ல; எனக்கும்தான்! நீங்கள் அவளை அழைத்துக்கொண்டு உள்ளே வாருங்கள்; பழகப் பழக எல்லாம் சரியாய்ப் போகும்!'' என்றார், அப்போதுதான் உடை மாற்றிக் கொண்டு வெளியே வந்த சுகானந்தம்.

அதற்குள் ஹாலிலிருந்த 'ரேடியோ கிரா'மைத் திருப்பிப் பாட வைத்துவிட்டு,''காபி தயார்!'' என்றாள் கீதா.

எல்லோரும் உள்ளே சென்றனர்; அங்கிருந்த டீபாயின் மேல் இரண்டு கப் காபி மட்டுமே வைக்கப்பட்டிருந்தது.

''உங்களை விட்டுவிட்டா நாங்கள் காபி சாப்பிடுவது?'' என்றார் ஆபத்சகாயம்.

''காபி உங்களுக்கும் எனக்கும் இல்லை; கீதாவுக்கும் அருணாவுக்கும்தான்! நீங்கள் வாருங்கள், என்னுடன்!'' என்று அவருடைய கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு உள்ளே சென்றார் சுகானந்தம்.

அங்கே, அதாவது பங்களாவின் ஒரு பக்கத்தில் ஒரு சிறு சினிமா தியேட்டர் நிர்மாணிக்கப்பட்டு இருந்தது. அந்தத் தியேட்டருக்குள்ளே பத்துப் பதினைந்து சோபாக்களே போடப்பட்டிருந்தன. அந்த சோபாக்கள் ஒவ்வொன்றுக்கும் முன்னால் ஒரு டீபாய்; அவற்றுக்கு எதிர்த்தாற்போல் ஒரு சிறுதிரை; அந்தத் திரையின் இரு மருங்கிலும் ஓர் ஆணும் பெண்ணும் நிர்வாணக் கோலத்துடன் ஒருவரையொருவர் தழுவிக்கொண்டிருக்கும் ஓவியம்!

அந்தச் சின்னஞ் சிறு சிங்காரத் தியேட்டருக்குள்ளே போய் அமர்ந்ததும் அங்கிருந்த ஒரு பொத்தானை ஓர் அழுத்து அழுத்தினார் சுகானந்தம்; கீதா வந்து நின்றாள்.

''சமையற்காரன் வந்துவிட்டானா?'' என்றார் அவர்.

''வந்துவிட்டான்!'' என்றாள் அவள்.

''கொண்டு வரச்சொல்!''-அவர் சொன்னது அவ்வளவு தான்; அடுத்த வினாடியே இரண்டு விஸ்கி புட்டிகள் வந்து அவர்களுக்கு எதிர்த்தாற்போல் உட்கார்ந்தன. அவற்றைத் தொடர்ந்து நாலு சோடா புட்டிகள், இரண்டுக் கண்ணாடி டம்ளர்கள் ஆகியவையும் வந்து சேர்ந்தன.

''துணைக்கு ஏதாவது...''

சமையற்காரன் முடிக்கவில்லை; ''வழித்துணை இல்லாமல் முடியுமா? கொண்டு வா, இரண்டு கோழி; ஒரு டஜன் முட்டை!'' என்ற உத்தரவு பிறந்தது சுகானந்தத்தினிடமிருந்து.

''இதோ கொண்டு வந்துவிட்டேன்!'' என்று அவன் காற்றாய்ப் பறந்ததும், ''இரண்டு பேரும் சேர்ந்தாற்போல் இப்படிப் பொழுதைப் போக்கி ரொம்ப நாட்களாகிவிட்டன, இல்லையா?'' என்றார் சுகானந்தம், விஸ்கி புட்டிக்குத் 'திறப்பு விழா' நடத்திக்கொண்டே.

ஆபத்சகாயம் சொன்னார்; ஆற்றாமையுடன்தான் சொன்னார்:

''என்று நான் பதவியிலிருந்து விலகினேனோ, அன்றிலிருந்து நீங்கள் எங்கே என்னைக் கவனிக்கிறீர்கள்?''

ஆம், அவர் இவரைக் கவனிப்பதில்லைதான்!-காரணம், இவர் பதவியில் இருந்தபோது இவருடைய உதவி அவருக்குத் தேவையாயிருந்தது; இல்லாதபோது தேவையில்லாமற் போய் விட்டது!-உண்மை இதுதான் என்றாலும் இதைச் சொல்லவில்லை அவர், சொன்னால் அன்புக்கும் குறைவு, பண்புக்கும் குறைவு என்று இப்படிச் சொன்னார்:

''கவனிக்காமலென்ன, நான் சென்னையில் இருப்பதோ மாதத்தில் நாலைந்து நாட்கள், அந்த நாலைந்து நாட்களில் நான் எத்தனையோ வேலைகளைக் கவனித்தாக வேண்டியிருக்கிறது!''

''எனக்குத் தெரியாதா. நேரமில்லாமல்தான் நீங்கள் என்னைக் கவனிக்கவில்லையென்று!''

''அப்புறம் என்ன, எல்லாம் தெரிந்த உங்களுக்கு நான் சொல்ல என்ன இருக்கிறது?''

இப்படியாக அவர்கள் இருவரும் பெரிய மனிதர்களின் வழக்கத்தையொட்டி, 'மனமறிந்த பொய்'களால் ஒருவரையொருவர் ஏமாற்றிக்கொண்டு விஸ்கியில் சோடாவைக் கலந்து சாப்பிட்டுக்கொண்டிருந்தபோது, கீதா வந்து தயக்கத்துடன் நின்றாள்.

''என்ன?'' என்றார் சுகானந்தம்.

''ஒன்றுமில்லை. மேயருக்குப் பொழுது போகவில்லையாம்; தானும் வரலாமா, உங்களுடன் பொழுது போக்க என்று போனில் கேட்கிறார்!'' என்றாள் அவள், சிரித்துக் கொண்டே.

இதைக் கேட்டதும்,''அவன் ஒருவன்! ஓசிக் குடியென்றால் உயிரையே விட்டுவிடுகிறான்!'' என்றார் சுகானந்தம் எரிச்சலுடன்.

''ஊற்றி வையுங்கள்; அவனாலும் உங்களுக்கு ஏதாவது காரியம் நடக்கலாம்!'' என்றார் ஆபத்சகாயம்.

''சரி, வரச் சொல்!'' என்றார் அவர்; அவள் போய் விட்டாள்.

அடுத்தாற்போல் பொரித்து எடுத்த உரித்த கோழி இரண்டுடனும், அவித்து எடுத்த முட்டை பன்னிரண்டுடனும் சமையற்காரன் உள்ளே நுழைந்தான். ''ஏண்டா கிட்டா, அந்த 'ஆபரேட்'டரைக் கொஞ்சம் இங்கே வரச்சொல்லேன்!'' என்றார் சுகானந்தம் அவனிடம்.

''இதோ வரச் சொல்கிறேன்!'' என்று அவன் நடந்தான்.

கீதா மறுபடியும் வந்து, ''கலெக்டர் வேறு கவனிக்க முடியுமா என்றுப் போனில் கேட்கிறார்; என்ன சொல்ல?'' என்றாள் புன்முறுவலுடன்.

''அவரை அவசியம் கவனிக்க வேண்டியதுதான்; அவரால் நமக்கு எத்தனையோ காரியம் நடக்கிறது-வரச் சொல்!'' என்றார் சுகானந்தம்; அவள் போய்விட்டாள்.

''குடிப்பது தீமை, தீமை என்கிறார்கள்; அதனால் எவ்வளவு பெரிய நண்பர்களெல்லாம் நமக்கு எவ்வளவு சாதாரணமாகக் கிடைக்கிறார்கள்!'' என்றார் ஆபத்சகாயம், உள்ளே சென்ற 'சரக்கின் சிறப்'பால் உயரப் பறக்காமல் பறந்துகொண்டே.

''இல்லாதவனுக்கு எதுதான் தீமையில்லை, எல்லாம் தீமைதான். குடி மட்டும் என்ன, கூழும் அவனுக்குத் தீமைதான் செய்கிறது!''

''நன்றாகச் சொன்னீர்கள்! வேளா வேளைக்கு அது அவனைப் பசியால் துடிக்கவைப்பதோடு, சில சமயம் செய்யத் தகாத காரியங்களையெல்லாம் கூடச் செய்ய வைத்து விடுகிறதே?''

''ஆனால் ஒன்று. அந்தப் பசிதான் நமக்கு வரப்பிரசாதம்; இல்லாவிட்டால் அந்தப் பயல்களின் ரத்தத்தை அவர்களுக்குத் தெரியாமலே உறிஞ்சிக் குடிக்க நம்மைப் போன்றவர்களால் முடியும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?'' என்றார் சுகானந்தம்.

அதில் தனக்கு அப்படியொன்றும் சம்பந்தமில்லை யென்றாலும் சந்தர்ப்ப விசேஷத்தை ஒட்டி, ''ஏது?'' என்று சொல்லிவைத்தார் ஆபத்சகாயம்.

இந்தச் சமயத்தில் 'உச்ச கட்ட'த்தை எட்டிப் பிடித்துக் கொண்டிருந்த அவர்கள் இருவரையும் உசுப்பிவிடுவதற்காக ஒரு கனைப்புக் கனைத்துக் கொண்டே 'ஆபரேட்டர்' உள்ளே நுழைந்தார். ஒருவருக்கு இருவராகத் தெரிந்த அவரைக் கண்டதும், ''வாப்பா வா! நான் பிரான்சிலிருந்து கொண்டு வந்திருந்தேனே, அந்தப் படத்தைக் கொஞ்சம் போடு; ஐயா பார்க்கட்டும்'' என்று சொல்லிவிட்டு, அங்கிருந்த பொத்தானை மறுபடியும் ஓர் அழுத்து அழுத்தினார் சுகானந்தம்.

அவ்வளவுதான்; அந்தக் 'கடைசி மணி'யை எதிர்பார்த்துக் கொண்டிருந்தவள்போல் கீதா உடனே வந்து அவருக்கு எதிர்த்தாற்போல் நின்றாள், அவருடைய 'கடைசி உத்தர'வை எதிர்பார்த்து.

''நீங்களும் எங்களுடன் சேர்ந்து படம் பார்க்க, வேண்டாமா? அழைத்து வா, அருணாவை!'' என்றார் அவர், தன் கண்களில் ஒன்றை வழக்கம் போல் ஓர் அடி அடித்து.

''சரிதான், இன்றையக் 'காதல் விருந்து' அருணா போலிருக்கிறது!'' என்று அனுபவப்பூர்வமாக நினைத்துக் கொண்டே அவள் வெளியே சென்றாள்.

அப்போது 'நகரத் தந்தை'யான மேயரும், 'நகரக் காவல'ரான கலெக்டரும் ஒருவர் பின் ஒருவராக வந்து உள்ளே நுழைய, ''வாருங்கள், வாருங்கள்!'' என்று அவர்களையும் வரவேற்று உட்கார வைத்துவிட்டு, ''ஏ கிட்டா, கவனி!'' என்றார் சுகானந்தம்.

இதைச் சொல்லி அவர் வாய் மூடுவதற்குள், மேலும் இரண்டு 'விஸ்கி புட்டிக'ளையும், அதற்கு வேண்டிய 'பக்க வாத்தியங்'களையும் கொண்டு வந்து வைத்துவிட்டு, அவன் ஒரு பக்கமாகப் போய் நின்றான், அடுத்த உத்தரவை எதிர்பார்த்து.

அதற்குள் அருணாவை அழைத்துக்கொண்டு கீதா உள்ளே வர, சுகானந்தம் 'கை படாத ரோஜா'வைத் தன் பக்கமாக இழுத்துக்கொண்டு, 'கை பட்ட ரோஜா'வை ஆபத்சகாயம் இருந்த பக்கமாகத் தள்ளிவிட்டார்.

''ஐயோ, வேண்டாம். நான் அப்பாவுக்குப் பக்கத்திலேயே உட்கார்ந்து கொள்கிறேன்!'' என்று அலறினாள் அருணா.

அந்த 'மிரண்ட மா'னைக் கண்டதும் கலெக்டர் உள்பட எல்லோரும் 'கலகல'வென்று நகைத்தார்கள்!

இதனால், தான் பெரிதும் அவமானத்துக்கு உள்ளாகி விட்டதாக நினைத்த ஆபத்சகாயம், ''என்னப் பெண்ணம்மா நீ, ஓர் இழவும் தெரியாமல்! வெள்ளைக்காரர்கள் எங்கேயாவது விருந்துக்குப் போனால் என்ன செய்கிறார்கள்? மரியாதைக்காக ஒருவருக்கொருவர் மனைவிமாரை மாற்றிக் கொண்டு உட்காரவில்லையா? அதே மாதிரிதான் இதுவும்! அது கூடத் தெரியவில்லையே, உனக்கு?'' என்றார் அவள் கையைப் பற்றி அவருக்குப் பக்கத்தில் உட்கார வைத்து.

'இது என்னக் கருமம்! ஒருவருக்கொருவர் மனைவிமாரை மாற்றிக்கொள்வது வேண்டுமானால் மரியாதையாயிருக்கட்டும்; அதற்காக இவர் மகளையா மாற்றி உட்கார வைப்பார்?' அதைப் பொருட்படுத்தாமல் சுகானந்தம் அவள் முதுகைத் தடவ, அது பிடிக்காமல் அவள் நெளிய, அந்த 'அபூர்வக் காட்சி'யை மேயரும் கலெக்டரும் கை தட்டி ரசித்தார்கள்.

அதற்குள் விளக்குகள் அணைய, படம் ஆரம்பமாயிற்று- ஆகா! படமா, அது?

ஆம், படம்தான்!-ஆனால் இளம் பெண்ணின் இச்சையைத் தூண்டி, அவர்களைப் பல வழிகளிலும் கெடுப்பதையேத் தங்கள் பொழுது போக்காகக் கொண்டிருக்கும் சுகானந்தத்தைப் போன்றப் பெரிய மனிதர்கள் மட்டுமே பார்க்கக் கூடிய படம் அது!-அதாவது ஆண் பெண் உடல் உறவைப் பற்றியது; அதையும் ஆடையோடு

எடுத்தால் எங்கே புரியாமற் போய்விடுமோ என்று ஆடையில்லாமலே எடுத்திருந்தார்கள்!

அந்த மேல் நாட்டுப் படம் இந்தக் கீழ்நாட்டு ரசிகர்களுக்கு எப்படிக் கிடைத்தது?-அருணாவுக்கு அது புரியவில்லை; அதைப் புரிந்துக் கொள்ள அவள் விரும்பவும் இல்லை-ஏனெனில், இருட்டு அந்தத் தியேட்டரை மட்டுமல்ல; தன் உள்ளத்தையும்-ஏன், இந்த உலகத்தையுமே ஆட்கொண்டிருப்பதாகத் தோன்றிற்று அவளுக்கு. சுற்றுமுற்றும் பார்த்தாள்; அந்த நிலையிலும் அவளுடைய மனக்கண் திறந்திருந்ததால் சுகானந்தம் அதற்குள் தன் நினைவை இழந்துவிட்டிருந்ததை அவள் உணர்ந்தாள். உணர்ந்து, மெல்ல எழுந்தாள்; எழுந்து, வெளியே நடந்தாள்-ஆம், தன் அப்பாவைத் திரும்பிக்கூடப் பார்க்காமல்தான்!

ஏன் பார்க்க வேண்டும், அவரை விட இருளே தனக்கு உற்றத் துணையாயிருக்கும்போது?

## 23. ''அப்புறம் சொல்கிறேன்!''

ஆடி வரும் காற்று தன்னைத் தேடி வந்து, தன் மேலாக்கை இழுத்து விளையாட, மோகனுக்குப் பின்னால் அமர்ந்து, பாமா ஸ்கூட்டரில் சென்றுக் கொண்டிருந்த போது, ''என்ன இருந்தாலும் நீ இவ்வளவு சீக்கிரம் அருணாவைத் தெரிந்துகொண்டிருக்கக் கூடாது!'' என்றான் அவன்.

''தெரிந்துக் கொள்ளாமல் இருந்ததால்தானே அன்று நீங்கள் அவளைக் கண்டதும் ஓட்டம் பிடித்தீர்கள்?'' என்றாள் அவள்.

''உனக்குத் தெரியாது, பாமா! நாலு பேருக்குத் தெரிந்து காதலிப்பதைவிடத் தெரியாமல் காதலிப்பதில்தான் சுவை இருக்கிறது!''

''இருக்கலாம்; ஆனால் உங்களை நான் காதலிப்பதோடு நின்று விடுவதாயில்லையே, கல்யாணமும் அல்லவா செய்து கொள்ள வேண்டுமென்று இருக்கிறேன்!'' என்றாள் அவள், குத்தலாக.

''அதனாலென்ன, இன்னும் கொஞ்ச நாட்கள் பொறுத்திருந்தால் அவளை நானே உனக்கு அறிமுகப்படுத்தி வைத்திருப்பேனே?'' என்றான் அவன்.

''எங்கே அறிமுகப்படுத்தி வைக்கிறீர்கள்? நீங்கள்தான் சந்தர்ப்பம் வாய்க்கும்போதெல்லாம் நழுவிக்கொண்டு இருக்கிறீர்களே?''

''எல்லாம் உன்னுடைய நன்மைக்காகத்தான்!- அதிருக்கட்டும், வழக்கம் போல் இன்றும் உன்னை நான் ரேடியோ நிலையத்துக்கு அருகே இறக்கி விட்டுவிட்டால் போதுமல்லவா?''

''அதுதான் முடியாது; இன்று நீங்கள் எங்களுடைய வீட்டுக்குக் கட்டாயம் வரவேண்டுமாக்கும்?''

''இன்று வேண்டாம் பாமா, இன்னொரு நாளைக்கு வருகிறேன்!'' என்றான் அவன், கெஞ்சாத குறையாக.

''இன்னொரு நாளைக்கு, இன்னொரு நாளைக்கு என்று நீங்கள் இன்னும் எத்தனை நாட்கள்தான் சொல்லிக் கொண்டிருப்பீர்கள்? உங்களால் என் மானம் போகிறது, அங்கே!''

''அப்படியானால் சரி!'' என்றான் அவன், பெருமூச்சுடன்.

அதுதான் சமயமென்று, ''ஆமாம், மணி அண்ணனைப் பற்றி நீங்கள் என்னிடம் சொன்னதெல்லாம் பொய்தானே?'' என்றாள் அவள், அவனுடையத் தோள்களை மெல்லப்பற்றி.

''சொன்னது பொய்தான்; ஆனால் அதைச் சொல்ல வைத்தது நீ!'' என்றான் அவன்.

''நான் என்றால்?''

''உன் அழகு என்று அர்த்தம்!''

இதைக் கேட்டுப் பெருமையால் பூரித்துப் போய்விட வில்லை பாமா; 'அட அசடே!' என்று தன் தலையில் தானே அடித்துக்கொண்டாள்.

அதைக் கவனிக்காத மோகன், ''அதற்காக என்னை நீ வெறுக்கிறாயா, என்ன?'' என்றான், அவள் பக்கம் திரும்பி.

அவள் சிரித்தாள்; சிரித்துவிட்டுச் சொன்னாள்:

''வெறுப்பதாயிருந்தால், இனி நீங்கள்தான் என்னை வெறுக்க வேண்டும்!''

அவன் சொன்னான்; சிரிக்காமலே சொன்னான்:

''அழகில் மட்டுமல்ல; குணத்திலும் சிறந்தவளாயி ருக்கிறாய், நீ!''

இதைக் கேட்டதும் பூரித்துப் போய்விடவில்லை பாமா:

''ஐஸ் வைத்ததெல்லாம் போதும்; அக்கம் பக்கம் பார்த்து வண்டியை ஓட்டுங்கள்!'' என்றாள்.

''ஏன், பயமாயிருக்கிறதா?'' என்று மோகன் கேட்டான்.

அவள் சிரித்தாள்; ''ஏன் சிரிக்கிறாய்?'' என்றான் அவன்.

''ஒன்றுமில்லை; உங்களைப் பார்த்து நான் கேட்க வேண்டியக் கேள்வியை என்னைப் பார்த்து நீங்கள் கேட்கிறீர்களே என்று சிரித்தேன்!'' என்றாள் அவள்.

அன்று மாலை ராதா வழக்கம்போல் விளக்கைப் பொருத்தி வணங்கிவிட்டுத் திரும்புவதற்கும், ஸ்கூட்டர் வந்து வாசலில் நிற்பதற்கும் சரியாயிருந்தது. ''வந்து விட்டாள், சொன்னது சொன்னபடி அவரை அழைத்துக் கொண்டு வந்தே விட்டாள்!'' என்று சொல்லிக்கொண்டே அவள் விரைந்து வந்தபோது, பாமாவுக்குப் பின்னால் வந்துகொண்டிருந்த மோகனைக் கண்டதும் திடுக்கிட்டாள்!

அட, கடவுளே! கடைசியில் இப்படியா வழி காட்டியிருக்கிறாய், என் தங்கைக்கு? இப்போது நான் என்ன செய்வேன், எப்படி இவரைப் பார்க்காமல் இருப்பேன்? எனக்கு இவரைத் தெரியும்; இவருக்கும் என்னைத் தெரியும். இதனால் ஒருவேளை இந்தக் கல்யாணம் நின்றுவிட்டால்?

இப்படி நினைத்தாளோ இல்லையோ, சட்டென்று பின் வாங்கி மீனாட்சி அம்மாளின் அறைக்குள் நுழைந்து, ''அம்மா, அவள் அவரை அழைத்துக்கொண்டு வந்து விட்டாள், அம்மா! ஆனால் ஒரு சங்கடம்; நான் ஒருத்தி இருப்பது அவருக்குத் தெரியக்கூடாது!'' என்றாள் அவள் படபடப்புடன்.

''ஏன் தெரியக்கூடாதாம்?'' என்றாள் மீனாட்சியம்மாள், ஒன்றும் புரியாமல்.

''அதெல்லாம் அப்புறம் சொல்கிறேன், இப்போது நீங்கள் போய் அவர்களைக் கொஞ்சம் கவனியுங்களேன்?'' என்று அந்த அம்மாளை எழுப்பி அனுப்பிவிட்டுத் தன் தலையை மறைத்துக்கொண்டு விட்டாள் அவள்!

''வாருங்கள், வாருங்கள்!'' என்று சொல்லிக்கொண்டே வெளியே வந்த மீனாட்சியம்மாளைக் கண்டதும், ''கல்யாணத்துக்கு முன்னால் என்னை நீங்கள் இவ்வளவு துணிவுடன் வரவேற்பீர்களென்று நான் கொஞ்சம் கூட எதிர்பார்க்கவில்லை!'' என்றான் மோகன், என்றுமில்லாத தைரியத்தை எங்கிருந்தோ வரவழைத்துக்கொண்டு.

''உட்காருங்கள்! இந்தக் காலத்து ஆண்பிள்ளைகளுக்குத் தான் துணிவில்லையே, பெண் பிள்ளைகளுக்காவது அது இருக்க வேண்டாமா?'' என்றாள் மீனாட்சியம்மாள், தானும் உட்கார்ந்து.

''அப்படியா சமாச்சாரம்? இப்போதுதான் எனக்குத் தெரிகிறது, பாமா யாரால் இவ்வளவு தூரம் துணிந்திருக் கிறாள் என்று!''

''பாமா என்னால் துணிந்திருக்கிறாள் என்றால், நீங்கள் பாமாவால் துணிந்திருக்கிறீர்கள்! இல்லாவிட்டால் ஒரு பெண் அழைத்தாள் என்பதற்காக நீங்கள் அவளுக்குப் பின்னால் இவ்வளவு தூரம் வந்திருப்பீர்களா?''

''அதைச் சொல்லுங்கள் முதலில்; இப்போதும் அவர் எனக்குப் பின்னால்தான் வந்தாரே தவிர முன்னால் வரவில்லைப் பாருங்கள்!'' என்றாள் பாமா.

எல்லோரும் சிரித்தார்கள்; அந்தச் சிரிப்பொலி காதில் விழுந்ததும், கொல்லைப் புறத்திலிருந்த ராதாவும் சிரித்தாள். ஆனால், ஏன் சிரித்தாள் என்று அவளுக்குத் தெரியாது; அதைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற விருப்பமும் அவளுக்கு அப்போது எழவில்லை-தங்கை சிரித்தாள்; தானும் சிரித்தாள்!-அந்த மகிழ்ச்சியே போதாதா, அவளுக்கு?

ஆனால்...

அன்று என்னென்னவோ செய்து வைத்திருந்தேன்; அப்போது இந்தப் பிள்ளையாண்டான் வந்திருக்கக் கூடாதா? ஒன்றுமில்லாத இப்போது வந்து...

தனக்குத்தான் தோன்றும் இப்படியெல்லாம்; அவர்களுக்கு அப்படியொன்றும் தோன்றாது இப்போது. அவள் இருக்குமிடத்தில் அவருக்கு எல்லாம் இருப்பதாகத் தோன்றும்; அவர் இருக்குமிடத்தில் அவளுக்கும் எல்லாம் இருப்பதாகத் தோன்றும். இது இயற்கை!...

ஆனால் ஒரு குறை! தான் மட்டும் இல்லாமலிருந்தால் இந்தக் கல்யாணம் நிச்சயம் நடந்துவிடும்; இருப்பதால்தான் கொஞ்சம் சந்தேகமாயிருக்கிறது. அதற்குத் தன்னால் ஒன்றும் செய்ய முடியாதா? என்ன செய்ய முடியும், செத்துப் போவதைத் தவிர?

சீச்சீ, முதல் தடவையாக அந்தப் பிள்ளையாண்டான் இங்கே வந்திருக்கும் இந்த நேரத்தில் இப்படியா நினைப்பது?-மோசம், ரொம்ப மோசம்!...

ஆமாம், ஐயாவை இன்னம் காணோமே? அவரும் வந்து இந்தப் பிள்ளையாண்டானைப் பார்த்துவிட்டால் நல்லது; அதற்குப் பிறகு பேச வேண்டியதைப் பேசி...

என்ன அவசரம், தனக்கு? கல்யாணம் என்றால் அவ்வளவு சீக்கிரம் முடிந்துவிடுமா, என்ன?-'ஆயிரம் காலத்துப் பயிர்' என்று சொல்லி, குறைந்த பட்சம் 'ஆறு மாத கால'த்துக்காவது இழுத்துப் பறித்துக்கொண்டு நிற்கமாட்டார்களா?...

நிற்கட்டும், நிற்கட்டும்-கடைசியில் எல்லாம் நல்லபடியாக நடந்தால் சரி!

இந்தத் தீர்மானத்துக்கு ராதா வந்தபோது, ''அக்கா, அக்கா!'' என்று அவளை அழைத்துக்கொண்டே அங்கு வந்தாள் பாமா.

''ஸ், கத்தாதே! நான் இருப்பது அவருக்குத் தெரியக் கூடாது!'' என்றாள் ராதா, தன் வாயைத் தானே பொத்திக் காட்டி.

''ஏனாம்?'' என்று கேட்டாள் பாமா.

''அதெல்லாம் அப்புறம் சொல்கிறேன்; இப்போது நீ போ, அங்கே!'' என்றாள் அவள்.

''வெறும் காபி கூட இல்லாமல் என்னை அங்கே போகச் சொல்கிறாய், நீ?'' என்றாள் இவள்.

''அதை மறந்துவிட்டேனே நான்! நீ இங்கேயே இரு; இதோ கலந்து எடுத்துக்கொண்டு வருகிறேன்!'' என்று ராதா ஓடினாள்.

''நானும் வருகிறேனே!'' என்று பாமா அவளைத் தொடர்ந்தாள்.

மோகனைப் பற்றிய விவரங்கள் அனைத்தையும் கேட்டுத் தெரிந்துக் கொண்டப் பிறகு, ''அடுத்த முறை வரும் போது உங்கள் அப்பாவையும் அம்மாவையும் இங்கே அழைத்துக் கொண்டு வர முடியுமா?'' என்றாள் மீனாட்சியம்மாள்.

''அவ்வளவு சீக்கிரம் அது முடியுமென்று எனக்குத் தோன்றவில்லை!'' என்றான் மோகன்.

அப்போது, ''உங்களால் முடியாவிட்டால் சொல்லுங்கள், நானே வந்து அவர்களை அழைத்துக் கொண்டு வருகிறேன்!'' என்று யாரோ சொல்வது அவர்கள் காதில் விழுந்தது; இருவரும் திரும்பிப் பார்த்தனர்-சொக்கலிங்கனார் காரைத் கொண்டு போய் 'ஷெட்'க்குள் நிறுத்திவிட்டு உள்ளே வந்துக் கொண்டிருந்தார்.

''அதற்குள் நீங்கள் எப்படித் தெரிந்துகொண்டீர்கள், இவரை?'' என்றாள் வியப்புடன்.

''அசடு வழிவதிலிருந்தே தெரியவில்லையா, அது?'' என்றார் அவர் சிரித்துக்கொண்டே.

''அப்படியெல்லாம் சொல்லாதீர்கள்; அவர் கோபித்துக் கொண்டுவிடப் போகிறார்!'' என்றாள் அவள்.

அப்போது கையில் காபித் தட்டுடன் பாமா அங்கே வர, ''கோபித்துக்கொண்டால் பாமாதான் இருக்கிறாளே, சமாதானம் செய்ய!'' என்றார் சொக்கலிங்கனார்.

''இப்படியெல்லாம் சொல்லிக்கொண்டிருந்தால் இன் னொரு முறை நான் இங்கே வரமாட்டேன்!'' என்றாள் பாமா வெட்கத்துடன்.

''ஏன், கதவுக்குப் பின்னால் நின்று நாங்கள் பேசுவதையெல்லாம் ஒட்டுக் கேட்டுக்கொண்டிருக்கலா மென்று நினைக்கிறாயா?'' என்றார் அவர், அப்போதும் அவளை விடாமல்.

''இதற்கெல்லாம் அவசியம் ஏது, இந்தக் கல்யாணத் தில்? நீயும் இப்படி உட்கார், பாமா!'' என்று தனக்குப் பக்கத்தில் அவளை உட்கார வைத்துக்கொண்டாள் மீனாட்சியம்மாள்.

எல்லோரும் காபி சாப்பிட்டு முடிந்த பிறகு, ''பாமாவின் அக்காவை நான் இன்னும் பார்க்கவே யில்லையே?'' என்றான் மோகன்.

''அவளுக்கு உங்களைப் பார்க்க வெட்கமாயிருக்கிறதாம்; அதனால் ஒளிந்துகொண்டிருக்கிறாள்!'' என்றாள் மீனாட்சியம்மாள் சிரித்துக் கொண்டே.

''சரி, இருக்கட்டும்; நான் வருகிறேன்!'' என்று மோகன் எழுந்தான்.

அவனுக்குத் தன் கண்ணால் விடை கொடுத்து அனுப்பினாள் பாமா!

# 24. ஆசை அலைகள்

மீனாட்சியம்மாளையும் சொக்கலிங்கனாரையும் முதல் தடவையாகப் பார்த்துவிட்டுத் திரும்பிக்கொண்டிருந்த மோகனின் உள்ளத்தில் ஒரு புது நம்பிக்கை பிறந்தது. ஆம், அவனுடைய பழைய நம்பிக்கை சற்றே கலகலத்திருந்த சமயம் அது!

அதாவது, என்று தன் கனவிலே வந்தக் கன்னி கேவலம் ஒரு சமையற்காரியின் தங்கை என்று அவனுக்குத் தெரிந்ததோ, அன்றே அவனுடைய நம்பிக்கை ஆட்டம் கண்டுவிட்டது. ஆனால், அதை அவன் பாமாவிடம் சொல்லவில்லை; சொல்லி, அவள் காதலையும் கனவாக்கிவிட அவன் விரும்பவில்லை.

இந்த உலகத்தில் எல்லாவற்றையும் கடந்து நிற்கும் ஏதாவது ஒன்று உண்டு என்றால், அது காதல்தான் என்பதை அவன் அறிந்தே இருந்தான். ஆயினும், எதைக் கடந்து நின்றாலும் தன் அப்பாவைக் கடந்து நிற்க முடியுமா, தன்னால்?-அதுதான் சந்தேகமாயிருந்தது அவனுக்கு.

இத்தனைக்கும் அன்றிருந்த கோழையல்ல அவன் இப்போது-வீரன்; பாமாவின் பண்பட்ட காதலால் நெஞ்சில் உரமும், நேர்மையில் திறனும் பெற்றுவிட்ட வீரன்! அந்த வீரத்தையும் மிஞ்சி நின்றது, கடமை என்ற ஒரு கட்டுப்பாடு.

அந்தக் கடமைக்கும் கட்டுப்பாட்டுக்கும் தன் தாயார் உரியவள்தான் என்பதில் அவனுக்குச் சந்தேகமில்லை; ஆனால், தந்தை உரியவர்தானா?-அதுவும் சந்தேகமாய்த்தான் இருந்தது அவனுக்கு.

காரணம், மேல் வர்க்கத்தாரைப் போல் வாழ நினைத்து மானத்தையும் மரியாதையையும் கூடப் பணயமாக வைத்து விடுவதில்லையா, மத்தியதர வர்க்கத்தைச் சேர்ந்த சிலர். அவர்களில் ஒருவராக அவரும் இருந்ததுதான்!

அதனாலேயே பதவியில் இருந்தபோதுக் கூட அவர் நாணயமாக வாழவில்லை. நாணயமாக வாழவில்லையென்றால், அவருக்கு இருந்த ஆசைகள் அவரை நாணயமாக வாழ விடவில்லை!-இல்லாவிட்டால் அவர்கள் சொந்தப் பங்களாவில் வாசம் செய்கிறார்கள் என்பதற்காக இவரும் வாடகைப் பங்களாவில் வாசம் செய்து, நூறும் இருநூறுமாக வாடகை கொட்டிக் கொடுத்திருக்க மாட்டார்; அவர்கள் சொந்தக் காரில் போகிறார்கள் என்பதற்காக இவரும் வாடகைக் காரிலாவது சவாரி செய்ய வேண்டுமென்று நினைத்து, போக்குவரத்துச் செலவைக் கூட்டிக்கொண்டிருக்க மாட்டார்; அவர்கள் எடுத்ததற்கெல்லாம் வேலைக்காரர்கள் வைத்துக் கொள்கிறார்கள் என்பதற்காக, இவரும் எடுத்ததற்கெல்லாம் வேலைக்காரர்களை வைத்துக்கொண்டு, சம்பளத்தோடு சாப்பாடும் போட்டுக்கொண்டு இருந்திருக்க மாட்டார்; அவர்கள் அடிக்கடி உடை மாற்றிக் கொள்கிறார்கள் என்பதற்காக, இவரும் அடிக்கடி உடை மாற்றி அனாவசியமாகச் சலவைச் செலவை அதிகப்படுத்திக் கொண்டிருந்திருக்க மாட்டார்; அவர்கள் வைர மோதிரம் அணிகிறார்கள் என்பதற்காக இவரும் கடன் வாங்கியாவது வைர மோதிரம் அணிந்திருக்க மாட்டார்; அவர்கள் தங்களுடைய குழந்தைகளைக் 'கான்வெண்ட்'டில் படிக்க வைக்கிறார்கள் என்பதற்காக, இவரும் தன் குழந்தைகளைக் 'கான்வெண்ட்'டில் படிக்க வைத்து, அவர்களுக்கென்று மாதச் சம்பளத்தில் ஓர் ரிக்ஷாக்காரனையும் அமர்த்தியிருக்க

மாட்டார்; அவர்கள் 'அல்சேஷன்' நாய் வளர்க்கிறார்கள் என்பதற்காக இவரும் ஓர் 'அல்சேஷன்' நாயை வளர்த்து, அதற்கென்று ஒரு குடும்பத்தையே உருவாக்கியிருக்க மாட்டார்!-இப்படியாக அவர் எல்லா வகையிலும் மேல் வர்க்கத்தாரைப் பின் பற்றப் போய், அதனால் வரவுக்கு மேல் செலவு செய்து, அந்தச் செலவைச் சரிக்கட்டுவதற்காக ஒரு கையால் லஞ்சம் வாங்கினால் போதாதென்று இரு கைகளாலும் லஞ்சம் வாங்கி, அந்த லஞ்சம் வாங்க முடியாத நிலைக்கு வந்ததும், முன்னாள் திருடர்களுக்கெல்லாம் முன்னோடியாயிருந்து உதவி, அந்த உதவியால் தான் பெற்ற பயனைக் கொண்டே தனக்கென்று ஒரு தனி வீடு வேண்டும் என்ற தன் முதல் லட்சியத்தை முதலில் அடைந்தவர் அவர்!

அத்தகையவரைப் பற்றி அம்மாவுக்குத் தெரியாமல் இருக்க முடியுமா?-தெரியத்தான் தெரிந்தது. எனினும் அவரை அவளால் ஒன்றும் செய்யமுடியவில்லை, 'கடவுளே, என் கணவருக்கு நல்ல புத்தியைக் கொடு!' என்று அவ்வப்போதுக் கடவுளை வேண்டிக்கொள்வதைத் தவிர!

அப்படியும் ஒரு முறை அவள் இதற்காக அவருடன் பிணங்கிப் பார்த்தாளாம்; அதற்கு அவர் இணங்கிப் போகாமல் அவள் சம்மதம் இல்லாமலேயே அவளை அவளுடைய பிறந்தகத்துக்கு அனுப்பி வைத்துவிட்டாராம். அதன் பலனை அக்கம் பக்கத்தாரால் வேண்டிய மட்டும் அனுபவித்த பிறகு, அவருடைய சம்மதம் இல்லாமலேயே அவள் திரும்பி வந்து அவருடன் சேர்ந்துகொண்டு விட்டாளாம்!

இந்த அழகான வாழ்க்கையில் தன்னையும் தன் தங்கையையும் எப்படியோ பெற்று வளர்த்துவிட்ட அவளைத் தன் வழிக்குக் கொண்டு வருவதில் அவ்வளவு சிரமம் இருப்பதாகத் தோன்றவில்லை அவனுக்கு. மிஞ்சிப்போனால், 'இதோ, நான் போய் தண்டவாளத்தின் மேல் தலை வைத்துப் படுத்துவிடுகிறேன்!' என்று ஒரு

மிரட்டு மிரட்டினால் போதும்; 'ஐயோ, வேண்டாண்டா! நீ அந்தப் பாமாவையே கல்யாணம் செய்துக்கொள்!' என்று அவள் சொல்லிவிடுவாள்!-ஆனால் அப்பா?-'இருட்டில் தண்டவாளம் தெரியாமல் போய்விடப் போகிறது,எதற்கும் டார்ச் லைட்டை எடுத்துக் கொண்டு போ' என்றல்லவா சொல்வார்?-அதை நினைக்கத்தான் என்னவோ போலிருந்தது அவனுக்கு.

ஆனால், அதற்காகத் தன் தந்தையை ஒரேயடியாக எதிர்த்து நிற்கவும் அவன் தயாராயில்லை. ஏனெனில், அவருடைய தவறான நடத்தைக்குக் காரணம் அவர் மட்டு மல்ல; அவரைத் தன் அங்கமாகக் கொண்ட சமூக அமைப்பும் அதற்கு ஓரளவுக் காரணம் என்பதை அவன் அறிந்திருந்தான்.

அவரைப் பொறுத்தவரை அவர் பாமாவை விரும்பி னாலும் விரும்புவாரேத் தவிர, 'அவளுடைய அக்காவை ஒருநாளும் விரும்ப மாட்டார். அப்படி ஒருத்தி இருக்கிறாள் என்று அவருக்குத் தெரிந்தாலே போதும், 'போச்சு, போச்சு! என் மானம் போச்சு, மரியாதை போச்சு!' என்று குதியாய்க் குதிக்க ஆரம்பித்துவிடுவார். உண்மையான மானம், உண்மையான மரியாதை எங்கே இருக்கிறது, எதில் இருக்கிறது என்பதை அறியாமல்; அறிந்தும் அதைப் பொருட்படுத்தாமல்!

வெளிச்சமென்றால் அது உள்ளேயும் இருக்க வேண்டும் வெளியேயும் இருக்க வேண்டும். அப்பாவைப் போன்றவர்கள் என்னடாவென்றால் உள்ளே இருள் படர்ந்தாலும் பரவாயில்லை, வெளியே வெளிச்சம் இருக்கட்டும் என்றல்லவா சொல்கிறார்கள்?

அதற்கேற்றாற்போல், 'ஆசையை அடக்கு, ஆசையை அடக்கு!' என்று அல்லும் பகலும் அனுவரதமும் மக்களுக்கு உபதேசம் செய்துகொண்டிருக்கிறார்களே, அந்த மகான்களுக்குக் கூட ஆசை வேண்டியிருக்கிறது, வெளிச்சம்

போட; பல்லக்கு வேண்டியிருக்கிறது, வெளிச்சம் போட; பரிவாரமும் வேண்டியிருக்கிறது, வெளிச்சம் போட!

அவர்கள்தான் என்ன செய்வார்கள், பாவம்!-அத்தனை வெளிச்சத்தோடு வந்து சொன்னால்தான், அவர்கள் சொல்வதை மக்கள் கடைப் பிடிக்காவிட்டாலும், காது கொடுத்தாவது கேட்கிறோம் என்கிறார்கள்!

இதிலிருந்து என்னத் தெரிகிறது?-'உள்ளே இருட்டாயிருந்தாலும் பரவாயில்லை; வெளியே வெளிச்சம் போடுங்கள்' வெளிச்சம் போட்டு எங்களை மயக்குங்கள்; அதற்காகும் செலவை நாங்கள் கன்னத்தில் போட்டுக் கொண்டு வேண்டுமானாலும் கொடுக்கிறோம்!' என்று மக்களே சொல்லாமல் சொல்கிறார்கள் என்றுத் தெரியவில்லையா? -அந்த வெளிச்சத்தைத்தான் அப்பாவும் விரும்புகிறார்; அந்த வெளிச்சத்தைக் கொண்டுதான், அவரும் தனக்கு அக்கம்பக்கத்தில் உள்ளவர்களை மயக்குகிறார்!

இந்த நிலையில் தன்னுடைய காதல் நிறைவேற வேண்டுமானால், பாமா தனக்காக ஒரு பொய், ஒரே ஒரு பொய் அவசியம் சொல்லத்தான் வேண்டும்-அதாவது, தனக்கு அக்கா என்று ஒருத்தி இல்லவே இல்லை என்று அவள் அடித்துச் சொல்லிவிட வேண்டும்; அத்துடன், மீனாட்சியம்மாளும், சொக்கலிங்கனாரும்தான் தன்னுடைய தாயும், தந்தையும் என்று அவள் சாதித்துவிடவேண்டும். நல்ல வேளையாக, அவர்களும் அதை ஒப்புக்கொள்ளக் கூடியவர்களாகவே இருக்கிறார்கள். அப்புறம் என்ன, அப்பா எதிர்பார்க்கும் பங்களா, கார், பட்டம், பதவி எல்லாம் மானம் மரியாதையை இழக்காமலே கிடைத்துவிடுகிறது அவருக்கு; பாமாவும் கிடைத்து விடுகிறாள் தனக்கு!

ஆனால், அக்கா என்ற பாசத்தை விட்டு அந்தப் பொய்யை அவள் சொல்வாளா? அல்லது, அந்தப் பாசத்துக்காகக் காதல் என்ற நேசத்தையே அவள் கை கழுவிவிடுவாளா?-அதுதான் புரியவில்லை அவனுக்கு.

ஆயினும் ஒரு நம்பிக்கை. அவள் தனக்காக அந்தப் பொய்யை அவசியம் சொல்வாள் என்ற ஒரு புது நம்பிக்கையுடன் அன்றிரவு அவன் தன் வீட்டை அடைந்தபோது, மணி ஒன்பதுக்குமேல் இருக்கும். ''என்னதான் விடுமுறை விட்டாலும் இப்படியா? நேரத்தோடு வீட்டுக்கு வர வேண்டாமா?'' என்றாள் வாசலில் நின்றுகொண்டிருந்த அவன் தாயார்.

''மணி ஒன்பதுதானேம்மா, ஆகிறது?'' என்றான் அவன், ஸ்கூட்டரைக் கொண்டுபோய் உள்ளே நிறுத்தி.

''வீட்டில் இருந்தால் ஏழு மணிக்கே பசிக்க ஆரம்பித்து விடும் உனக்கு; வெளியே போனால் ஒன்பது மணிக்குக் கூடப் பசிக்கவில்லை போலிருக்கிறது!'' என்றாள் அவள், தெருக் கதவை சாத்தித் தாளிட்டுவிட்டு.

''கொள்ளைப் பசி; கொண்டு வா, சோற்றை!'' என்று சொல்லிக்கொண்டே அவன் குழாயடியை நோக்கி நடக்க, 'அப்பாவும் மகளும் இன்னும் எப்போதுதான் வருவார்களோ?' என்று தனக்குள் அலுத்துக்கொண்டே அடுக்களையை நோக்கி நடந்தாள் அவள்.

சாப்பிடும்போதே நித்திராதேவியின் வசப்பட்டு விட்ட மோகன், சாப்பிட்டு முடிந்ததும் தன் அறைக்குச் சென்றான், படுக்க. அப்போது அருணாவைப் பற்றிய நினைவு ஏனோ வந்தது அவனுக்கு. 'அதற்குள் தூங்கிவிட்டாளா, என்ன?' என்று எண்ணிக்கொண்டே அவளுடைய அறையை எட்டிப் பார்த்தான்; காலியாயிருந்தது. ''அருணா இன்னும் வர வில்லையா, அம்மா?'' என்றான் அவன் போகிற போக்கில்.

''இல்லையேடா!'' என்றாள் அவள்.

'இல்லையாவது, ஆறு மணிக்கே வீட்டுக்கு வருவதாகச் சொல்லிவிட்டு வந்தாளே?' என்று சொல்வதற்காக வாய் எடுத்தான் அவன்; அதற்குள் அவளைத் தான் சினிமாவில் பார்த்தது அம்மாவுக்குத் தெரியக்கூடாது என்றுத் தோன்றவே, ''பஸ் இன்னும் வந்து சேரவில்லைப் போலிருக்கிறது!''

என்றான் அவன், தனக்குள் மட்டும் 'இந்நேரத்தில் அவள் எங்கே போயிருப்பாள்?' என்று யோசித்துக் கொண்டே.

அப்போது தெருக்கதவை யாரோ தடதடவென்று தட்டும் சத்தம் கேட்கவே, ''அதோ வந்துவிட்டாள் போல் இருக்கிறது!'' என்றான் அவன், தன் தாயாரிடம்.

''அவளோ, அவள் அப்பாவோ?'' என்று சொல்லிக் கொண்டே சென்று திறந்தாள், அவன் தாயார்.

# 25. 'மழியாதை தெழியாத கழுதை!''

வந்தது ஆபத்சகாயமல்ல; அருணாதான்!-வாசலில் முன்னும் பின்னும் பார்த்துக்கொண்டே பீதி நிறைந்த கண்களுடன் நின்ற அவளைக் கண்டதும், ''என்னம்மா, என்ன?'' என்று திடுக்கிட்டுக் கேட்டாள், அன்னபூரணி.

''ஒன்றுமில்லை, அம்மா! என் உடம்பு என்னவோ போல் இருக்கிறது; நான் போய்ப் படுத்துக் கொள்கிறேன்!'' என்று சொல்லிக்கொண்டே, அவள் தன் அறைக்குள் சென்று உடனே படுத்துக்கொண்டும் விட்டாள்!

''ஒரு வாய் சாப்பிட்டுவிட்டு படுத்துக்கொள்ளேண்டி!'' என்றாள் அவள் தாயார், அவளைத் தொடர்ந்து.

''எனக்கு ஒன்றும் வேண்டாம்; பசிக்கவில்லை!'' என்றாள் அவள்.

தன் பங்குக்குத் தானும் ஏதாவது சொல்லி வைக்க வேண்டுமே என்பதற்காக, ''அவளை ஏன் அம்மா, அனாவசியமாகத் தொந்தரவு செய்கிறாய்? அவ்வளவு தூரம் வெய்யிலில் போய் அலைந்துவிட்டு வந்திருக்கிறாளே, உடம்பு எப்படி இருக்கிறதோ, என்னமோ!'' என்றான் மோகன், தன் படுக்கையை விரித்துப் படுத்துக்கொண்டே.

''அப்படி என்ன உல்லாசப் பிரயாணம் வேண்டி யிருக்கிறதாம், இப்படி உடம்பைக் கெடுத்துக்கொண்டு!'' என்று சொல்லிக்கொண்டே அன்னபூரணியம்மாள் வெளியே வந்தாள்.

அப்போது அருணா விம்மும் சத்தம் கேட்கவே, ''என்னம்மா, ஏன் அழுகிறாய்?'' என்று பதறிக்கொண்டே திரும்பினாள் அவள்.

அவ்வளவுதான்; அவளுடைய விம்மல் வெடித்து அழுகை பீறிட்டுக்கொண்டு வந்துவிட்டது. அதை அடக்க முடியாமல் அடக்கிக் கொண்டே, ''ஏன் அழுகிறேன் என்றா கேட்கிறாய்? போயும் போயும் இந்த வீட்டில் வந்து நான் பெண்ணாய்ப் பிறந்தேனே, அதற்காகத்தான் அம்மா அழுகிறேன்!'' என்றாள் அவள்.

''ஏன், என்ன நடந்தது?''

''அதை நினைக்க மனம் கூசுகிறது; சொல்ல வாய் கூசுகிறது!''

''பரவாயில்லை, சொல்? வேறு யாரிடம் சொல்லப் போகிறாய், உன் அம்மாவிடம்தானே சொல்லப்போகிறாய்?''

''அதைச் சொல்வதற்கு முன்னால் உன்னை நான் ஒன்று கேட்கலாமா, அம்மா? கேட்டால் கோபித்துக்கொள்ள மாட்டாயே?''

''நான் ஒன்றும் கோபித்துக்கொள்ள மாட்டேன்; சும்மாக் கேள்?''

''அப்பாவை உனக்குப் பிடிக்கிறதா, அம்மா?''

''இது என்ன கேள்வி,பிடிக்காமலா உன்னையும் உன் அண்ணனையும் பெற்று வளர்த்திருக்கிறேன்?''

''போம்மா, இன்னும் நீ எனக்கு ஒன்றும் தெரியாது என்று நினைத்துக்கொண்டிருக்கிறாயா? பிள்ளைப் பெற்று வளர்ப்பதாலேயே ஒரு கணவன் தன் மனைவிக்குப் பிடித்தவனாகிவிட மாட்டான், அம்மா!''

''நல்லப் பெண்தான், போ! நீங்கள் இருக்கும்போது அவர் எனக்குப் பிடித்தால் என்ன, பிடிக்காவிட்டால் என்ன?''

''இதிலிருந்தே தெரிகிறதே, உன்னை நீயே ஏமாற்றிக் கொண்டுதான் இத்தனை நாட்களாக நீ இங்கே வாழ்ந்து கொண்டிருக்கிறாய் என்று!''

''அதற்கு என்ன, இப்போது?''

''ஒன்றுமில்லை; உனக்கு அப்பா எப்படியோ, அது எனக்குத் தெரியாது. என்னைப் பொறுத்தவரை அவர் எனக்குக் கொஞ்சம் கூடப் பிடிக்கவில்லை!''

''இப்படி ஒரு பெண் சொல்ல இன்றுதான் கேட்கிறேன், நான்!''

''இப்படி ஒரு அப்பா இருக்க இன்றுதான் பார்க்கிறேன். நான்!''

''நல்ல வேடிக்கைதான், போ! அவர் அப்படி என்ன செய்தார் உன்னை?''

''அந்த வெட்கக்கேட்டை ஏன் கேட்கிறாய்? அவர் ஒரு கிழட்டுப் பயலை என்னுடன் விளையாட விட்டு வேடிக்கைப் பார்க்கிறார், அம்மா!''

''அந்தக் கிழட்டுக் குரங்கு கொஞ்சம் பசையுள்ள குரங்காயிருந்திருக்கும்!''

''ஆமாம் அம்மா, அது கொஞ்சம் பசையுள்ளக் குரங்குதான்!''

''இப்போது அவர் அங்கேதான் இருக்கிறாரா?''

''ஆமாம்; அந்தக் கிழட்டுக் குரங்குடன் அங்கிருக்கும் சினிமாத் தியேட்டரில் உட்கார்ந்துக் கொண்டு 'ஞானஸ்நானம்' செய்துக் கொண்டிருக்கிறார்!''

அவ்வளவுதான்; ''அடப் பாவி, மறுபடியும் ஆரம்பித்து விட்டாயா, அதை?'' என்று தன்னை மறந்துக் கத்திவிட்டாள் அன்னபூரணி.

''சரிதான், இதற்கு முன்னாலேயே அந்தப் பழக்கமும் உண்டா, அவருக்கு?'' என்றாள் அருணா.

அப்போது வாசலில் கார் வந்து நிற்கும் சத்தம் கேட்கவே, ''அதோ, அவரும் வந்துவிட்டார்!'' என்று சொல்லிக்கொண்டே, அன்னபூரணி வெளியே வந்தாள்.

ஆனால், வந்தது அவள் எதிர்பார்த்த வாடகைக் கார் அல்ல! சொந்தக் கார், அந்தக் காருக்கு உரியவர் போல் தோன்றிய ஒருவர் உள்ளே உட்கார்ந்தபடியே அதன் கதவைத் திறந்துவிட, ஆபத்சகாயம் தட்டுத் தடுமாறிக் கீழே இறங்கி, ''குழ்ட் நைழ்ட்!'' என்றுக் குழறினார்; பதிலுக்கு அவரும் குழறினார், ''குழ்ட் நைழ்ட்!'' என்று!

''வரட்டுமா?'' என்றார் இவர்; ''வாருங்கள், நான் சொன்னதெல்லாம் ஞாபகமிருக்கட்டும்!'' என்றார் அவர்.

''நீங்கள் ஒன்று; உங்களுடன் சம்பந்தம் செய்துக் கொள்ள நான் கொடுத்து வைத்திருக்க வேண்டாமா?'' என்றார் இவர்; ''நீர் கொடுத்து வைத்திருந்தால் போதுமா, ஐயா? உம்முடைய மகள் கொடுத்து வைத்திருக்க வேண்டுமே!'' என்றார் அவர்.

''அந்தக் கவலை உங்களுக்கு வேண்டாம்; நான் கவனித்துக் கொள்கிறேன், அவளை!'' என்றார் இவர்;

''அது தெரியாதா, எனக்கு? அந்தக் காலத்தில் நீர் எத்தனை குற்றவாளிகளை நிரபராதிகளாக்கியிருக்கிறீர்; எத்தனை நிரபராதிகளைக் குற்றவாளிகளாக்கியிருக்கிறீர்! அப்படிப்பட்ட உமக்கு நான் சொல்ல என்ன இருக்கிறது?'' என்றார் அவர்.

''ஏதோ உங்களைப் போன்ற பெரிய மனிதர்களுக்காக என்னால் முடிந்ததைச் செய்தேன்; அவ்வளவுதானே?'' என்றார் இவர், தன்னடக்கத்துடன்; ''உம்மைப் போன்றவர்கள் விருப்பம்போல் வாழமுடியாதே, இந்த உலகத்தில்!'' என்றார் அவர், நன்றியுணர்ச்சியுடன்.

''ஹைட்டோ!'' என்றார் இவர், அதற்கு மேல் அங்கே நிற்க முடியாமல்; அதைப் புரிந்துகொண்டு, ''ஹைட்டோ!'' என்றார் அவரும், காரைக் கிளப்பிக்கொண்டே.

அதற்குள் என்ன நினைத்தாரோ என்னமோ, ''ஓய், ஓய்! எதை முக்கியமாகக் கேட்க வேண்டுமோ, அதை மறந்து விட்டேனே, நான்? உம்முடைய மகள் வீட்டுக்கு வந்து விட்டாளா என்றுக் கேளும்!'' என்றார் அவர், கிளப்பியக் காரை நிறுத்தி.

''வராமல் எங்கே போயிருக்கப் போகிறாள்? நீங்கள் போய் வாருங்கள்!'' என்றார் இவர்.

''நீர் கேட்டுத்தான் பாருமே?'' என்றார் அவர்.

''எழ்ன கவலை. எழ்ன கவலை! எனக்கில்லாத கவலையல்லவா உங்களுக்கு இழுக்கிறது?'' என்று குழறி வழிந்து கொண்டே இவர் திரும்பி, ''அழ்னபூழ்ணி, அழ்னபூழ்ணி!'' என்றார், உள்ளே தலையை நீட்டி.

''என்னவாம், அழ்னபூழ்ணிக்கு?'' என்றாள் அவள் எரிச்சலுடன்.

''அழுணா வழ்ந்துட்டாளா?''

''எழ்ல்லாம் வழ்ந்துட்டாள்!''

''வழ்ந்துட்டாளா, கொழ்ஞ்சங்கூட மழியாதை தெழியாத கழுதை!'' என்று சொல்லிக்கொண்டே, இவர் மறுபடியும் திரும்பி, ''வழ்ந்துட்டாளாம், வழ்ந்துட்டாளாம்!'' என்றார் ஒரு முறைக்கு இரு முறையாக.

''ரொழ்ம்ப சழ்ந்தோழம்; டாழ்டா!'' என்று அவரும் குழறி வழிந்துகொண்டே கையை ஆட்டிவிட்டுச் செல்ல, ''டாழ்டா!'' என்று இவரும் கையை ஆட்டிவிட்டு உள்ளே வந்தார்.

''யார் அந்தப் புண்ணியாத்மா? அவர்தான் உங்களுக்கு இந்த 'ஞானஸ்நான'த்தைச் செய்துவைத்திருப்பவரா?'' என்று கேட்டாள் அன்னபூரணி.

''அவர்தாண்டி, சுகானந்தம்! இன்று மட்டுமா அவர் எனக்கு 'ஞானஸ்நானம்' செய்துவைத்திருக்கிறார்? இதற்கு முன்னால் எத்தனையோ தடவை செய்து வைத்திருக்கிறாரேடி! அப்போதெல்லாம் கேட்காத நீ...''

''அப்போது உங்களையும் என்னையும் தவிர இந்த வீட்டில் வேறு யாரும் இல்லை; 'கல்லென்றாலும் கணவன் புல்லென்றாலும் புருஷன்' என்று பேசாமல் இருந்தேன். இப்போது வயதுக்கு வந்தப் பிள்ளையும் பெண்ணும் வீட்டில் இருக்கும்போது...''

''இருந்தால் என்னடி? அவர்களைக் கட்டிக்கொண்டு நீ அழு; உன்னைக் கட்டிக்கொண்டு அவர்கள் அழட்டும்! எனக்கு வேண்டாம், இந்த வாழ்க்கை; எனக்கு வேண்டாம், இந்த வீடு! வாசலைத் தாண்டினால் வீதியில் நிற்க வைத்து வேடிக்கை பார்க்கும்-இது நம் வீடு! ஒரு நாளைப்போல எந்த விதமான மாறுதலும் இல்லாமல் பொழுது விடிந்தால் காபி; மத்தியானம் சாப்பாடு; சாயந்திரம் சிற்றுண்டி; இரவு சாப்பாடு; அப்புறம் தூக்கம்-இது நம் வாழ்க்கை! சீ, இதுவும் ஒரு வாழ்க்கையா? இதுவும் ஒரு வீடா?-போய்ப் பார்! சுகானந்தத்தின் வீட்டை! போய்ப்பார், சுகானந்தத்தின் வாழ்க்கையை! எவ்வளவுப் பெரிய இடம், என்ன ரம்மியமான வாழ்க்கை! பொழுது போனால் ஊரில் இருக்கிற பெரிய மனிதர்கள் அத்தனை பேரும் அங்கேதாண்டித் கூடுகிறார்கள்! அவர்களுக்கெல்லாம் அங்கே என்ன உபசாரம் நடக்கிறது, என்ன உபசாரம் நடக்கிறது! அந்தப் பெரிய மனிதர்களோடு பெரிய மனிதர்களாக நாமும் கொஞ்ச நேரமாவது இருந்து விட்டு வருவோமே என்று நான் இவளை அழைத்துக்கொண்டு அங்கே போனால், இவள் சொல்லாமல் கொள்ளாமலா ஓடி வருவது? எங்கே அவள்?'' என்று அருணாவின் அறையை நோக்கி அவர் பாய்ந்ததுதான் தாமதம், அவள் கதவுகள் இரண்டையும் ஏககாலத்தில் அடித்துச் சாத்தி, உள்ளே 'டக்'கென்று தாளிட்டுக் கொண்டுவிட்டாள்!

# 26. 'நாலும் தெரிந்த நாற்பத்தெட்டு!'

''ஐயோ, என்ன காரியம் செய்துவிட்டாயடி?'' -அலறினாள் அன்னபூரணி, மூடிய கதவின்மேல் மோதிக் கொண்டு விழுந்து, பேச்சுமில்லாமல் மூச்சுமில்லாமல் கிடந்த தன் கணவரைப் பார்த்து.

''நான் என்னம்மா, செய்தேன்?''-ஒன்றும் புரியாமல் கதவைத் திறந்தாள் அருணா.

இந்தக் கலவரத்தில் விழித்துக்கொண்ட மோகன் எழுந்து வெளியே வந்து, ''என்னம்மா, அப்பாவுக்கு என்ன?'' என்றான் பதட்டத்துடன்.

''ஒன்றுமில்லை; பெரிய மனிதர்களோடு பெரிய மனிதராக இவரும் கொஞ்ச நேரம் இருந்துவிட்டு வந்திருக்கிறார் அல்லவா? அதன் பலனைத்தான் இப்போது அனுபவித்துக் கொண்டிருக்கிறார்!'' என்றாள் அருணா,பேச்சு நின்றாலும் மூச்சு நிற்கவில்லை என்பதைத் தெரிந்துகொண்டு!

அதற்குள் சீமைச் சாராயத்தின் நெடி மூக்கைத் துளைக்கவே,''இந்தப் பழக்கம் வேறு உண்டா, இவருக்கு?'' என்று சொல்லிக்கொண்டே கைக்குட்டையைத் தேடினான் மோகன், அந்த நெடியிலிருந்து. ஓரளவாவது தப்ப!

'எவ்வளவோ சொன்னேன், இதெல்லாம் உங்களோடு போகட்டும்; குழந்தைகளுக்குத் தெரியவேண்டாமென்று -கேட்டாரா? இப்போது பார், இவர் பெற்றக் குழந்தைகளே இவர் மேல் காரித் துப்புகின்றன!' என்று தனக்குள் எண்ணிப் பொருமிய அன்னபூரணி, ''இப்போது என்ன செய்வதென்று தெரியவில்லையே, எனக்கு!'' என்று கையைப் பிசைந்தாள்.

''யாருக்குத் தெரியும், அந்தச் சுகானந்தத்துக்குத்தான் தெரியும்!'' என்றாள் அருணா, வீட்டின் முகட்டை நோக்கி.

''வேடிக்கைக்கும் விளையாட்டுக்கும் இதுவா நேரம்? நீங்கள் இவரைத் தூக்கிக்கொண்டுப் போய்க் கட்டிலின் மேல்

கிடத்துங்கள்; நான் போய் டாக்டரை அழைத்துக் கொண்டு வருகிறேன்!'' என்று மோகன் திரும்பினான்.

''படு புத்திசாலிதான், போ! டாக்டர் எதற்கு, போலீசுக்குப் போன் செய்வதற்கா?'' என்றாள் அருணா.

''அதுவும் கவனிக்க வேண்டிய விஷயந்தான்; தெரிந்த டாக்டர்கள் யாரையாவது...''

அவன் முடிக்கவில்லை; அதற்குள், ''அதெல்லாம் ஒன்றும் வேண்டாம். அவரை அப்படியே தூங்க விடுங்கள்; பொழுது விடிந்ததும் எல்லாம் சரியாய்ப் போய்விடும்!'' என்று யாரோ சொல்வது அவர்கள் காதில் விழுந்தது -எல்லோரும் ஏக காலத்தில் திரும்பிப் பார்த்தனர்; வாயிற்படியின்மேல் ஒரு காலும், சைக்கிள் பெடலின் மேல் இன்னொரு காலுமாக நின்றுக்கொண்டிருந்த மணி, ''நான் வரட்டுமா?'' என்றான், அதற்கு மேல் அங்கே நிற்க விரும்பாமல்.

''எங்கே வந்தாய், எங்கே போகிறாய்?'' என்றான் மோகன்.

''நான் வருவதற்கும் போவதற்கும் ஏதாவது காரண காரியம் உண்டா என்ன? அப்படியே இருந்தாலும் நானே அவற்றைப் பற்றி இனிமேல்தான் யோசித்துத் தெரிந்துக் கொள்ளவேண்டும்; நான் வருகிறேன்!'' என்று சொல்லி விட்டு நகர்ந்தான் மணி.

அவன் தலை மறைந்ததும், ''உலகத்தின் ஒன்பதாவது அதிசயம் இது!'' என்றான் மோகன்.

அந்த 'அதிசயம்' தன்னைப் பார்த்துவிட்டுப் போவதற்காகத்தான் இந்த நேரத்தில் இங்கே வந்திருக்க வேண்டும் என்பதை ஊகித்தறிந்துக்கொண்ட அருணா, ''இருக்கட்டும் அண்ணா, அது இந்த உலகத்தின் ஒன்பதாவது அதிசயமாகவே இருக்கட்டும்!'' என்றாள், எதையோ நினைத்துப் பெருமூச்சு விட்டபடி.

''இவருடைய விஷயத்திலும் அந்த அதிசயம் சொல்வதுதான் சரியாயிருக்க வேண்டும். நீ இவருடைய காலைப் பிடி; தூக்கிக்கொண்டு போய்க் கட்டிலில் கிடத்திவிடுவோம்!'' என்றான் மோகன், தன் அப்பாவின் தலைக்கு கீழே கையைக் கொடுத்தபடி.

''அவனுக்கும் இந்தப் பழக்கம் உண்டா, என்ன?'' என்றாள் அன்னபூரணி, வியப்புடன்.

''இல்லை, இந்தப் பழக்கம் உள்ளவர்களில் பலரை அவன் தன் வாழ்க்கையில் சந்தித்திருக்கிறான்; அவர்களுக்கு வேண்டிய உதவிகளையும் தன்னால் முடிந்தவரை அவன் செய்திருக்கிறான்!'' என்றான் மோகன்.

அதற்குள் அருணா குனிந்து ஆபத்சகாயத்தின் கால்களைப் பற்ற, குப்பென்று வீசிய சாராய நெடி அவளுக்குக் குமட்டலை உண்டாக்க, ''உனக்கு வேண்டாம் அந்த வேலை, நீ இப்படி வா!'' என்று அவள் தாயார் அவளை இழுத்து அப்பால் விட்டு விட்டுத் தானே அவருடைய காலைப் பிடிக்க, இருவருமாகத் தூக்கிக் கொண்டு போய் அவரைக் கட்டிலின் மேல் கிடத்தினார்கள்.

மறுநாள் காலை மணி சொன்னது உண்மையாயிற்று; எப்பொழுதும் போல் ஆபத்சகாயம் எழுந்து உட்கார்ந்தார். தலையை லேசாக வலிப்பது போலிருந்தது; 'இரவு குடித்ததன் எதிரொலி இது!' என்பதை அனுபவப்பூர்வமாகப் புரிந்து கொண்ட அவர், 'இப்பொழுது கொஞ்சம் விஸ்கி இருந்தால் இந்தத் தலைவலி இருந்த இடம் தெரியாமல் பறந்துவிடும்; இந்தக் காலை நேரமும் எப்பொழுதும்போல் அழுது வடியும் நேரமாயில்லாமல் இனிய நேரமாகிவிடும்!-எங்கே போவது விஸ்கிக்கு? பதவியில் இருந்தபோது வேண்டுமானால் எத்தனை புட்டி தேவையாயிருந்தாலும் ஓசியிலேயே கிடைக்கும்; இப்பொழுதுதான் எவனும் திரும்பிக்கூடப் பார்க்க மாட்டேன் என்கிறானே! எப்பொழுதாவது தன்னைத் தேடிக்கொண்டு வரும் ஓரிரு திருட்டுப் பயல்கள் கூட

விஸ்கியும் பிராந்தியுமா திருடிக்கொண்டு வருகிறார்கள்? வேறு என்னவெல்லாமோ திருடிக் கொண்டு வருகிறார்கள்! அவற்றால் ஓரளவு பணம்தான் கிடைக்கிறது? இதற்காகச் சுகானந்தத்தைத் தேடிக் கொண்டு செல்வதென்பதும் இப்போது முடியாத காரியம்; அப்படியே தேடிக்கொண்டுச் சென்றாலும் அவர் கிடைக்கமாட்டார்; கிடைத்தாலும் நேற்று வாய்த்த அந்த 'மாலை நேரம்' இன்று வாய்த்து விடாது!-என்னக் கஷ்டம், என்னக் கஷ்டம்! இப்படியும் ஒரு பிறவி இருக்க வேண்டுமா, இந்த உலகத்தில்? பிறந்தால் சுகானந்தத்தைப் போல் பிறக்கவேண்டும்; வாழ்ந்தால் சுகானந்தத்தைப் போல் வாழ வேண்டும். இல்லாவிட்டால்...'

இந்த இடத்தில் அவர் தன் 'இதய வேட்கை'யைச் சற்றே நிறுத்தி, எண்ணத்திலாவது ஒரு முறை செத்து வைக்கலாமே என்று துணிந்தபோது, காபியும் கையுமாக வந்து நின்றாள் அன்னபூரணி.

''காபி, காபி, காபி!-வேறு என்ன கிடைக்கிறது இந்த வீட்டில், குடிப்பதற்கு?'' என்றார் அவர் சலிப்புடன்.

''டீ போட்டுக் கொண்டு வரட்டுமா?'' என்றாள் அவள், அவருடைய வயிற்றெரிச்சலை மேலும் கொட்டிக்கொள்ளும் நோக்கத்துடன்.

''உன்னுடைய காபியையும் டீயையும் கொண்டுபோய் உடைப்பிலே போடு! போ, எனக்கு எதிரில் நிற்காதே, போ!'' என்று எரிந்துவிழுந்தார் அவர்.

''எங்கே போவதாம்!'' என்று பரிந்து கேட்டாள் அவள்.

''எங்கேயாவது தொலைந்து போ!''

''போகாவிட்டால்?''

''கொன்றுவிடுவேன், கொன்று!''

''அந்த வார்த்தைதான் நானும் உங்களிடம் கேட்கவேண்டுமென்று இருந்தேன்; அதை நான் கேட்காமலே நீங்கள் கொடுக்க முன் வருவதில் எனக்கு மிக்க மகிழ்ச்சி!''

என்று சொல்லிக்கொண்டே கையிலிருந்த காபியை டீபாயின் மேல் வைத்துவிட்டுத் தன் கழுத்தை அவருக்கு முன்னால் நீட்டினாள் அவள்!

அதற்கு மேல் தன்னுடையக் கோபத்தை எப்படிக் காட்டுவதென்று தெரியவில்லை அவருக்கு; ''இதில் என்ன குறைச்சல், இந்த நாட்டுப் பெண்களுக்கு!'' என்றுக் கருவிக்கொண்டே எழுந்து வெளியே வந்தார்.

கூடத்தில் உட்கார்ந்து ஏதோ படித்துக்கொண்டிருந்த அருணா, அவரைக் கண்டதும் தன் கையிலிருந்தப் புத்தகத்தை மூடிக் கீழே வைத்துவிட்டு எழுந்து வாசலை நோக்கி நடந்தாள்!

''எங்கேப் போகிறாய்?''-அதட்டினார் ஆபத்சகாயம்.

அவள் அஞ்சவில்லை; ''நான் எங்கே போகிறேன்?'' என்றாள், அவரை நோக்கித் திரும்பாமலே.

''எங்கேயும் போகாததற்கு அப்படித் திரும்பிக் கொண்டிருப்பானேன்?''

''வெட்கப்படுகிறேன், உங்களைப் பார்க்க! வேதனைப்படுகிறேன், அதை உங்களிடம் சொல்ல!''

''இருக்காதா, சொல்லாமல் கொள்ளாமல் ஓடிவந்தால்?''

''அதற்காக நான் வெட்கப்படவில்லை...''

''வேறு எதற்காக வெட்கப்படுகிறாயாம்?''

''இப்படியும் ஓர் அப்பா வந்து வாய்த்திருக்கிறாரே என்பதற்காக!''

இதைச் சொல்லி அவள் வாய் மூடவில்லை; ''என்னச் சொன்னாய்!'' என்று உறுமினார் அவர்.

மோகன் குறுக்கிட்டு, ''அவளுடன் உங்களுக்கு என்னப்பா, பேச்சு? நீங்கள் போய்க் காபியைக் குடியுங்கள்!'' என்றான் அவரைச் சமாதானம் செய்யும் நோக்கத்துடன்.

அவரோ, ''இவளை இப்படியே விட்டுக்கொண்டு போகக் கூடாது, மோகன்! நேற்றுத்தான் அந்தப் பெரிய மனிதரிடம் இவள் மரியாதை தெரியாமல் நடந்துகொண்டாள் என்றால், இன்று என்னிடமுமல்லவா மரியாதை தெரியாமல் நடந்து கொள்கிறாள்?'' என்றார் அப்பொழுதும் விடாமல்.

அவளும் விட்டுக் கொடுக்கவில்லை; ''முதலில் மரியாதை என்றால் என்னவென்று தெரிந்துக் கொள்ளுங்கள்; அதற்குப் பிறகு மரியாதையைப் பற்றிப் பேசுங்கள்!'' என்றாள் சுடச் சுட.

அவ்வளவுதான்; அவள் கன்னத்தில் 'பளார்' என்று ஓர் அறை விழுந்தது. அதைத் தொடர்ந்து, ''அவ்வளவு தூரத்துக்கு வந்துவிட்டாயா, நீ? ஜாக்கிரதை! யாரிடம் என்ன பேசுகிறோம் என்று தெரிந்து பேசு; தெரியாமல் பேசாதே! பேசினால் இந்த வீட்டில் எனக்கு நீ மகளாகவும் இருக்க முடியாது; உனக்கு நான் அப்பாவாகவும் இருக்க முடியாது!'' என்று ஒரு துள்ளுத் துள்ளி நின்றார் அவர்.

''ரொம்ப அழகாய்த்தான் இருக்கிறது! அடித்து அடக்கக் கூடிய வயதா அவளுக்கு, இப்போது? வாருங்கள் இப்படி!'' என்று அவருடையக் கையைப் பற்றி இழுத்தாள் அன்னபூரணி.

''அடித்து அடக்காமல் சர்க்கஸ் வித்தை காட்டியா அடக்குவார்கள், அவளை? அதுதான் முடியாது, என்னால்! ஆடிக் கறக்கிற மாட்டை நான் ஆடித்தான் கறப்பேன்; பாடிக் கறக்கிற மாட்டை நான் பாடித்தான் கறப்பேன்!'' என்றார் அவர்.

மோகன் சும்மா இருக்கக் கூடாதா?-''என்ன செய்தால் என்ன, அப்பா? கறக்கிற மாடுதான் கறக்கும்; கறக்காத மாடு ஒரு நாளும் கறக்காது!'' என்றான் மெல்ல.

''என்னடா, நீ கூடப் பொடி வைத்துப் பேசுகிறாய்!'' என்றார் அவர், அவன் பக்கம் திரும்பி.

''நானா பேசுகிறேன், நீங்கள் அப்படிப் பேச வைக்கிறீர் கள், என்னை! பிறர் மதிக்க வேண்டும் என்பதற்காக நாம்

சிரிக்க இடம் கொடுத்துவிடக் கூடாது, அப்பா!'' என்றான் அவனும் பொறுமை இழந்து.

''யார் இப்போது சிரிக்க இடம் கொடுக்கிறார்கள்?''

''நீங்கள்தான்! ஏற்கெனவே ஓரிரு திருட்டுப் பயல்கள் இங்கே வந்துபோவதே எனக்கு என்னவோ போலிருக்கிறது; அது போதாதென்று நேற்று யாரோ ஒரு கிழட்டுப் பயலை இவளுடன் விளையாட விட்டு நீங்கள் வேடிக்கை பார்த்தீர்களாமே, இதெல்லாம் நன்றாயிருக்கிறதா உங்களுக்கு?''

''யார் சொன்னது, அவரைக் கிழட்டுப் பயல் என்று? நாலும் தெரிந்த நாற்பத்தெட்டு வயது வாலிபரடா, அவர்! அவருக்குத்தான் இவளை நான் கல்யாணம் செய்து கொடுக்கப் போகிறேனாக்கும்?''

அதுவரை தனது கன்னத்தைத் தேய்த்தபடி விசும்பிக் கொண்டிருந்த அருணா, ''எத்தனையாவது மனைவியாக என்று கேள், அண்ணா!'' என்றாள் அவன் பக்கம் திரும்பி.

அவன் கேட்பதற்குள் அவரே குறுக்கிட்டு, ''ஆயிரம் துணைவிகள் இருந்தாலும் அவருக்கு இருப்பது ஒரே ஒரு மனைவிதான்! அவளையும் இவளுக்காக அவர் விவாகரத்து செய்துவிடுவதாகச் சொல்லிவிட்டார்! அப்புறம் என்ன? நமக்கு வேண்டியது அவருடைய சம்பந்தம், அந்தச் சம்பந்தத்தின் மூலமாக இந்தத் தரித்திரம் பிடித்த வாழ்க்கையிலிருந்து 'நமக்கு விடுதலை! அவ்வளவுதானே?'' என்றார், அலட்சியமாக

''குடிகாரன் பேச்சு பொழுது விடிந்தால் போச்சு என்பார்கள்; உங்கள் பேச்சு பொழுது விடிந்தாலும் போகாது போலிருக்கிறது!'' என்றாள் அன்னபூரணி, அடுத்த அறை தன் கன்னத்தில் விழுந்தாலும் விழட்டும் என்றுத் துணிந்து!

''யாரைக் குடிகாரன் என்கிறாய்? நாலணாவுக்கு கள் வாங்கி நடுத்தெருவில் உட்கார்ந்துக் குடிக்கிறானே, அவனைப் போய்க் குடிகாரன் என்று சொல்! நாங்களெல்லாம் ஒரு ராஜகுடும்பம் எப்படிக் குடிக்குமோ,

அப்படிக் குடிக்கிறோமாக்கும்? நேற்றிரவு மட்டும் அவர் தன் சிநேகிதர்களுக்காக எவ்வளவு செலவழித்திருப்பார், தெரியுமா? ரூபாய் ஆயிரத்துக்கு மேல் இருக்கும்டி, ரூபாய் ஆயிரத்துக்குமேல் இருக்கும்!-ஆஹா அவருடன் மட்டும் நாம் சம்பந்தம் செய்து கொண்டு விட்டால்?-கவர்னர் வந்து என்னுடைய கையைப் பிடித்துக் குலுக்குவார்; கவர்னரின் மனைவி வந்து உன்னுடைய கையைப் பிடித்துக் குலுக்குவாள்- அதற்குப் பிறகு கேட்க வேண்டுமா? குறைந்த பட்சம் ஒரு மந்திரியின் மகளையாவது பார்த்து இவனுக்கும் கல்யாணம் செய்து வைத்துவிடலாம்; அந்த மந்திரியின் தயவைக் கொண்டு எதற்காவது பெர்மிட், லைசென்ஸ், கோட்டா என்று வாங்கி, லட்சம் லட்சமாகப் பணத்தைக் குவிக்கலாம்...''

அவர் முடிக்கவில்லை; அதற்குள், ''அம்மா இல்லையா?'' என்று யாரோ வந்து கேட்கவே, நடுவில் தன்னை மறந்து மூடிக்கொண்ட கண்களை அவர் திறந்தார்- அடுத்த வீட்டுக்காரி வந்து அவருக்கு எதிர்த்தாற்போல் அடக்கமே உருவாய் நின்று கொண்டிருந்தாள்!

அப்போதுதான் அவளைத் தவிர அங்கே வேறு யாரும் இல்லை என்பதும், எல்லோரும் தன்னுடையப் போக்கில் தன்னைப் பேச விட்டுவிட்டு, அவரவர் வேலையை அவரவர் பார்க்கப் போய்விட்டார்கள் என்பதும் அவருக்குத் தெரிந்தது!-அதற்குமேல் சும்மா இருக்க முடியுமா, அவரால்? ''அன்னபூரணி, அன்னபூரணி!'' என்றார் ஆத்திரத்துடன்.

''கொஞ்சம் பொறுங்கள்; சோற்றை வடித்துவிட்டு வந்துவிடுகிறேன்!'' என்றாள் அவள், அடுக்களையிலிருந்து.

''அதோ இருக்கிறாள்; போய்ப்பார்'' என்று அடுத்த வீட்டுக்காரியிடம் மட்டும் தன் ஆத்திரத்தைக் காட்டாமல் சொல்லிவிட்டு, ''எங்கே, அந்த அருணா?'' என்று உறுமினார் அவர்.

அப்போதும் அடுக்களையை விட்டு வெளியே வராமல், ''கல்லூரிக்கு நேரமாகவில்லையா, குளிக்கப் போயிருக்கிறாள்!'' என்றாள் அன்னபூரணி.

''மோகன்?''

''அவனுக்கும் ஆபீசுக்கு நேரமாகிவிட்டதாம்; முடி வெட்டிக் கொண்டு வரப் போயிருக்கிறான்!''

அவ்வளவுதான்; அதற்குமேல் அவளை ஒன்றும் கேட்க விரும்பாமல், ''மரியாதைத் தெரியாத கழுதைகள், மரியாதைத் தெரியாத கழுதைகள்!'' என்ற பல்லவியைத் தொடர்ந்துப் பாடிக்கொண்டே, ஆறிப்போன காபியை எடுத்துக் குடித்தார் அவர், ஓர் ஆறுதலுக்காக!

# 27. அன்பின் துன்பம்

பாமா கேவலம் ஒரு சமையற்காரியின் தங்கை!-இது தன் அப்பாவுக்குத் தெரியக்கூடாது என்று மோகன் மட்டும் நினைக்கவில்லை; ராதாவும் நினைத்தாள்!

இந்த நினைப்பு மோகனைப் பார்த்த பிறகு அவளுக்கு ஏற்படவில்லை; பார்ப்பதற்கு முன்னாலேயே ஏற்பட்டிருந்தது -ஆம், 'பிறப்பு எல்லா உயிர்களுக்கும் ஒன்றாயிருந்தாலும், சிறப்பு எல்லா உயிர்க்கும் ஒன்றாயிருக்க முடியாது, செய்யும் தொழிலால்!' என்பது, குறளைப்பற்றியும் குறள் ஆசிரியரைப் பற்றியும் தெரியாமலே அவளுக்குத் தெரிந்திருந்தது. அத்துடன், பாம்புக்கு விஷத்தை ஏற்றத்தான் தெரியும்; இறக்கத் தெரியாது-அதே மாதிரி சமூகத்துக்கும் ஏற்றத் தாழ்வைக் கற்பிக்கத்தான் தெரியும்; குறைக்கத் தெரியாது, குறைக்க விரும்பாது என்பதையும் அவள் அறிந்திருந்தாள். ஆகவே, தனக்குத் தெரிந்த தொழிலைச் செய்து வாழ அவள் தயங்கவில்லை; அந்தத் தொழிலில் இழிவு ஏதும் இருப்பதாகவும் அவளுக்குத் தோன்றவில்லை. மாறாக,

அதில் ஒரு கௌரவம் இருப்பதாகக் கூட அவள் அப்போது நினைத்தாள். அதற்குக் காரணம் அவளுக்குத் தெரிந்த சில பெண்கள், தாங்கள் உயிர் வாழ்வதற்காகத் தங்கள் உடலையே விலை கூறிக் கொண்டிருந்ததுதான்!

உழைப்பின்றி ஊதியம் தரும் அந்தத் தொழிலை அவள் இழிவென்று கருதினாலும் சம்பந்தப்பட்டவர்கள் அதை இழிவென்று கருதாதது அவளுக்கு ஆச்சரியமாயிருந்தது. அதையே பின்னால் 'நாடகம்' என்ற பேராலும், 'சினிமா' என்ற பேராலும், அவர்கள் 'கலை'யாக்கி, சமூகத்தின் பாராட்டுதலைப் பெற்றபோது, அவளுடைய ஆச்சரியம் இரு மடங்கு ஆகியது. ஆயினும் சமூகத்தைப் பிடித்த பைத்தியம் அவளைப் பிடிக்கவில்லை. அதாவது, அவர்களை யார் பாராட்டினாலும் அவள் பாராட்டத் தயாராயில்லை.

இத்தனைக்கும் அந்தக் கலையையும், கலைச் செல்வங்களையும் கட்டிக் காத்து வளர்க்க வேண்டியதன் அவசியத்தைப் பற்றிப் பல பிரமுகர்கள் அவ்வப்போது பேசியதை அவளும் கேட்டுக் கொண்டுதான் இருந்தாள். எனினும், அதைக் கேட்கும் போதெல்லாம் 'எந்தக் கலையை இவர்கள் வளர்க்கச் சொல்கிறார்கள்?' என்று அவளுக்குச் சிரிக்கத்தான் தோன்றுமே தவிர, மற்றவர்களைப் போல் கை தட்டத் தோன்றாது!

செந்தாமரை வேண்டுமானால் சேற்றிலிருந்து முளைக்கட்டும்; சிவனாரும் அதைச் சிரமேற் கொள்ளட்டும். அதற்காகக் கலை, விபசாரத்திலிருந்தா கிளைப்பது? சமூகம் அதைத் தலை மேற்கொண்டா கூத்தாடுவது? இப்படி நினைத்தாள் அவள்!

இந்த நினைப்பே அந்தக் கலையில் இல்லாத ஒரு கௌரவம்-அதாவது, அந்தத் தொழிலில் இல்லாத ஒரு கௌரவம் தன்னுடைய தொழிலில் இருப்பதாக அவளை அப்போது நினைக்க வைத்தது. ஆனால் சமூகம் அப்படி நினைக்காதபோது அவள் மட்டும் அப்படி நினைத்து என்ன

பிரயோசனம்?-அதனால் தான் அது யாருக்கும் தெரியக் கூடாது, முக்கியமாகப் பாமாவின் காதலனுக்கு அது தெரியக் கூடாது என்று அவள் இப்போது நினைத்தாள். அவள் நினைத்ததற்கு நேர் விரோதமாக மோகன் வந்து சேர்ந்தான்-ஆம், அவனுக்குத் தெரியும் அவள் சமையற்காரி என்று!-பாமா சொல்லி அல்ல; சொல்லாமலே தெரியும் அவள் சமையற்காரி என்று அவனுக்கு! அதை மறைப்பதற்காக ஒரு இரண்டு நாள் வேண்டுமானால் அவள் அவனைக் கண்டதும் ஒளிந்துக்கொண்டு விடலாம்; கடைசிவரை அப்படியே ஒளிந்துகொண்டிருக்க முடியுமா?-அதுதான் யோசனையாயிருந்தது அவளுக்கு.

அந்த யோசனையிலேயே அன்றிரவு தூக்கம் பிடிக்காமல் அவள் அப்படியும் இப்படியுமாகப் புரண்டு படுத்துக் கொண்டிருந்தபோது, ''அக்கா, அக்கா! அப்புறம் சொல்கிறேன் என்றாயே?'' என்று ஆரம்பித்தாள் அவளுக்குப் பக்கத்தில் படுத்துக்கொண்டிருந்த பாமா. அவளுக்கும் தூக்கம் பிடிக்காமல்தான் இருந்தது அப்போது!

''நீயும் அந்த மோகனும் இந்த நாளில்தான் காதலிக்கிறீர்கள் என்பதில்லை; அந்த நாளிலும் காதலித்தீர்கள்!''

''எந்த நாளில், அக்கா?''

''அதாவது நீ நாலைந்து வயது சிறுமியாயிருந்த அந்த நாளில்! அப்போது அவனுக்கும் வயது ஏழெட்டுத்தான் இருக்கும். எப்போது பார்த்தாலும் அவன் உன்னுடன் விளையாட வந்துவிடுவான்!''

''நம்முடைய வீட்டுக்கா?''

''இல்லை; அவன் ஏன் நம்முடைய வீட்டுக்கு வரப் போகிறான்? நாம்தான் அவனுடைய வீட்டுக்குப் போவோம்!''

''அங்கேயும் நீ வேலையாயிருந்தாயா, என்ன?''

''ஆமாம்; ஒரு வருடம் இரண்டு வருடங்கள் அல்ல, நாலு வருடங்கள் வேலையாயிருந்தேன்!''

''ஏன்? அவருடைய அம்மாவுக்கு சமைக்கத் தெரியாதா?''

''அப்படி ஒன்றுமில்லை; அந்த அம்மாள் இடையில் கொஞ்ச நாட்கள் அவருடன் வாழவில்லை!''

''ஏன் அக்கா?''

''இல்லாத சுகத்தை நினைத்து இருக்கும் சுகத்தைக்கூடச் சிலர் இழந்துவிடுவதில்லையா, அந்த ரகத்தைச் சேர்ந்தவர் அந்த அம்மாள் கணவன். அதனால் அவர் மேற்கொண்ட சில பழக்க வழக்கங்கள் அந்த அம்மாளுக்குப் பிடிக்காமற் போய்விட்டன!''

''அதற்காக?''

''தன் மனைவி தன்னை விட்டுப் பிரிந்தாலும தன் மகன் தன்னை விட்டுப் பிரிவதை அவர் விரும்பவில்லை; அவனைத் தாயிடமிருந்து பிரித்துத் தன்னுடன் வைத்துக் கொண்டார். அப்படி வைத்துக்கொண்ட பிறகுதான் ஓட்டல் சாப்பாட்டைக் கொண்டு மட்டும் அவனைப் பராமரித்து விட முடியாது, அவனைப் பராமரிக்க ஒரு பெண்ணின் உதவியும் தேவை என்பது அவருக்குத் தெரிந்தது. அதற்காக என்னைத் தேடிப் பிடித்து வேலைக்கு வைத்துக்கொண்டார்!''

''அப்படியானால் நீயும் ஒரு விதத்தில் அவருக்குத் தாயாய்த்தான் இருந்திருக்கிறாய் என்று சொல்லு?''

''நான் தாயாயிருந்தாலும் அவனுடைய தாயார் அவனைப் பார்க்காமல் இருப்பாளா?-வருவாள், அவர் இல்லாத சமயம் பார்த்து, தன் மகனைப் பார்ப்பாள்; அவர் வருவதற்குள் சுவடு தெரியாமல் போய்விடுவாள்!''

''அதற்கு நீ உடந்தையாயிருந்தாயாக்கும்?''

''ஆமாம், அதுதான் நான் செய்த குற்றம்; அந்தக் குற்றத்துக்காகத்தான் அவர் என்னை வேலையிலிருந்து

நீக்கிவிட்டார்! அதற்காக நான் அன்றும் வருந்தவில்லை; இன்றும் வருந்தவில்லை. ஏனெனில், அதற்கு உடந்தையாயிருந்தபோது அடைந்த மகிழ்ச்சியை வேறு எப்போதும் நான் அடைந்ததில்லை; அடையப்போவதுமில்லை!''

இதைச் சொல்லி அவள் நிறுத்தியதும், ''அப்படிப் பட்டவருடன் நீ எனக்காகச் சம்பந்தம் செய்துகொள்ள முடியுமா, இப்போது?'' என்றாள் பாமா.

''நான் அவருடன் சம்பந்தம் செய்துகொள்ள தயாராயிருந்தாலும், அவர் என்னுடன் சம்பந்தம் செய்து கொள்ளத் தயாராயிருக்கமாட்டாரே? அதனால்தான் அந்தப் பிள்ளையாண்டானைக் கண்டதும் நான் ஒளிந்துகொண்டு விட்டேன். அதனாலென்ன, நீ அவனிடம் 'என் அக்கா சமையற்காரி' என்று இதுவரை சொல்லவில்லையே?'' என்றாள் ராதா, ஏதோ ஓர் அசட்டு நம்பிக்கையுடன்.

''சொல்லாவிட்டால்?''

''ஐயா, அம்மாவைக் கொண்டே உன்னுடைய கல்யாணத்தை முடித்துவிடலாம் என்று நினைக்கிறேன், நான்!''

''நீ இல்லாமலா எனக்குக் கல்யாணம்?''

''நான் இல்லாமலென்ன, நாலு பேரில் ஒருத்தியாக நானும் இருந்துவிட்டுப் போகிறேன்!''

''அப்படி நடக்கும் கல்யாணம் எனக்கு மகிழ்ச்சி அளிக்கும் என்று நீ நினைக்கிறாயா?''

''நான் அப்படி நினைக்கவில்லை; ஓரிரு நாட்களுக்கு ஏதோ ஒரு மாதிரியாய்த்தான் இருக்கும். அதற்காக என்னுடைய அந்தஸ்துக்கு ஏற்றாற்போல் நான் ஒரு சமையற் காரனைப் பார்த்தா உனக்குக் கல்யாணம் செய்து வைப்பது?''

''வேண்டாமே! கல்யாணம் இல்லாமல் என்ன குறைந்து போய்விட்டாய் நீ? அதே மாதிரி நானும் இருந்துவிட்டுப் போகிறேன்!''

''ரொம்ப அழகுதான்! அப்படி நீ இருந்துவிட்டால் இது வரை நான் வாழ்ந்ததற்கே அர்த்தமில்லாமல் அல்லவா போய்விடும்?''

''அதற்காக உன்னை நான் உயிரோடு மறந்துவிட வேண்டுமா, என்ன? அது என்னால் முடியாது!''

''அபசகுனம் மாதிரிப் பேசாதே! அந்தப் பையனைப் போல் இன்னொரு பையன் உனக்குக் கிடைக்க மாட்டான்!''

''இருக்கலாம்; ஆனால் உன்னைப் போல் இன்னொரு அக்காவும் எனக்குக் கிடைக்க மாட்டாளே?''

''கிடைக்காமல் எங்கே போய்விடப் போகிறாள்? நீ போய்த் தூங்கு!''

'தூங்கவாவது!-எவ்வளவு பெரிய துரோகத்தை எவ்வளவு சாதாரணமாகச் செய்யச் சொல்லிவிட்டு இவள் என்னைத் தூங்கச் சொல்கிறாள்!-நடக்கிற காரியமா, இது?

இவளுக்காக அவரை நான் மறந்தாலும் மறப்பேனே தவிர, அவருக்காக இவளை நான் மறப்பதாவது?

அதிலும், இவள் நினைப்பதுபோல இதுவரை நான் இவளைப்பற்றி அவரிடம் சொல்லாமலும் இல்லையே?-ஒளிவு மறைவில்லாமல் சொல்லியிருக்கிறேன், 'என் அக்கா சமையற்காரிதான்' என்று!-அதற்கு ஒப்பி அவர் என்னை மணந்தால் மணக்கட்டும்; மணக்காவிட்டால் போகட்டும்!

அதற்காக எந்த ஏணியைக் கொண்டு இவ்வளவு தூரம் ஏறி வந்திருக்கிறேனோ, அந்த ஏணியையா, இப்போது நான் காலால் உதைத்துத் தள்ளுவது?-சீ, நினைப்பதற்கே நெஞ்சம் கூசுகிறதே!

காதலுக்காகப் பெற்ற தாயையும், பேணிக் காத்த தந்தையையும் கூடச் சிலர் துறந்துவிடுகிறார்கள் என்பது என்னமோ உண்மைதான்!-ஆனால் அந்தக் காதலில் உண்மை இருப்பதாகத் தெரியவில்லையே, எனக்கு! இருந்தால் அத்தனைத் தன்னலம் அதில் இடம் பெற்றிருக்குமா?

உண்மையில், காதல் என்பதுதான் என்ன?-தன்னலம் பேணி, பிறர் நலம் துறப்பதா காதல்?-இல்லை, பிறர் நலம் பேணித் தன்னலம் துறப்பதே காதல்!

அந்தக் காதல்தான் எனக்கும் தேவை, இந்த உலகத்துக்கும் தேவை. மற்ற காதல்களெல்லாம் யாரை வாழ வைக்க வேண்டுமோ, அவர்களை வாழ வைக்கட்டும்; என்னை வாழ வைக்க வேண்டாம். ஏனெனில் பெற்ற தாயைவிட, பேணிக் காத்த தந்தையை விட என் அக்காவே எனக்குப் பெரியவள்!-ஆம், அவள் எனக்காகத் தன் உயிரைத் தியாகம் செய்திருந்தால் கூட நான் அவளை அவ்வளவு பெரியவளாக மதித்திருக்க மாட்டேன்; அவள் தியாகம் செய்தது, செய்துக் கொண்டிருப்பது தன் உணர்ச்சியை! யாருக்காக,எனக்காக! அந்த மகா தியாகத்தை மறந்து நான் வாழ்வதை விட, சாவதே மேல்!...

இந்த 'ஆத்ம சோதனை'யில் அன்றிரவை எப்படியோ கழித்து விட்டு, மறுநாள் காலை அவள் ஆபீசுக்குப் போன போது, அங்கே மோகன் இடம் காலியாயிருந்தது. 'எங்கே போயிருப்பார்?' என்று அவள் சுற்றுமுற்றும் பார்த்தபோது, ''இதை மோகன் உங்களிடம் கொடுக்கச் சொன்னான்!'' என்று ஒரு கடிதத்தைக் கொண்டு வந்து அவளிடம் கொடுத்தான் மணி.

அந்தக் கடிதத்தில்:

''அன்புள்ள பாமா,

இன்று நீ என்னை ஆபீசில் காணாமல் ஏமாற்றம் அடைந்திருக்கலாம்; அந்த ஏமாற்றத்தைத் தவிர்ப்பதற்காகவே இந்தக் கடிதம்-அத்துடன், எங்கே நீ என் வீட்டைத் தேடி வந்துவிடுவாயோ என்ற அச்சமும் கூட!

நேற்றிரவு உன்னை உன் வீட்டில் வைத்துப் பார்த்து விட்டு வந்ததிலிருந்து என் வீட்டில் எனக்கு அமைதியில்லை. அதற்கு எத்தனையோக் காரணங்கள் இருப்பினும் அவற்றை யெல்லாம் இப்போது நான் இங்கே சொல்ல விரும்ப

வில்லை. மொத்தத்தில் தற்போது சாந்தி இழந்து தவிக்கும் நான் ஓரளவாவது சாந்தி பெறவேண்டும் என்பதற்காக மணியின் அறையைத் தேடி வந்தேன். அவனும் தன் அறையிலேயே என்னை இருக்கச் சொல்லிவிட்டு ஆபீசுக்கு வந்து விட்டான். அதுவும் ஒரு விதத்தில் நல்லதாய்த்தான் போயிற்று; கதவை உள்ளேத் தாளிட்டுக்கொண்டுக் கண்ணை மூடிப் படுத்துக்கொண்டு விட்டேன்!

தனிமை!-அதிலும் ஓர் இனிமை இருக்கத்தான் இருக்கிறது. ஒரு வேளை அதற்காகத்தான் அவன் என்னை இங்கே விட்டுவிட்டு அங்கே வந்துவிட்டானோ என்னமோ?-இருந்தாலும் இருக்கும்; நீண்ட நாட்களாகவே தனிமையில் இனிமை கண்டு கொண்டிருப்பவன் அல்லவா அவன்?

நீ விரும்பினால் சாயந்திரம் அவனுடன் ஓட்டல் அறைக்கு வரலாம்; விரும்பாவிட்டால் வேண்டாம். நாளை நானே வந்து உன்னைப் பார்த்துக் கொள்கிறேன்; மற்றவை நேரில்.

என்றும் உன்னுடைய,
மோகன்.''

குறிப்பு:

படித்து முடித்ததும் இந்தக் கடிதத்தைக் கிழித்து எறிந்து விடு; பத்திரப்படுத்தி வைக்காதே. அதனால் உனக்கும் எனக்கும் பின்னால் ஏதாவதுத் தொல்லைகள் நேர்ந்தாலும் நேரலாம்!

அவனுடைய குறிப்புப்படி அவள் அந்தக் கடிதத்தைப் படித்துமுடித்ததும் கிழித்து எறிந்துவிடவில்லை; அதற்கு எந்தவிதமான அவசியமும் இருப்பதாகவும் அவளுக்குத் தோன்றவில்லை. எனவே, அவனுடைய வேண்டுகோளுக்கு விரோதமாக அவள் அதைப் பத்திரப்படுத்தி வைத்துவிட்டு, 'அசடு,அசடு! அந்தரங்கமாகக் காதலிப்பவர்களுக்குத்தானே அந்தத் தொல்லையெல்லாம்? நாம்தான் பகிரங்கமாகக் காதலிக்கிறோமே, நமக்கு ஏன் அந்தத் தொல்லையெல்லாம்

நேருகிறது?' என்று தனக்குத் தானே சொல்லிக்கொண்டு, தனக்குரிய இடத்தில் உட்கார்ந்தாள்.

அவளுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டிருந்த ரமா, ''என்ன, காதல் கடிதமா?'' என்றாள் அவளை ஒரு தினுசாகப் பார்த்தபடி.

''ஆமாம், காதல் கடிதம்தான்! மோகன் எழுதியிருக்கிறார்; அதற்கு மேல் ஏதாவது தெரிய வேண்டுமா, உனக்கு?'' என்றாள் பாமா, அவள் முகத்தில் அடித்தாற் போல்.

'ஓடாத நாயைத் துரத்தி என்ன பிரயோசனம்?' என்று எண்ணியோ என்னமோ, ரமா அதற்கு மேல் அவளை ஒன்றும் கேட்கவில்லை; முகத்தைத் திருப்பிக்கொண்டு விட்டாள்!

பாமா விடவில்லை; ''ஏன், அது மணியின் காதல் கடிதமாயிருக்கும் என்று நீ நினைத்தாயா?'' என்றாள், அவளை வம்புக்கு இழுக்கும் நோக்கத்துடன்.

''நான் ஏண்டியம்மா, அப்படியெல்லாம் நினைக்கிறேன்?'' என்றாள் அவள்.

''நீ அப்படி நினைத்ததால்தான்டியம்மா, நான் கேட்கிறேன்!'' என்றாள் அவள்.

அதற்குள் அந்த வழியாக வந்த பரந்தாமன், ''என்ன அது?'' என்று கேட்கவே, ''ஒன்றுமில்லை!'' என்று இருவரும் ஏககாலத்தில் சொல்லிக்கொண்டே, ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்து விழித்தார்கள்!

தனக்குத் தெரிய வேண்டாம் என்பதற்காக அவர்கள் எதையோ மறைக்கிறார்கள் என்பதைப் புரிந்துகொண்ட பரந்தாமன், அதற்கு மேல் அவர்களைச் சோதனைக்கு உள்ளாக்க விரும்பாமல் தன் அறைக்குள் நுழைந்தார். அவருடையத் தலை மறைந்ததும், ''என்னை மன்னித்துவிடு, பாமா! நான் கேட்டது தப்புத்தான்!'' என்றாள் ரமா, தன் தலையைத் தாழ்த்தி.

''நீ என்னிடம் மன்னிப்புக் கேட்கவும் வேண்டாம்; நான் உனக்கு மன்னிப்பு அளிக்கவும் வேண்டாம். அந்தக் கடிதத்தைக் கொண்டு வந்து என்னிடம் கொடுத்தவர் மணி. ஆகவே, அது அவர் எனக்கு எழுதிய காதல் கடிதமாயிருக்கும் என்று நீ நினைத்துவிட்டாய்! அதுதானே உண்மை?'' என்றாள் பாமா

'ஆம்' என்பதற்கு அடையாளமாகத் தன் தலையை ஆட்டினாள் அவள்!

பாமா சிரித்தாள்; சிரித்துவிட்டுச் சொன்னாள்:

''இத்தனைக்கும் அந்தக் கடிதத்தை அவர் என்னிடம் ரகசியமாகக்கூடக் கொடுக்கவில்லை; பகிரங்கமாகத்தான் கொடுத்தார். அதுவும், 'மோகன் இந்தக் கடிதத்தை உங்களிடம் கொடுக்கச் சொன்னான்!' என்று வேறு சொல்லிக் கொடுத்தார். அப்படியும் நீ இப்படி நினைக்கிறாய் என்றால் அதற்கு என்ன அர்த்தம்?-நீ அவரைக் காதலிக்கிறாய் என்று அர்த்தமா? இல்லை, இந்த உலகத்தில் ஆணும் பெண்ணும் ஒருவரையொருவர் காதலிப்பதே குற்றம் என்று நீ நினைக்கிறாய் என்று அர்த்தமா?''

ரமா பெருமூச்சு விட்டாள்; பெருமூச்சு விட்டுவிட்டுச் சொன்னாள்:

''அவரை நான் காதலித்து என்ன பிரயோசனம்? அவர் என்னைக் காதலிக்க வேண்டுமே?''

''அப்படிச் சொல்லு! உனக்காக நான் வேண்டுமானால் அவரிடம் தூது செல்லட்டுமா?''

''ஐயோ, வேண்டாம்! அதற்காக அவர் இந்த ஆபீசை விட்டேப் போனாலும் போய்விடுவார்!''

''போனால் என்னவாம், உனக்கு?''

''போகிறபோதும் வருகிறபோதும் அவரை நான் பார்த்துக்கொண்டாவது இருக்கிறேனே, அது கூட அல்லவா இல்லாமற் போய்விடும் எனக்கு!'' என்றாள் அவள், பெருமூச்சுடன்.

''அப்படி வா, வழிக்கு! இப்போது நீ அகப்பட்டுக் கொண்டாயா, என்னிடம்?'' என்றாள் இவள், வெற்றிச் சிரிப்புடன்.

''அகப்பட்டுக் கொண்டேன், அகப்பட்டுக்கொண்டேன், அகப்பட்டுக்கொண்டேன்!-போதுமா? இனியாவது அதை விட்டுவிட்டுப் பேசாமல் உன் வேலையைப் பாரேன்?'' என்றாள் ரமா, கெஞ்சாக் குறையாக.

அப்பொழுதும் அவளை விடாமல், ''இவ்வளவு ரகசியமாகக் காதலிப்பதைவிட, நீ அவரைப் பகிரங்கமாகவே காதலிக்கலாமே?'' என்றாள் பாமா.

''அதற்கு உன்னுடைய மோகன் இல்லையே, அவர்!'' என்றாள் அவள்.

''ஆம், அவர் என்னுடைய மோகன் இல்லைதான்!'' என்றாள் பாமா.

வலியவன்; ஆனால் எளியவன்!-மோகனின் கடிதத்தைக் கொண்டுவந்து கொடுக்கும்போது மணி அப்படித்தான் தோன்றினான், பாமாவுக்கு.

இல்லாவிட்டால் நண்பர் கொடுக்கச் சொன்னார் என்பதற்காக அந்தக் கடிதத்தைக் கொண்டு வந்து அவர் என்னிடம் அவ்வளவு பவ்வியமாகக் கொடுத்திருப்பாரா? 'போடா, போ! யார் என்று நினைத்துக்கொண்டாய், என்னை?' என்று வெகுண்டெழுந்து அவர்மேல் பாய்ந்திருக்க மாட்டாரா?

அவருக்குத்தான் என்ன துணிச்சல். அந்தக் கடிதத்தை எழுதி அவரிடம் கொடுக்க. அப்படியா, நான் அவரைத் தேடிக் கொண்டு போய்விடுவேன், அவருடைய வீட்டுக்கு?-அதுவும் ஒரே ஒரு நாள் அவர் ஆபீசுக்கு வரவில்லை என்பதற்காக!

அந்த நிலைக்கு அவராலும் என்னைக் கொண்டுவந்து விட முடியாது; நானும் அதற்கு ஒரு நாளும் இடம் கொடுக்க

மாட்டேன்-அப்படியிருக்கும்போது அவருக்கு ஏன் இந்த அச்சம்?

அன்று நான் சொன்னேனே, 'நீங்கள் விரும்பினால் உங்களுடைய வீட்டுக்கு நானும் உங்களுடன் வரத் தயார்!' என்று-அதை எண்ணிப் பயந்துவிட்டார் போலிருக்கிறது!

பாவம், அவரைப் பற்றி எனக்குத் தெரியாதா? அவருக்குத் தெரியாமல் நான் அவரை அந்தத் தர்மசங்கடத்துக்கு உள்ளாக்கிவிடுவேனா?-அதிலும், அக்கா வேறு அவரைப் பார்த்ததும் ஒரு புதுப் பிரச்னையைக் கிளப்பியிருக்கும்போது?

முக்கியமாக, அதைச் சொல்ல வேண்டும் என்றுதான் இன்று நான் அவரை இங்கே எதிர்பார்த்தேன்; அவர் என்னடா என்றால்...

ஆமாம், 'நீ விரும்பினால் ஓட்டல் அறைக்கு வரலாம்' என்று அவர் எழுதியிருக்கிறாரே, அங்கே நான் போகலாமா? போவது அவ்வளவு நன்றாயிருக்குமா? அதுவும் அவருடைய நண்பருடன்...

ஏன் போகக் கூடாது?-என்மேல் எனக்கு நம்பிக்கை இருக்கும்போது எங்கேதான் போகக் கூடாது? எவருடன்தான் போகக் கூடாது?

இந்த எண்ணச் சுழலில் அன்றைய வேலையை எப்படியோ முடித்துவிட்டு அவள் வெளியே வந்தபோது, "உங்களுக்காகத்தான் காத்துக்கொண்டிருக்கிறேன்; நான் வரட்டுமா?" என்றான் மணி, அவள் தன்னுடன் வருகிறாளா இல்லையா என்பதைத் தெரிந்துக் கொள்வதற்காக.

"நீங்கள் கேட்பதைப் பார்த்தால் எனக்கு எழுதிய கடிதத்தில் அவர் என்ன எழுதியிருந்தார் என்பது ஏற்கெனவே உங்களுக்குத் தெரியும் போலிருக்கிறதே?" என்றாள் பாமா.

"ஆமாம், அவன் இப்போதெல்லாம் எனக்குத் தெரியாமல் எதையும் மறைப்பதில்லை!" என்றான் அவன்.

''அப்படியானால் நேற்றிரவு அவர் எங்கள் வீட்டுக்கு வந்திருந்ததைக் கூட...''

''ஆமாம், சொன்னான்!''

''அதனால்தான் அவருடைய வீட்டில் அவருக்கு நிம்மதியில்லாமல் போய்விட்டதோ?''

''அப்படியொன்றுமில்லை; அவனுடைய அப்பா இன்னும் கொஞ்சம் பெரிய மனிதராகப் பார்க்கிறார். அதனால்தான் சிக்கல்!''

''அந்தச் சிக்கலில் அவருடைய கல்யாண விஷயமும் சம்பந்தப்பட்டிருக்கிறதா, என்ன?''

''அதுதானேம்மா, எல்லாச் சிக்கலுக்கும் அடிப்படை யாயிருக்கிறது உலகத்தில்!''

''அப்படியென்றால்?''

''சுயநலம் எங்கே ஆரம்பமாகிறதென்று தெரியுமா, உங்களுக்கு? கல்யாணத்தில்தான் ஆரம்பமாகிறது; பேராசை எப்போது பிறக்கிறதென்று தெரியுமா, உங்களுக்கு? பிள்ளை பிறக்கும்போதுதான் அதுவும் பிறக்கிறது!''

''அதனால்தான் நீங்கள் கல்யாணமே வேண்டாம் என்று இருக்கிறீர்களோ?''

''என்னுடையக் கதைக் கிடக்கட்டும்; உங்களுடையக் கதைக்கு வாருங்கள். இப்போது நீங்கள் அவனைப் பார்க்க வரப் போகிறீர்களா, இல்லையா?''

''அவசியமானால் சொல்லுங்கள்; வருகிறேன்!''

''அது எப்படி எனக்குத் தெரியும்? உங்களுக்கு அவசியமென்று தோன்றினால் வாருங்கள்; இல்லாவிட்டால் வேண்டாம்!''

''அவரும் 'விரும்பினால் வா' என்றுதான் எழுதி யிருக்கிறார்; அதனால்தான் கொஞ்சம் யோசிக்கிறேன்!''

''சரி, யோசித்துக் கொண்டே 'பஸ் ஸ்டாப்' வரை வாருங்கள்; அங்கே நீங்கள் எந்த முடிவுக்கு வருகிறீர்களோ, அதே முடிவுக்கு நானும் வந்து விடுகிறேன்!'' என்று சொல்லிக் கொண்டே அவன் நடந்தான்; அவள் அவனைத் தொடர்ந்தாள்.

அப்போது, ''சார்!'' என்று கத்திக்கொண்டே தனக்குப் பின்னால் யாரோ ஓடி வருவது போலிருக்கவே, மணி திரும்பிப் பார்த்தான். சங்கர் இரைக்க இரைக்க வந்து அவனுக்கு முன்னால் நின்று, ''உங்களைக் கைது செய்ய வந்த போலீசார் மோகன் சாரைக் கைது செய்து அழைத்துக்கொண்டு போகிறார்கள், சார்!'' என்றான் பரபரப்புடன்.

''எதற்கு?'' என்று ஒன்றும் புரியாமல் கேட்டான் மணி.

''எல்லாம் அந்தச் சுந்தரின் வேலை, சார்! எங்கிருந்தோ கள்ளத்தனமாகக் கடத்திக்கொண்டு வந்த அபினை அவன் உங்களுக்குத் தெரியாமல் உங்கள் அறையில் போட்டுவிட்டுப் போலீசாருக்குத் தகவல் கொடுத்திருக்கிறான்!''

அவ்வளவுதான்; விஷயம் புரிந்துவிட்டது அவனுக்கு. ''அந்தச் சண்டாளனின் வீடு எங்கே இருக்கிறதென்று தெரியுமா, உனக்கு?'' என்று சங்கரைக் கேட்டான்.

''தெரியாதே, சார்!'' என்றான் அவன்.

''இவ்வளவுதானா நீ? சரி, போ! அதை நானே தெரிந்துக் கொள்கிறேன்!'' என்று சொல்லி அவனை அனுப்பிவிட்டு, சைக்கிள் பெடலின்மேல் காலை எடுத்து வைத்த மணி, ''உங்களை மறந்துவிட்டேனே!'' என்று பாமாவின் பக்கம் திரும்பி, ''நீங்கள் எதற்கும் கவலைப்படாதீர்கள்; நான் பார்த்துக்கொள்கிறேன் அவனை!'' என்று சொல்லிவிட்டுக் காற்றாய்ப் பறந்தான்!

எங்கே-போலீஸ் நிலையத்துக்கு அல்ல; அருணாவின் வீட்டுக்கு!-அவனுடைய முகவரி ஒருவேளை அவளுக்குத் தெரிந்திருந்தாலும் தெரிந்திருக்கலாமல்லவா?

# 28. எதிர்பாராத வரவேற்பு!

சுந்தர்!-அவன்தான் அந்த வலையை விரித்தான் என்பது சங்கருக்கு எப்படித் தெரிந்தது? அவசரத்தில் அதைக் கேட்காமல் வந்துவிட்டோமே!

சட்டென்று சைக்கிளை நிறுத்தி, "சங்கர், சங்கர்!" என்றான் மணி.

"என்ன சார்?" என்றான் அவன், விரைந்து வந்து.

"உன்னை ஒன்று கேட்க மறந்துவிட்டேனே, அவன்தான் அந்தத் துரோக வலையை விரித்தான் என்பது உனக்கு எப்படித் தெரியும்?"

"அவனுடைய அப்பா சுகானந்தம் ஒரு கள்ளக்கடத்தல் பேர்வழி என்பது ஏற்கெனவே தெரியும் எனக்கு. அதற்கேற்றாற் போல் சர்மாஜி வேறு உங்கள்மேல் திடீரென்று அன்பு செலுத்த ஆரம்பித்திருக்கிறார். யார் மேலாவது அவர் அப்படி அன்பு செலுத்துகிறார் என்றால், அந்த அன்புக்குரியவருக்குப் பின்னால் அவர் குழி வெட்டுகிறார் என்று அர்த்தம். இது நான் அனுபவத்தில் கண்ட உண்மை; இவற்றையெல்லாம் வைத்துத்தான்..."

"அப்படியானால் இந்தச் சதியில் அவரும் ஈடுபட்டிருப்பார் என்றா நீ நினைக்கிறாய்?"

"சந்தேகமில்லாமல்; இல்லாவிட்டால் அவரே என்னைக் கூப்பிட்டு இங்கே அனுப்பியிருக்கமாட்டாரே!"

"என்ன! அவரா உன்னை இங்கே அனுப்பி வைத்தார்?"

"ஆமாம் சார், ஆமாம். 'ஓடு, ஓடு, உடனே போய் அவரிடம் விஷயத்தைச் சொல்லு; அப்படியே போலீசாரிடமிருந்து தப்புவதற்காக அவர் கொஞ்ச நாட்கள் தலைமறைவாயிருந்தால் தேவலை என்று சொல்லு; அவருடைய அறையை உடனே வேறு எங்காவது மாற்றிக் கொண்டு விட்டால் அதைவிடத் தேவலை என்றுநான்

சொன்னதாக, அவரிடம் சொல்லு! பாவம், இந்த மாதிரிக் காரியங்களிலும் தனக்கு ஈடுபாடு உண்டு என்று அவர் ஏற்கெனவே என்னிடம் சொல்லியிருந்தால் எத்தனையோ வகையில் அவருக்கு நான் உதவியாயிருந்திருப்பேன்; சொல்லாமல் இருந்துவிட்டார்!' என்று கூட சர்மாஜி என்னிடம் சொன்னார். நான்தான் நீங்களா அவர் சொல்வதையெல்லாம் செய்கிறீர்கள் என்று அவற்றையெல்லாம் உங்களிடம் சொல்லவில்லை!''

''இதிலிருந்து அவர் என்னைக் கள்ளக் கடத்தல் பேர் வழியாகவே ஆக்கிவிட்டார் என்றல்லவாத் தோன்றுகிறது?''

''ஆக்கியதோடு நிற்கவில்லையே! அதற்காக உங்களிடம் அனுதாபம் வேறு காட்டுகிறார் பாருங்கள், அதில்தான் இருக்கிறது அவருக்கே உரித்தான அந்த நரித்தனத்தின் அழகு!''

''என்ன கேவலமான மனிதர்கள், என்ன கேவலமான மனிதர்கள்! இவ்வளவும் எதற்காக? சுலபமாகப் பணம் பண்ணுவதற்காக! இத்தகையவர்களிடம் போய், 'உலகில் அதர்மம் மறைந்து தர்மம் தலை தூக்க வேண்டுமானால் நீங்களும் ஏழைகளைப்போல் மாட மாளிகைகளை மறந்து மண்குடிசை கட்டிக் கொண்டு வாழுங்கள்; நன்செய் தானியங்களை மறந்து புன்செய் தானியங்களைச் சாப்பிடுங்கள்; பட்டாடை நீக்கி பருத்தி ஆடை உடுத்துங்கள்!' என்று சொன்னால் கேட்கவாப் போகிறார்கள்? சட்டத்தைக் கொண்டே இவர்களை வழிக்குக் கொண்டு வர முடியவில்லையென்றால், சன்மார்க்கத்தைக் கொண்டா இவர்களையெல்லாம் வழிக்குக் கொண்டு வந்துவிட முடியப் போகிறது? எனக்குத் தோன்றவில்லை சங்கர், எனக்குத் தோன்றவேயில்லை!''

''அந்தப் பாவிகளுக்காக நீங்கள் வழக்கம்போல் அழ ஆரம்பித்துவிடாதீர்கள், சார்! அதற்கு இது சமயமும் அல்ல. போசாமல் மோகன் சார் அப்பாவிடம் போய் விஷயத்தைச்

சொல்லுங்கள்; அவர் இந்த எத்தன்களுக்கெல்லாம் எத்தன்; அப்பன்களுக்கெல்லாம் அப்பன்! போலீசாருக்கு அவர் ஒரு வார்த்தை 'போ'னில் சொன்னால் கூடப் போதும்; பயபக்தியுடன் அவருடைய மகனைக் கொண்டு வந்து அவர்கள் அவரிடம் ஒப்படைத்துவிடுவார்கள்! அது தெரியாது அந்தப் பயல்களுக்கு; நீங்கள் போங்கள் சார், போங்கள்!'' என்று துரிதப்படுத்தினான் சங்கர்.

அதற்குள் அந்த நிலையைக் கடந்துவிட்ட மணியோ, ''இதுவும் கேவலமாகத்தான் தோன்றுகிறது எனக்கு! ஒரு தனி மனிதன் நினைத்தால் சட்டம் அவனுக்குத் தகுந்தாற்போல் வளைந்துகொடுக்கும் என்ற நிலை இந்த நாட்டில் உள்ளவரை நீதிக்கும் நேர்மைக்கும் இங்கே எப்படி இடம் இருக்க முடியும்?'' என்றான் பெருமூச்சுடன்.

''இதெல்லாம் பொழுது போகாதபோது பேச வேண்டிய பேச்சு; இப்பொழுது வேண்டாம், சார்! நீங்கள் போங்கள்; போய் அவரைப் பாருங்கள்!''

''போகிறேன்! போகாமல் வேறு என்னதான் செய்யப் போகிறேன், வேறு என்னதான் செய்ய முடியப்போகிறது என்னால்?-சரி, இருக்கட்டும் சங்கர்! அந்த மோகன் போலீசாருடன் போனபோது என்னிடம் ஏதாவது சொல்லச் சொன்னானா, உன்னிடம்?''

''இல்லை சார், அவர்களைப் பார்த்ததும் அவர் பேயறைந்தவர்போல் ஆகிவிட்டார்! சர்மாஜி வந்து, 'கவலைப்படாதீர்கள் சார், சந்தேகத்தின்பேரில்தான் உங்களைக் கைது செய்கிறார்கள்; சந்தேகம் தீர்ந்ததும் விடுதலை செய்துவிடுவார்கள்!' என்று 'சமாதான வலை' விரித்தபோதுகூட அவர் முகத்தில் எந்தவிதமான மாறுதலும் இல்லை!''

''அடப் பாவி! அதுவா அவனுடைய பிரச்னையாக இருந்திருக்கும் அப்போது? ஒரு காரணமும் இல்லாமல் தனக்கு நேர்ந்துவிட்ட இந்த அவமானத்தை எப்படித்

துடைத்துக் கொள்ளப் போகிறோம் என்பதல்லவா அப்போதைய பிரச்னையாக இருந்திருக்கும், அவனுக்கு?''

''அதையெல்லாம் அவர் ஏன் சார், கவனிக்கிறார்? அவருக்கு வேண்டியது சுந்தரைப் போன்ற சுகவாசிகள் நட்பு; அந்த நட்பின் மூலம் சுலபமாகப் பணம்; அந்தப் பணத்தை எந்தவிதமான இடைஞ்சலும் இல்லாமல் குவிக்க வேண்டுமானால் உங்களைப் போன்றவர்களை அவர் ஒழித்துக் கட்ட வேண்டும்; அப்படி ஒழித்துக் கட்டும்போது, அவரை இன்னார் என்று நீங்கள் அடையாளம் கண்டுக் கொள்ளாமல் இருக்க வேண்டுமே என்பது அவருடைய கவலை!-அதைத்தான் அவர் கவனிக்க முடியுமே தவிர, மற்றவற்றையெல்லாம் அவர் கவனிக்க முடியுமா?''

''கவனிக்க முடியாதுதான்! நீ போ, நான் வருகிறேன் அவரைக் கவனிக்க!''

மணி கருவிக்கொண்டே, மறுபடியும் சைக்கிளின்மேல் ஏறினான். 'வேடிக்கையான உலகத்திலே இவர் ஒரு வேடிக்கையான சார்!' என்று வழக்கம்போல் சிரித்துக் கொண்டே சங்கர் அவனைத் தொடர்ந்தான்-ஆம், அவர்கள் இருவரும் வெவ்வேறு இடத்தை நோக்கிச் சென்றாலும், அவற்றை அடைவதற்காக அவர்கள் சென்ற திசை ஒரே திசையாயிருந்தது!

'சங்கர்!-எவ்வளவு சுலபமாகச் சொல்லிவிட்டான், மோகனின் அப்பாவைப் போய்ப் பார்க்கும்படி! என்னைப் போன்றவர்கள் அவரைப் போய்ப் பார்ப்பதென்பதுதான் அவ்வளவு சுலபமா? அவருடன் பேசுவதென்பதுதான் அவ்வளவு சுலபமா?

அவருடைய மகன் எனக்கு நண்பனாயிருக்கலாம்; அதற்காக அவரும் எனக்கு நண்பராயிருக்க முடியுமா? இருந்தால், அவர் தனக்கு இருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கும் அந்தஸ்து, அவரைப் பொறுத்தவரையில் கூட இல்லாமலல்லவா போய்விடும்?

அதிலும், ஏழைகளைக் கண்டால் அவருக்குப் பிடிக்காது; அதுதான் போகட்டுமென்றால் யோக்கியர்களைக் கண்டாலும் அவருக்குப் பிடிக்காது!

ஒருவிதத்தில் அயோக்கியர்களை வேண்டுமானால் அவருக்குப் பிடிக்கும்; பணக்காரர்களை வேண்டுமானால் அவருக்குப் பிடிக்கும்!

இந்த வேடிககையான மனிதரை விட்டுவிட்டு, என்னைப் போய் வேடிக்கையான மனிதர் என்று சொல்லிக்கொண்டிருக்கிறானே, இந்த சங்கர்?

இதிலுள்ள இன்னொரு சங்கடத்தை வேறு அவன் மறந்து விட்டான்!-விஷயம் அவருடைய மகனைப் பற்றியதாயிருந்தாலும், அதில் நானுமல்லவா சம்பந்தப் பட்டிருக்கிறேன்; என்னை விட்டுத் தள்ளினாலும் அவருடைய மகள் அருணாவும் அல்லவா அதில் சம்பந்தப்பட்டு இருக்கிறாள்? அதை எப்படி அவரிடம் சொல்வது? சொன்னால் அவளுக்கு நான் தந்த வாக்குறுதி என்ன ஆவது? சொல்லாவிட்டால், சுந்தர் அந்த வலையை ஏன் விரித்தான் என்பதை நான் அவருக்கு எப்படி விளக்குவது?

கடவுளே, அவனைப் பிடித்துக்கொண்டுப் போன பாவிகள் என்னைப் பிடித்துக்கொண்டு போயிருக்கக் கூடாதா? எத்தனையோத் தொல்லைகள் எனக்கு மிச்சமாகியிருக்குமே!

அதைப்பற்றி இப்போது யோசித்து என்ன பிரயோசனம்? உள்ளே போன மோகன் எப்படியாவது வெளியே வர வேண்டும்; அதற்கு அவரை விட்டால் வேறு யாரும் கிடையாதா?

ஆபீசர் பரந்தாமனைப் போய்ப் பார்த்தால் என்ன? அவர் ஜாமீன் கொடுத்தால் அவனை விட்டுவிடுவார்கள். ஆனால், அதற்குப் பிறகு வழக்கு என்று ஒன்று நடப்பதற்கு வேண்டிய ஆயத்தங்களெல்லாம் நடக்குமே, அதைத் தடுக்க முடியுமா அவரால்? அப்படியே தடுப்பதாயிருந்தாலும் அவருக்கு இதெல்லாம் தெரிவதை அவன் விரும்புவானா?

ஒரு நாளும் விரும்பமாட்டான்! ஓட்டலிலேயே பாதி உயிர் போயிருக்கும் அவனுக்கு; அடுத்த பாதி ஆபீசில் போவதை அவன் விரும்புவானா, என்ன?

எதற்கு இதெல்லாம்?-சுந்தருக்கும் எனக்கும் சண்டை; அதற்காக என்னைப் பழி வாங்க எண்ணி அவன் அந்தச் சூழ்ச்சியைச் செய்திருக்கிறான்; அதற்கு நான் இரையாவதற்குப் பதிலாக அவன் இரையாகிவிட்டான் என்று சொல்லிவிட்டால் போகிறது!

'என்ன சண்டை?' என்று கேட்டால்தான் கொஞ்சம் சங்கடமாயிருக்கும்-அதனாலென்ன, அந்தச் சண்டையில் அருணாவைச் சம்பந்தப்படுத்தாமல் யாரோ ஒருத்தி, அல்லது யாரோ ஒருவன் என்று சொல்லிவிட்டால் போகிறது!

இந்தத் தீர்மானத்துக்கு வந்ததும் இன்னொரு சங்கடத்துக்கு உள்ளானான் அவன்!-அந்த வீட்டில் மோகனின் நண்பன் என்ற முறையில் அவனால் அருணாவுடன் பேச முடியும்; அன்னபூரணியம்மாளுடன் பேச முடியும்; ஆபத்சகாயத்துடன் பேச முடியாதே!-அவர் இவனைக் கண்டதும் முகத்தைத் திருப்பிக்கொண்டு விடுவார்; அல்லது, மடமடவென்று மாடி அறைக்குப் போய்விடுவார்! காரணம் வேறொன்றுமில்லை; அவன் யோக்கியன், அத்துடன் ஏழை என்பதுதான்!

அத்தகையவருடன் இன்று தான் எப்படிப் பேச முடியும்? அன்னபூரணியம்மாளிடமோ, அருணாவிடமோ சொல்லி அவரிடம் விஷயத்தைச் சொல்லிவிடச் சொல்வோமா?

அதுதான் சரி!-ஆனால், அந்தப் பயல் ஆபீசுக்குப் போவதாகச் சொல்லிவிட்டு என் அறையில் வந்து படுத்துக்கொண்டு விட்டானே, அதற்கு அவர் என்ன சொல்வாரோ என்னமோ? அதை அவரிடம் சொன்னால் அவன் என்ன நினைப்பானோ, என்னமோ?

அந்தச் சங்கடத்திலிருந்தும் தப்ப வேண்டுமானால் இன்னும் ஏதாவது ஒரு பொய்யின் உதவியைத்தான் நாடவேண்டும் போலிருக்கிறது!-வேறு வழி, நாய் வேடம் போட்டால் குரைத்துத்தானே தீரவேண்டும்?

இந்த முடிவுடன் அவன் துணிந்துஆபத்சகாயத்தின் வீட்டுக்குள் நுழைந்தபோது, அவர் இவனைக் கண்டதும் வழக்கம்போல் முகத்தைத் திருப்பிக் கொள்ளவில்லை; அவனுடன் கீழே இருக்கப் பிடிக்காமல் மேலே போய் விடவும் இல்லை. அகமும் முகமும் ஒருங்கே மலர, ''வா, தம்பி, வா!'' என்று அவனை அன்புடன் வரவேற்று, மாடி அறைக்கு அழைத்துக் கொண்டு போய் உட்கார வைத்துவிட்டு, ''அன்னபூரணி, அன்னபூரணி! தம்பிக்கு ஏதாவது பலகாரம் இருந்தால் கொண்டு வாயேன்?'' என்றார் கனிவுடன், கீழே இறங்கி. இதைக் கேட்ட மணிக்கு எப்படியிருந்ததோ என்னமோ அவன் தலை கிறுகிறுவென்று சுழல, அப்படியே சோபாவில் சாய்ந்துவிட்டான்!

# 29. அணையப் போகும் விளக்குகள்

சிறிது நேரத்துக்கெல்லாம் மேலே வந்த ஆபத்சகாயம் மயக்கமுற்ற நிலையில் இருந்த மணியைக் கண்டதும் திடுக்கிட்டு, ''என்ன மணி, என்ன உடம்புக்கு?'' என்று கேட்டுக் கோண்டே அவன் தோளைப் பிடித்துக் குலுக்கினார்.

''ஒன்றுமில்லையே!'' என்று கண் விழித்த மணி, தனக்கு எதிர்த்தாற்போல் பலகாரமும் கையுமாக நின்ற அன்னபூரணியம்மாளைக் கண்டதும், ''உங்களுக்குச் சேதி தெரியாதா?'' என்றான், தன்னுடைய நிலைக்குத் திரும்பி.

''தெரியுமே! மோகன் அகப்பட்டுக்கொண்டு விட்டானே, அதைத்தானே சொல்கிறாய் நீ?'' என்றார் ஆபத்சகாயம் குறுக்கிட்டு.

''ஆமாம்; அவனை நாம் அங்கிருந்து அழைத்துக் கொண்டு வரவேண்டுமே, அதற்கு என்ன செய்யலாம் என்று கேட்கத்தான் உங்களைத் தேடி வந்தேன் நான்!'' என்றான் மணி.

''அந்தக் கவலை இனி உனக்கு வேண்டாம்! அதற்கு வேண்டிய ஏற்பாடுகளையெல்லாம் நான் செய்துவிட்டேன்; இன்னும் கொஞ்ச நேரத்துக்கெல்லாம் அவன் இங்கே வந்து விடுவான்!'' என்றார் ஆபத்சகாயம்.

''அப்படியா? ரொம்ப மகிழ்ச்சி; நான் வரட்டுமா?'' என்று எழுந்தான் மணி.

''அதற்குள் என்ன அவசரம், உட்கார் அப்பா!'' என்று அவனை மறுபடியும் உட்கார வைத்துவிட்டு, தன் மனைவி அன்னபூரணியம்மாளைக் கீழேப் போகுமாறு அவனுக்குத் தெரியாமல் சாடை காட்டினார் ஆபத்சகாயம்.

தனக்கு முன்னால் பலகாரத் தட்டை வைத்துவிட்டு அந்த அம்மாள் கீழே சென்றதும், ''என்னிடம் நீங்கள் கொண்டுள்ள அன்புக்கு நன்றி! இப்போது நான் எதையும் சாப்பிடக்கூடிய நிலையில் இல்லை; வருகிறேன்!'' என்று மறுபடியும் எழுந்தான் மணி.

''வந்ததே வந்தாய்; மோகன் வந்த பிறகு அவனையும் பார்த்துவிட்டுத்தான் போயேன்!'' என்றார் ஆபத்சகாயம், அவனை எப்படியாவது அங்கே சிறிது நேரம் தங்க வைக்க வேண்டுமே என்பதற்காக.

''எனக்கும் அவனைப் பார்க்க வேண்டும்போல்தான் இருக்கிறது; ஆனால் அதற்கு முன்னால் வேறொருவரை நான் உடனே பார்க்கவேண்டியிருக்கிறது!''

''யாரை, சர்மாஜியையா?''

''ஆமாம்; அவரையும் உங்களுக்குத் தெரியுமா?''

''ஏன் தெரியாது? என்னைப் போன்ற போலீஸ் அதிகாரிகளுக்கு அவரைப் போன்றவர்கள்தானேப்பா, பொன் முட்டை இடும் வாத்துக்கள்!''

''அப்படியா? அந்த வாத்து இனி எந்த முட்டை இட்டாலும் அது உங்களுக்குப் பயன்படப்போவதில்லை; ஏனெனில் அதைப் பயன்படுத்திக் கொள்ளக்கூடிய பதவியில் தற்போது நீங்கள் இல்லை. ஆகவே...''

''ஆகவே என்ன?''

''யாரோ ஒரு பேராசை பிடித்தக் குடியானவன் செய்தது போல நானும்...''

''அதன் வயிற்றை அறுத்துப் பார்க்கப் போகிறாயா?''

''இல்லை; அதன் கழுத்தைக் கிள்ளி எறியப் போகிறேன்!''

''அடப் பாவி! அப்படியானால் அந்தப் பேராசை பிடித்த குடியானவனுக்கும் உனக்கும் என்ன வித்தியாசம் இருக்கப் போகிறது? ஒரு வித்தியாசமும் இருக்கப்போவதில்லை!- பேசாமல் நான் சொல்வதைக் கேள்; நீயும் மோகனும் எனக்குத் தெரியாமல் இதுவரை செய்து வந்த அந்தத் தொழிலுக்கு...''

''எந்தத் தொழிலுக்கு?''

''அதுதான் கள்ளத்தனமாக அபினைக் கடத்தும் தொழிலுக்கு!''

''நீங்களுமா அதை நம்புகிறீர்கள்?''

ஆபத்சகாயம் சிரித்தார்; சிரித்துவிட்டுக் கேட்டார்:

''இன்னுமா நீங்கள் அதை எனக்குத் தெரியாமல் மறைக்கப் பார்க்கிறீர்கள்?''

இதைக் கேட்டவுடன் மணியும் சிரித்தான்; சிரித்து விட்டுச் சொன்னான்:

''நாய் விற்ற காசு சிலருக்குக் குரைக்காமல் இருக்கலாம்; அந்தச் சிலரில் ஒருவனாக என்னையும் தயவு செய்து நினைத்து விடாதீர்கள்!''

''உன்னை மட்டுமா நினைக்கிறேன், என்னுடைய மகன் மோகனையும் சேர்த்துத்தானே நினைக்கிறேன்?-சும்மா

சொல்லு, அபின் மட்டும்தான் கடத்துகிறீர்களா? இல்லை, தங்கம், வைரம் ஏதாவது...''

''அடக் கடவுளே, இது என்ன சோதனை! எங்களுக்கு அதைப்பற்றியெல்லாம் ஒன்றுமே தெரியாதே?''

''இப்படிச் சொன்னால் அதை நான் நம்பிவிடுவேன் என்று நினைக்கிறாயா? பயப்படாதேப்பா, பணம் பத்தும் செய்யும் என்றால், அந்தப் பணத்தைச் செய்யப் பதினொன்றும் செய்ய வேண்டும் என்று நினைப்பவன் நான்! என்னிடம் ஏன் உங்களுக்குப் பயம்? உண்மையில், நீங்கள் இருவரும் அந்தத் தொழிலில் ஈடுபட்டு இருக்கிறீர்கள் என்று தெரிந்ததும் எனக்கு எவ்வளவு மகிழ்ச்சியாயிருந்தது, தெரியுமா?''

''என்ன! மகிழ்ச்சியாகவா இருந்தது, உங்களுக்கு?''

''இல்லாமல் என்னவாம்? சில முட்டாள் தகப்பனார் களைப் போல என்னையும் கோபம் கொள்ளச் சொல்கிறாயா, நீ?''

''அப்படியானால் நாங்கள் எங்கேயாவது போய், எதையாவது திருடிக்கொண்டு வந்தால் கூட...''

''அகப்படாமல் திருடிக்கொண்டு வருவதாயிருந்தால் அதையும் நான் வரவேற்கத் தயாராய்த்தான் இருப்பேன்! ஏனெனில், எதைச் செய்தாலும் நம்முடைய அந்தஸ்து குறைந்துவிடக்கூடாது, பார்!''

''அதாவது, பக்தன் தாசி வீட்டுக்குப் போனாலும் அவனுடைய மனம் பகவானிடத்தில் இருந்தால் சரி என்கிறீர்கள்; அப்படித்தானே?''

''ஆமாம், ஆமாம். பக்தனுக்குப் பகவான் எப்படியோ, அப்படித்தான் நமக்கு அந்தஸ்தும். எதைச் செய்தாலும் அதற்குப் பங்கமில்லாமல் செய்ய வேண்டும். இப்போது கூடப் பார், ஏற்கெனவே நீங்கள் அந்தத் தொழிலிலும் ஈடுபட்டிருக்கிறீர்கள் என்று எனக்குத் தெரிந்திருந்தால்

இந்தச் சங்கடம் உங்களுக்கு வந்திருக்கவே வந்திருக்காது. அதைத்தானே சர்மாஜியும் சொல்கிறார், எனக்குத் தெரிந்திருந்தால் கூட வெள்ளம் வருவதற்கு முன்னால் அணை போட்டிருப்பேன் என்று!''

''போடுவார், போடுவார்! ஏன் போடமாட்டார்? எல்லாம் அந்த அயோக்கியரால் வந்த வினைதானே?''

ஆபத்சகாயம் மறுபடியும் சிரித்தார்; சிரித்துவிட்டுச் சொன்னார்:

''யோக்கியராவது, அயோக்கியராவது! பணமிருந்தால் இந்த உலகத்தில் யாரும் யோக்கிராயிருக்க மாட்டார்கள்; அயோக்கியராய்த்தான் இருப்பார்கள். ஏனெனில் 'சுகம்' என்று ஒன்று இருக்கிறதே, அது 'யோக்கிய'ருக்குக் கிட்டுவது இல்லை. எட்டுவதுமில்லை; அயோக்கியருக்குத்தான் அது கிட்டவும் கிட்டுகிறது, எட்டவும் எட்டுகிறது!''

''இருக்கலாம்; ஆனால் நீங்கள் சுகம் என்று நினைப்பது எனக்குத் துக்கமாகவும், நான் சுகம் என்று நினைப்பது உங்களுக்குத் துக்கமாகவும் இருந்தாலும் இருக்கலாம் அல்லவா?''

என்ன காரணத்தாலோ இதற்கு நேரிடையாகப் பதில் சொல்லாமல், ''ஓ, நீ அந்தக் கட்சியைச் சேர்ந்தவனா?'' என்று இழுத்தார் ஆபத்சகாயம்.

''எந்தக் கட்சியைச் சேர்ந்தவன் என்கிறீர்கள்?'' என்று அவர் கேட்டதையே அவரிடம் திருப்பிக் கேட்டான் மணி.

''அதுதான் சோற்றுக்கில்லாத பயல்களெல்லாம் ஒன்று சேர்ந்து 'சோசலிசம். சோசலிசம்' என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்களே, அந்தக் கட்சியைச் சேர்ந்தவனா நீ என்று கேட்கிறேன்!''

''ஆமாம்; ஆனால் சோற்றுக்கு இருக்கும் பயல்கள் கூட இப்போது அதைப்பற்றி பேச ஆரம்பித்துவிட்டார்கள் என்பது

உங்களுக்குத் தெரியாதுபோல் இருக்கிறது! ஏனெனில் அவர்களும் புரிந்துகொண்டு விட்டார்கள், இன்றில்லா விட்டாலும் என்றாவது ஒருநாள் அது யார் தடுத்தாலும் நிற்காமல் இந்த உலகம் முழுவதும் வந்தே தீரும் என்பதை!''

''உனக்குத் தெரியாது, தம்பி! சோற்றுக்கு இல்லாதவன் சோசலிசம் பேசுவதற்கும், சோற்றுக்கு இருப்பவன் சோசலிசம் பேசுவதற்கும் எவ்வளவோ வித்தியாசம் இருக்கிறது. உதாரணமாக, சோற்றுக்கு இல்லாதவன் சோசலிசம் பேசுவதோடு நிற்கமாட்டான்; தன்னிடம் இரண்டு சட்டைகள் இருந்தால் கூட, அவற்றில் ஒன்றை எடுத்து இல்லாதவனுக்குக் கொடுத்து விடுவான். சோற்றுக்கு இருப்பவனோ அப்படிக் கொடுக்க மாட்டான்; கொடுக்காததோடு, அப்படிக் கொடுப்பதால் சோசலிசம் வந்துவிடாதென்றும், ஏனெனில் தனிப்பட்ட ஒருவன் முயற்சியால் அது கொண்டு வந்துவிடக் கூடியதல்ல வென்றும் காரண காரியங்களெல்லாம் காட்டிச் சாங்கோ பாங்கமாகப் பேசுவான்; அந்தப் பேச்சைக் கொண்டே அதனால் தான் அடையக்கூடிய ஆதாயங்களையெல்லாம் அடைந்துகொண்டே வருவான். நீயும் மோகனும் கூட இந்த இரண்டாவது வகை சோசலிஸ்ட்டுகளாய்த்தான் இருப்பீர்கள் என்று நான் நினைக்கிறேன். இல்லாவிட்டால் அந்தத் தொழிலில் நீங்கள் ஈடுபட்டிருக்க மாட்டீர்கள் அல்லவா? என்ன, நான் நினைப்பது சரிதானே?'' என்று கேட்டுவிட்டுத் தன் கண்களைச் சிமிட்டினார் ஆபத்சகாயம்.

எப்படி இருக்கும் மணிக்கு?-அவன் மறுபடியும் சிரித்தான்; சிரித்துவிட்டுச் சொன்னான்:

''என்ன சொன்னாலும் நீங்கள் எங்களை நம்பவே மாட்டீர்கள் போலிருக்கிறது!''

''கையும் களவுமாக அகப்பட்டுக்கொண்டப் பிறகுமா என்னை நம்பச் சொல்கிறீர்கள், உங்களை? சும்மா சொல்லப்பா? உன்னை எதற்காக இவ்வளவு தூரம் நான்

வற்புறுத்திக் கேட்கிறேன், தெரியுமா? எனக்குத் தெரிந்த நண்பர் ஒருவருக்குப் பெரிய ஏற்றுமதி இறக்குமதி வியாபாரி என்று பெயர்; ஆனால் அவர் செய்வதெல்லாம் கள்ளக் கடத்தல் வியாபாரம்தான்! அதையும் அவர் சிறிய அளவில் செய்யவில்லை; பெரிய அளவில் செய்கிறார். அதனால் பணம் அவரிடம் என்ன பாடு படுகிறது தெரியுமா? தண்ணீர் படும்பாடு படுகிறது; அந்தப் பணத்தைக் கொண்டு கடவுள் ஒருவரைத்தான் அவரால் விலைக்கு வாங்க முடியவில்லை; மற்றவர்களையெல்லாம் வாங்கிவிட முடிகிறது! எப்படி வாழ்கிறார் மன்னன்? மன்னன் என்றால் மன்னன்தான்; அசல் மன்னன் கூட அந்தப் போலி மன்னனைப்போல் வாழ முடியாதுபோல் இருக்கிறது!''

இதைக் கேட்டதும் பற்களை 'நறநற'வென்று கடித்தபடி ''வாழட்டும், வாழட்டும்; அணையப்போகும் விளக்கு சுடர் விட்டு எரிவது இயற்கைதானே? எரியட்டும், எரியட்டும்!'' என்றுக் குமுறினான் மணி.

''இப்படியெல்லாம் பேசி நீங்கள் வேறு, நான் வேறு என்று ஆக்கிவிடாதீர்கள்; என்னையும் உங்களுடன் சேர்த்துக் கொள்ளுங்கள்!'' என்றார் ஆபத்சகாயம், அப்பொழுதும் அவனை விடாமல்!

''என்னைப் போன்ற இளைஞர்கள் தவறானக் காரியத்தில் ஈடுபடும்போது அதைத் தடுக்க வேண்டியவர் நீங்கள்; அப்படிப்பட்ட நீங்களே இப்படியெல்லாம் பேசுவது எனக்கு எவ்வளவு வருத்தமாயிருக்கிறது, தெரியுமா?'' என்றான் அவன், உண்மையான வருத்தத்துடன்.

ஆனால் அவரோ அதையும் போலியாக எண்ணி, ''எதைத் தடுக்கச் சொல்கிறாய் என்னை? மூதேவி வாசம் செய்யும் இந்த வீட்டில் சீதேவி வாசம் செய்ய வருகிறாளே, அவளையா தடுக்கச் சொல்கிறாய் என்னை? அது என்னால் முடியவே முடியாது!'' என்று தன் தலையை 'நயம்பட' ஆட்டினார்!

மணியால் பொறுக்க முடியவில்லை; ''முடியா விட்டால் போங்கள், நான் வருகிறேன்!'' என்று அவர் முகத்தில் அடித்தாற்போல் சொல்லிவிட்டு எழுந்தான்.

இந்த மாதிரி சந்தர்ப்பங்களில் ஆபத்சகாயத்துக்குக் காரியம்தான் பெரிதாகத் தோன்றுமே தவிர, வீரியம் பெரிதாகத் தோன்றாது. எனவே அப்போதும் அவர் அடக்கத்துடன், ''உட்கார், அப்பா! பலகாரம் சாப்பிடா விட்டாலும் காபியாவது சாப்பிட்டுவிட்டுப் போயேன்!'' என்று சொல்லி, அவனை மீண்டும் உட்கார வைக்கப் பார்த்தார். அவன் உட்காரவில்லை; அதற்குள் ஏதோ சிந்தனை வயப்பட்டவனாக நின்றது நின்றபடியே இருந்தான்.

''சரி, காபிதானே? எப்படிச் சாப்பிட்டால் என்ன, நின்று கொண்டேதான் சாப்பிடேன்!'' என்று சொல்லி அதையும் சமாளித்துவிட்டு, ''அன்னபூரணி! ஏ, அன்னபூரணி!'' என்று மேலே இருந்தபடியே குரல் கொடுத்தார் அவர்.

''என்ன, வரலாமா?'' என்றாள் அவள், கீழே இருந்தபடி.

''வா, வா! காபியை எடுத்துக்கொண்டு மேலே வா, சீக்கிரம்!'' என்றார் அவர்.

# 30. உண்மை ஓர் அனாதை!

மனிதன் விசித்திரமானவன்; அவனைவிட விசித்திர மானது அவனுடைய உள்ளம். இந்த இயற்கை நியதியை ஒட்டியோ என்னமோ, ஆபத்சகாயத்தின்மேல் கொண்ட ஆத்திரம் சிறிது நேரத்துக்கெல்லாம் அனுதாபமாக மாறிற்று மணிக்கு. அந்த அனுதாபத்தின் காரணமாக அவர் கொடுத்த காபியை வேண்டா வெறுப்பாகக் குடித்துவிட்டு அவன் கீழே இறங்குவதற்கும், மோகன் மேலே வருவதற்கும் சரியாயிருந்தது.

''வா, மோகன்! எனக்காக விரித்த வலையில் நீ விழுந்து விட்டதற்காக நான் மிகவும் வருந்துகிறேன்; எதிர்பாராமல் நடந்துவிட்ட இந்த விபரீதத்துக்காக என்மேல் நீ கோபம் கொண்டிருக்க மாட்டாய் என்று நினைக்கிறேன். என்ன, நான் நினைப்பது சரிதானா?'' என்றான் மணி, அவனையே இமை கொட்டாமல் கவனித்தபடி.

''நடந்தது நடந்துவிட்டது; அதற்கென்ன இப்போது?'' என்றான் அவன் சோர்வுடன்.

அவன் அளித்த பதில் மணிக்கு திருப்தி அளிக்கவில்லை. ஆகவே, ''சரி, வருகிறேன்!'' என்றான் அவனும் சோர்வுடன்.

''எங்கே வந்தாய், எங்கேப் போகிறாய்?''

''உனக்காகத்தான் உன் அப்பாவைப் பார்க்க வேண்டு மென்று வந்தேன். நான் வருவதற்குள் அவர் உனக்காகச் செய்ய வேண்டிய ஏற்பாட்டையெல்லாம் செய்து விட்டிருந்தார்; நீயும் வந்து சேர்ந்துவிட்டாய். இனி எனக்கு என்ன வேலை இங்கே? நான் வருகிறேன்!'' என்று நடையைக் கட்டினான் மணி.

''நில்; நானும் வருகிறேன்!'' என்றான் மோகன்.

''நீ வருவதாயிருந்தால் இங்கிருந்து நான் போக மாட்டேன்!''

''ஏன்?''

''இப்போது நான் தனியாகப் போக வேண்டும்!''

''அப்படிப் போக வேண்டாம் என்பதற்காகத்தான் நானும் வருகிறேன் என்கிறேன்!''

''ஏன், என்ன நடந்தது அங்கே?''

''அங்கே நடந்தது ஒரு பக்கம் இருக்கட்டும்; இப்போது நீ ஓட்டலுக்குத்தானே போகப்போகிறாய்?''

''ஆமாம்!''

''அங்கே போவதில் பிரயோசனமில்லை; ஏனெனில் சர்மாஜி அங்கே இருக்கமாட்டார்!''

''வேறு எங்கே போயிருப்பார்?''

''யாருக்குத் தெரியும், அங்கே உனக்காகப் போலீசார் காத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பது மட்டும்தான் எனக்குத் தெரியும்!''

''எதற்கு, என்னைக் கைது செய்வதற்குத்தானே? அதனாலென்ன, நீதி என் பக்கம் இருக்கும்போது எனக்கு என்ன பயம்?''

''அதனால்தான் பயப்பட வேண்டும் என்கிறேன் நான்! இன்று எந்த நீதி என்னைக் கைது செய்தது, எந்த நீதி என்னை விடுதலை செய்தது? அதெல்லாம் சும்மா; நீ வா, இப்படி!''

''உண்மைதான்! இன்று எந்த நீதி உன்னைக் கைது செய்தது, எந்த நீதி உன்னை விடுதலை செய்தது?''

அவன் சொன்னதைத் திருப்பிச் சொல்லிக்கொண்டே அவனை நோக்கி வந்தான் மணி.

மோகன் அவன் முதுகைத் தட்டிக் கொடுத்து, ''உனக்காக விரித்த வலையில் நான் விழுந்துவிட்டதற்காக நீ வருத்தப்பட்டாயல்லவா? நான் வருத்தப்படவில்லை; மகிழ்ச்சியடைகிறேன்!'' என்றான் தன் சோர்வை உதறித் தள்ளி.

மணி அவனை ஏற இறங்கப் பார்த்தான்-சிறிது நேரத்துக்கு முன்னால், 'நடந்தது நடந்துவிட்டது; அதற்கென்ன இப்போது?' என்று சொன்னவனா இவன்?-ஒன்றும் புரியவில்லை அவனுக்கு; மோகனைப் பார்த்தது பார்த்தபடி நின்றான்.

மோகன் தொடர்ந்து சொன்னான்:

''ஆம், மணி! அது மட்டுமல்ல; நீ வாழ்வதற்காக நான் சாவதற்குக் கூடத் தயாராகிவிட்டேன், இப்போது!''

மணி சிரித்தான்; சிரித்துவிட்டுச் சொன்னான்:

''நான் வாழ்வதற்காகப் பிறர் சாவதைவிட, பிறர் வாழ் வதற்காக நான் சாவதைத்தான் என் உள்ளம் விரும்புகிறது!''

இந்தச் சமயத்தில், ''வாழ்வதில் விருப்பம் காட்டாதீர் கள்; சாவதிலேயே விருப்பம் காட்டுங்கள்!'' என்று யாரோ முணுமுணுப்பது அவர்கள் காதில் விழுந்தது. இருவரும் திரும்பிப் பார்த்தார்கள்; ஆபத்சகாயம் அவர்களுக்குப் பின்னால் நின்றுகொண்டிருந்தார்.

''வாருங்கள் அப்பா! இன்று காலை இந்த வீட்டை விட்டுப் போகும்போது இவ்வளவு சீக்கரம் நான் இங்கே திரும்பி வருவேன் என்று நினைக்கவில்லை!' என்றான் மோகன், அவரைக் கண்டதும்.

''வேறு எங்கே போவதாக இருந்தாய்?'' என்று அவர் கேட்டார்.

''அதைப் பற்றி நான் ஒரு முடிவுக்கு வருவதற்குள்தான் இவன் என்னை இங்கே வரும்படி செய்துவிட்டானே?'' என்றான் அவன், மணியைச் சுட்டிக் காட்டி.

''என்னடா கதைக்கிறீர்கள்? என்னிடம் உண்மையை ஒப்புக்கொள்ள வேண்டுமென்ற உத்தேசமே உங்களுக்கு இல்லைபோலிருக்கிறது!''

''எந்த உண்மையை?''

''அதுதான், அந்தத் தொழிலில் நீங்கள் ஈடுபட்டிருக்கும் உண்மையை!''

''எந்தத் தொழிலில்?''

மணி குறுக்கிட்டான்; குறுக்கிட்டுச் சொன்னான்:

''சாட்சிக்கு போலீசார் வேறு யாரையும் பிடிக்க வேண்டியதில்லை; இவரைப் பிடித்தால் போதும்!''

இப்போதுதான் மோகனுக்கு விஷயம் புரிந்தது; ''ஏன், இவரே அந்தத் தொழிலில் நாம் ஈடுபட்டிருப்பதாகச் சொல்கிறாரா?'' என்றுக் கேட்டான்.

''ஆமாம். அத்துடன் நிற்கவில்லை; அந்தத் தொழிலில் தானும் கலந்துகொள்வதாகச் சொல்லி, இவர் நம்மை உற்சாகப்படுத்துகிறார்; ஊக்கப்படுத்துகிறார். பாழும் பணம் இன்னும் கொஞ்ச நாட்களில் இவரைப் பைத்தியமாகவே ஆக்கிவிடும் போலிருக்கிறது!'' என்றான் மணி, அவர் தன்னைப்பற்றி என்ன நினைத்தாலும் நினைக்கட்டும் என்று துணிந்து.

ஆபத்சகாயம் வாய் விட்டுச் சிரித்தார்; மனம் விட்டுச் சொன்னார்:

''உங்கள் வயதில் நானும் உங்களைப் போல் பேசிக்கொண்டிருந்தவன்தான்! வயது ஆக ஆகத்தான் அந்த நாளில் அப்படிப் பேசிக்கொண்டிருந்ததெல்லாம் அபத்தம் என்றுத் தோன்றுகிறது எனக்கு. ஏனெனில் இந்த உலகத்தில் பணம் இல்லாமல் எதையுமே அடைய முடிவதில்லை; அப்படியே அடைந்தாலும் அதை நிரந்தரமாக அனுபவிக்க முடிவதில்லை. இதற்கு உதாரணம் ஒன்றல்ல, இரண்டல்ல; எத்தனையோக் காட்ட முடியும் என்னால். அதனால்தான் சொல்கிறேன். உங்கள் பெற்றோர் உங்களை நேசிக்க வேண்டுமா? முதலில் பணத்தைத் திரட்டுங்கள்; உங்கள் சகோதரர்கள் உங்கள் மேல் பாசம் கொள்ள வேண்டுமா? முதலில் பணத்தைத் திரட்டுங்கள்; உங்கள் மனைவி உங்களைக் கண்டதும் புன்னகை பூக்க வேண்டுமா? முதலில் பணத்தைத் திரட்டுங்கள்; உங்கள் சமூகம் உங்களை மதிக்க வேண்டுமா? முதலில் பணத்தைத் திரட்டுங்கள்; உங்கள் அரசாங்கம் உங்களை ஒருப் பொருட்டாக நினைக்க வேண்டுமா? முதலில் பணத்தைத் திரட்டுங்கள்! அதை இன்று நீங்கள் பொருட்படுத்தாவிட்டால், அதை இன்று நீங்கள் போற்றிப் புகழாவிட்டால், நாளை அது உங்களைப் பொருட்படுத்தாது; நாளை அது உங்களைப் போற்றிப் புகழாது!''

''இருக்கட்டுமே, அதனாலென்ன? அந்தப் பணத்தைத் திரட்ட எத்தனையோ நேர் வழிகள் இருக்கும்போது, குறுக்கு வழிகளில் ஏன் கவனம் செலுத்த வேண்டும்?''

''பணம் ஒருநாளும் நேர் வழியில் வருவதில்லை; குறுக்கு வழியில்தான் வருகிறது. அதற்கேற்றாற்போல் சமூகமும் உங்களிடம் பணம் இருக்கிறதா என்றுதான் கவனிக்குமே தவிர, அந்தப் பணம் எப்படி வந்தது என்று கவனிக்காது, வேறு யாராவது கவனித்து அது அப்படி வந்தது, இது இப்படி வந்தது' என்று சொன்னாலும் அப்படிச் சொல்பவர்கள் பொறாமையால் சொல்கிறார்கள் என்றுதான் அதுசொல்லுமே தவிர, அதற்காக அது உங்களைப் போற்றிப் புகழ்வதை விட்டு விடாது!''

''என்ன இருந்தாலும் 'உண்மை' என்று ஒன்று இருக்கிறது, பாருங்கள்! அதை யாராலும் அழிக்க முடியாதல்லவா?''

''அழிக்க முடியாதுதான்; ஆனால் அதற்காக அதை யாராலும் வளர்க்க முடியாது!''

''ஏன்?''

''வீண் செலவு! அதனால்தான் அந்த உண்மை ஆதரிப்பார் யாரும் இல்லாமல் அனாதைக் குழந்தைபோல அழுத கண்ணும் சிந்திய மூக்குமாக இந்த உலகத்தில் அலைந்து கொண்டிருக்கிறது. அவ்வப்போது தோன்றும் மகான்களில் சிலர், அதனிடம் அனுதாபம் கொண்டு அதை எடுத்துப் பொதுப் பணத்தில் வளர்க்கிறார்கள்! அவர்கள் உள்ளவரை அது நம் கவனத்தைக் கவருகிறது; அவர்கள் மறைந்ததும் அதுவும் நம் கவனத்தை விட்டு மறைந்துவிடுகிறது!''

''அழகாகப் பேசுகிறீர்கள்! ஆனாலும் உழைப்பில் நம்பிக்கை உள்ளவர்கள் நாங்கள்; உழைப்பே செல்வம் என்று நினைப்பவர்கள் நாங்கள். எங்களிடம் உங்களுடைய உபதேசம் எடுபடாது!''

''யார் இல்லை என்கிறார்கள்? உழைப்பு நல்லதுதான் உங்கள் உடம்புக்கு; உழைப்பே செல்வம்தான், உங்கள் உழைப்பின் பலனை அனுபவிப்பவர்களுக்கு! நான் அதைப் பற்றியும், அவர்களைப் பற்றியும் பேசவில்லையே? உங்களைப் பற்றியும் உங்களுடைய செல்வத்தைப் பற்றியுமல்லவா பேசுகிறேன்?''

''பேசுங்கள், பேசுங்கள்; என்னப் பேசினாலும் நீங்கள் சொல்லும் குறுக்கு வழியில் நாங்கள் இறங்கப் போவதேயில்லை!''

''இறங்கிய பிறகு இறங்கப் போவதேயில்லை என்று என்னிடம் ஏன் சாதிக்கிறீர்கள்? இவனுக்குத்தான் நான் அப்பாவேத் தவிர, உனக்கு நான் அப்பா இல்லையே? இவன் அதை என்னிடம் சொல்லப் பயந்தாலும், நீ அதை என்னிடம் தைரியமாகச் சொல்லலாமே?''

''ஏற்கெனவே நான் சொல்ல வேண்டியதையெல்லாம் சொல்லிவிட்டேன்; அதற்குமேல் என்ன சொல்வதென்று எனக்கு ஒன்றுமே புரியவில்லை!'' என்றான் மணி, அலுப்புடன்.

''போடா, போ! எதைச் சொல்ல வேண்டுமோ, அதை நீ இதுவரை அவரிடம் சொல்லியிருக்கமாட்டாய்; அதைச் சொல்வது உன்னைப்பற்றி நீயே பெருமையடித்துக் கொள்வதாயிருக்கும் என்று நீ நினைத்திருப்பாய்!-விஷயம் இதுதான் அப்பா! கள்ளக்கடத்தல் கூட்டத்தைச் சேர்ந்த யாரோ ஒருவன், ஒரு நாள் ஒரு பெண்ணை ஏமாற்றி ஓட்டல் அறைக்கு அழைத்துக்கொண்டு வந்து அவளுடைய சம்மதமில்லாமல் அவளைக் கெடுக்கப் பார்த்திருக்கிறான்; இவன் அதில் தலையிட்டு அந்தப் பெண்ணை அவனிடமிருந்து காப்பாற்றியிருக்கிறான்; அது பிடிக்க வில்லை அவனுக்கு; அதற்காக இவனை நேருக்கு நேராக எதிர்த்து நிற்கவும் முடியவில்லை அவனால்; ஆகவே சர்மாஜியின் உதவியுடன் அவன் இவனுக்காக அங்கேக்

கண்ணி வைத்திருக்கிறான்; அந்தக் கண்ணியில் அவன் சிக்குவதற்குப் பதிலாக நான் சிக்கிக் கொண்டிருக்கிறேன்; அவ்வளவுதான் விஷயம்!-இப்பொழுதாவது புரிந்ததா, உங்களுக்கு?'' என்றான் மோகன், மணியைப் பின்னால் தள்ளிவிட்டு அவனுக்கு முன்னால் தான் வந்து நின்று.

அவன் சொன்னதையும் அவர் நம்பவில்லை; ''என்ன கதை இதெல்லாம்?'' என்றார் நகைப்புடன்.

அப்போது அந்த வீட்டு வாசலில் கார் ஒன்று வந்து நின்றது. அந்தக் காரிலிருந்து இறங்கி வந்த வாலிபன் ஒருவன், ''ஆபத்சகாயத்தின் வீடு இதுதானே?'' என்றான், ஆபத்சகாயத்தை நோக்கி.

''என் பெயர் சுந்தர்; சுகானந்தத்தின் மகன்...''

அவன் முடிக்கவில்லை; அதற்குள் அவன் மேல் பாய்ந்து விட்டான் மணி!

அவ்வளவுதான்; வேங்கையின் வாயில் சிக்கிய ஆட்டுக்குட்டிப் போல் அலறினான், அவன்!

# 31. எங்கே சர்மாஜி?

''ஏய் மணி, ஏய் மணி!''

அதட்டினார் ஆபத்சகாயம்-அவன் அதைக் காதில் வாங்கிக்கொள்ளவும் இல்லை; அவரை நோக்கித் திரும்பவும் இல்லை. பசி வேளையில் பருந்துக்குக் கிடைத்த கோழிக் குஞ்சு போல் தனக்குக் கிடைத்த சுந்தரை அவன் தன் ஆத்திரம் தீரும் வரை அடித்து நொறுக்கிவிட்டு, ''இப்போது கூப்பிடு உன் போலீசை; சந்தோஷமாகக் கையை நீட்டுகிறேன், என்னைக் கைது செய்து கொள்ள!'' என்று கத்தினான்!

சுந்தரோ, உருண்டு புரண்டு எழுந்த நிலையில், ஓர் அடி கூட ஆடாமல் அசையாமல் எடுத்து வைக்க முடியாமல்

தட்டுத் தடுமாறி வந்து அவன் காலடியில் விழுந்தான். வழியில் அடிபட்டு விழுந்த நாயை ஒரு பக்கமாக இழுத்து விடுவது போல் அவனை இழுத்து அப்பால் விட்டுவிட்டு, ''நான் வருகிறேன். எனக்காகப் போலீசார் மட்டும் அங்கே காத்துக் கொண்டிருக்க மாட்டார்கள்; சர்மாஜியும் காத்துக்கொண்டிருப்பார்!'' என்று விரைந்தான் மணி.

அவன் சென்ற திசையையே ஒரு கணம் பார்த்துக் கொண்டிருந்த ஆபத்சகாயம், ''இந்த மாதிரிப் பயல்களுட னெல்லாம் நீ சேரவே கூடாது, மோகன்! இவனால் எந்தச் சமயத்திலும் உனக்கு ஆபத்து நேரலாம்!'' என்றார் மறுகணம் தன் மகனின் பக்கம் திரும்பி.

''ஆபத்து அவனால் நேரவில்லை; இதோ இருக்கிறானே, இவனால்தான் நேர்ந்தது!'' என்றான் அவன், கீழே விழுந்துக் கிடந்த சுந்தரை சுட்டிக் காட்டி.

''அப்படி என்ன ஆபத்து நேர்ந்துவிட்டது, இவனால். யாரோ ஒருத்தியைத்தானே இவன் ஓட்டல் அறைக்கு அழைத்துக்கொண்டு வந்தான், உங்கள் வீட்டுப் பெண்ணை இல்லையே?'' என்றார் அவர், கொஞ்சம் காரசாரமாக.

''இங்கேதான் மணிக்கும் மற்றவர்களுக்கும் உள்ள வித்தியாசத்தை நான் காண்கிறேன். ஏனெனில், உங்களைப் போல் அவன் நினைப்பதில்லை; இந்த உலகத்திலுள்ள அத்தனைப் பெண்களையுமே அவன் தன் வீட்டுப் பெண்களாக நினைக்கிறான்!'' என்றான் அவன், அப்போதும் அமைதியாக.

''நினைப்பான், நினைப்பான்; உடம்பில் திமிர் உள்ளவரை அப்படித்தான் நினைப்பான். இன்னொரு முறை அவன் இங்கே வரட்டும்; அவனை நான் பார்த்துக்கொள்ள வேண்டிய விதத்தில் பார்த்துக் கொள்கிறேன்!''

''இவனும் அப்படித்தான் சொன்னான், அவனைப் பார்த்துக் கொள்ளவேண்டிய விதத்தில் பார்த்துக்

கொள்கிறேன் என்று; அதன் பலனைத்தான் இப்போது அனுபவித்துக்கொண்டிருக்கிறான்!''

''என்னடா! நீயே மிரட்டுகிறாயா, என்னை?''

''இல்லை; எச்சரிக்கிறேன்!''

''எதற்கு?''

''எப்போதும் நல்லவர்களின் பக்கத்தில் நில்லுங்கள்; அது உங்களுக்கும் நல்லது, உலகத்துக்கும் நல்லது. கெட்டவர்களின் பக்கத்தில் நிற்காதீர்கள்; அது உங்களுக்கும் கெட்டது, உலகத்துக்கும் கெட்டது!''

தன் மகனா தன்னைப் பார்த்து இப்படிப் பேசுகிறான்? -ஆபத்சகாயத்தால் நம்ப முடியவில்லை; அவனை மேலும் கீழுமாகப் பார்த்தார்.

அதற்குள் ஒரு வாடகைக்காரில் மீண்டும் அங்கே வந்து இறங்கிய மணி, ''அவசரத்தில் எதை முதலில் செய்ய வேண்டுமோ, அதைச் செய்ய மறந்துவிட்டேன்; இவனைக் கொண்டு போய் ஆஸ்பத்திரியில் சேர்த்துவிட்டு, அப்படியே போலீசுக்கும் தகவல் கொடுக்க வேண்டாமா, நான்?'' என்று சொல்லிக்கொண்டே வந்து, கீழே விழுந்து கிடந்த சுந்தரைத் தூக்கப்போனான்.

''நில்! அவனைத் தொடாதே!'' என்று கத்தினார் ஆபத்சகாயம்.

''ஏன் தடுக்கிறீர்கள், என் கடமையை நான் செய்யவொட்டாமல்?'' என்றான் மணி.

''அந்தக் கடமையைச் செய்ய எனக்குத் தெரியும்; நீ போய் உன் வேலையைப் பார்!''

''மிக்க மகிழ்ச்சி; உங்கள் உதவிக்கு நன்றி!''

கொஞ்சம் குத்தலாகவே இதைச் சொல்லிவிட்டு, எந்த வாடகைக் காரில் வந்தானோ அதே வாடகைக் காரில் அவன் திரும்பிப் போய்விட்டான். அவனுடைய தலை மறைந்ததும், ''கடமையாம் கடமை! ஆஸ்பத்திரியில் சேர்ப்பது இவருடைய

கடமையென்றால், அடிப்பது கூட இவருடைய கடமைகளில் ஒன்றாய்தான் இருக்கும் போலிருக்கிறது? அயோக்கியப் பயல்'' என்று அவனைத் திட்டிக் கொண்டே சுந்தரைத் தூக்கி நிறுத்தப் போனார் ஆபத்சகாயம்.

அவனோ அவர் தூக்கி நிறுத்த நிறுத்த, தொப் தொப்பென்று கீழே விழுந்து கொண்டே இருந்தான். ''இந்த அடிக்கே இப்படித் துவண்டு போய்விட்டானே, இவன்!'' என்று சொல்லிக்கொண்டே அவனைத் தன் இரு கைகளாலும் ஏந்திக் கொண்டு போய்க் காருக்குள் கிடத்திவிட்டு, ''அன்னபூரணி! ஏ, அன்னபூரணி!'' என்று குரல் கொடுத்தார் அவர்.

ஒன்றும் புரியாத நிலையில் சற்றுத் தள்ளி நின்று கொண்டிருந்த அவள், மௌனமே உருவாய் அவருக்கு முன்னால் வந்து நின்றாள்.

''இன்னொரு முறை அந்தப் பயல் இங்கே வந்தால் அவனை உள்ளே விடாதே!'' என்றார் அவர்.

''சரி!'' என்பதற்கு அடையாளமாக அவள் தன் தலையை மட்டும் ஆட்டினாள்.

''நான் வருகிறேன், இவனைக் கொண்டு போய் அவன் அப்பாவிடம் ஒப்படைத்துவிட்டு!''

இதைச் சொன்னதும் அவர் போய்க் காரில் உட்கார்ந்து, அவரே அதை ஓட்டவும் ஆரம்பித்தார்.

அப்போது, ''தண்ணீர்,தண்ணீர்!'' என்று முனகினான், சற்றே மூர்ச்சை தெளிந்த சுந்தர்.

''நீ கேட்பதற்கு முன்னாலேயே அதை நான் உனக்குக் கொடுத்திருக்க வேண்டும்; மறந்துவிட்டேன், ஆத்திரத்தில்!'' என்று தானே இறங்கிப் போய்த் தண்ணீர் கொண்டு வந்தார் அவர்.

அதை நடுங்கும் கைகளால் வாங்கிப் படுத்தபடியே குடித்துவிட்டு, ''இப்போது நீங்கள் என்னை எங்கே

அழைத்துக் கொண்டு போகப்போகிறீர்கள்?'' என்றான் சுந்தர்.

''ஏன், உன் அப்பாவிடம்தான்!''

''ஐயோ, வேண்டாம்! அவர் இப்போதுள்ள இடத்தில் நான் போய் அவரைப் பார்த்தால் அது அவருக்குப் பிடிக்காது!''

''ஏன்,அவர் இப்போது எங்கே இருக்கிறார்?''

''தயவுசெய்து அதைப்பற்றி என்னிடம் கேட்காதீர்கள்; அவர் இப்போது கீழ்ப்பாக்கத்தில் இருக்கிறார்; அங்கேதான் தன்னை வந்து பார்க்கும்படி அவர் உங்களிடம் சொல்லச் சொன்னார்!''

''அப்படியானால் நான் உன்னை ஏதாவது ஆஸ்பத்திரியில் சேர்த்துவிடட்டுமா?''

''எதற்கு, இங்கே போன மானம் போதாதா? என்னைப் பேசாமல் கொண்டு போய் என் அம்மாவிடம் சேர்த்து விடுங்கள்; அவர்களுக்குத் தெரிந்த வைத்தியமே இதற்குப் போதும்!''

''அவர்கள் எங்கே இருக்கிறார்கள்?''

''அடையாறில்!''

''சரி, அப்படியே செய்கிறேன்!'' என்று அவர் காரைத் கிளப்பினார்; அவன் கையை ஊன்றி மெல்ல எழுந்து, சாய்ந்தாற்போல் காலை நீட்டி உட்கார்ந்துகொண்டான்.

''உனக்கு வருத்தமாயிருக்கும், உங்களுடைய சண்டையில் நான் குறுக்கிடவில்லை என்று; இல்லையா?'' என்றார் ஆபத்சகாயம், தன் மனச்சாட்சி தன்னை உறுத்த.

''அப்படியொன்றுமில்லை!'' என்றான் அவனும் தன் மனத்தைத் தானே ஏமாற்ற.

''நான் குறுக்கிட்டிருந்தால் என்ன நடந்திருக்கும், தெரியுமா? உங்களுடைய சண்டையின் முடிவு அவனுக்குச் சாதகமாகியிருக்கும்; தனக்குக் கிடைக்க வேண்டிய தண்டனை

யிலிருந்து தப்பிவிட அது அவனுக்கு ஏதுவாகியிருக்கும். அதனால்தான் நான் குறுக்கிடவில்லை!'' என்றார் அவர், தன் 'சட்ட ஞான'த்தைச் சற்றே வெளிப்படுத்தி.

அவன் சிரித்தான்; ''ஏன் சிரிக்கிறாய்?'' என்று அவர் கேட்டார்.

''ஒன்றுமில்லை; எனக்கு நேர்ந்த கதி உங்களுக்கும் நேருவதை நான் விரும்பவில்லை!'' என்றான் அவன்.

அவர் சிரித்தார்; ''ஏன் சிரிக்கிறீர்கள்?'' என்று அவன் கேட்டான்.

''ஒன்றுமில்லை; அனுபவபூர்வமாக நீ அதைச் சொல்லும்போது என்னால் எப்படி நம்பாமல் இருக்க முடியும்?'' என்றார் அவர்!

அவன் மௌனமானான்; அவரும் மௌனமானார்- இருவரும் ஒருவரையொருவர் எப்படியோ சமாளித்துக் கொண்டு விட்ட திருப்தியில்தான்!

மணி எதிர்பார்த்தபடி, அவன் தங்கியிருந்த ஓட்டலில் அவனுக்காகப் போலீசாரும் காத்துக்கொண்டிருக்கவில்லை; சர்மாஜியும் காத்துக்கொண்டிருக்கவில்லை. வழக்கம்போல் சர்வர் சங்கர்தான் அவனுக்காக அங்கே காத்துக் கொண்டிருந்தான்.

''என்ன சங்கர், எங்கே சர்மாஜி?''

''அவருக்கென்னப் பைத்தியமா பிடித்திருக்கிறது, சுந்தரைப்போல் உங்களைத் தேடி வந்து உங்களிடம் அகப்பட்டுக் கொள்ள?''

''அது எப்படித் தெரிந்தது, உனக்கு?''

''சர்மாஜி அதைப் பார்த்துவிட்டு வந்துதானே அவசர அவசரமாக என்னைப் பெங்களூருக்கு டிக்கெட் எடுத்துக் கொண்டு வரச் சொன்னார்?''

''அப்படியானால்...''

''இன்னும் ஒரு வார காலத்துக்கு நீங்கள் அவரை இங்கே நிச்சயம் பார்க்க முடியாது!''

''சரி, போலீசார் என்ன ஆனார்கள்?''

''ஆபத்சகாயத்தின் அருளால் அவர்கள் வந்த வழியே திரும்பிப் போய்விட்டார்கள். அதில் நம் சர்மாஜிக்கு அளவு கடந்த ஏமாற்றம்; அந்த ஏமாற்றத்தைப் பகிர்ந்துகொள்ளத் தான் அவர் ஆபத்சகாயத்தைத் தேடிக்கொண்டு வந்தார். அங்கே நீங்கள் சுந்தரைக் கவனித்துக்கொண்டிருக்கவே, அவர் வந்த வழியேத் திரும்பிவிட்டார்!''

''வருத்தமாயிருக்கிறது சங்கர், இதைக் கேட்க எனக்கு ரொம்ப வருத்தமாயிருக்கிறது! யாராயிருந்தாலும் அவர்கள் என்னைக் கண்டதும் அன்பு செலுத்த வேண்டுமென்றுதான் நான் விரும்புகிறேனே தவிர, அஞ்ச வேண்டுமென்று ஒரு நாளும் விரும்பியதில்லை; விரும்பப்போவதும் இல்லை. அப்படியிருந்தும் சந்தர்ப்பம் சில சமயம் இப்படிச் சதி செய்து விடுகிறது; இதற்கு நான் என்ன செய்யலாம்?''

இப்படிக் கேட்டு அவன் தன் முகவாய்க்கட்டையைத் தேய்த்து விட்டுக் கொண்டதுதான் தாமதம், ''இறங்கி விட்டீர்களா, தத்துவ விசாரத்தில்? சரி, இறங்குங்கள்; நான் போய் ஒரு கப் காபி கொண்டு வருகிறேன், உங்களுக்கு?'' என்று சங்கர் கீழே இறங்கினான்; மணி அதே விசாரத்துடன் தன் அறைக்குள் நுழைந்து, சட்டையைக் கூடக் கழற்றாமல் கட்டிலின் மேல் உட்கார்ந்தான்.

என்ன செய்வது, இந்த ஓட்டலை விட்டே ஓடிப் போய் விடுவதா? இல்லை, இந்த உலகத்தை விட்டே மறைந்து போய் விடுவதா?

அந்த சுந்தர்!-அவனைக்கூட அன்று நான் அடிக்க வில்லை; அருணாவின் மேல் கொண்ட சபலத்தால் அப்படி நடந்துக் கொண்டு விட்டான் என்று எண்ணி, அவன் நழுவுவதைப் பார்த்தும் பார்க்காதவன் போல் இருந்து விட்டேன். அந்த அருணாவுக்குப் பிறகு அவன் இன்னொரு

ரூபாவுடன் வளைய வந்தபோதுக் கூட, அவனை நான் விரட்டவில்லை; வெகுண்டு அடிக்கவும் இல்லை. ஆனால் இன்று?-அவன் ஏன் அந்தத் துரோகத்தை எனக்குச் செய்ய வேண்டும்? அதற்கு ஏன் இந்த சர்மாஜி துணையாயிருக்கவேண்டும்?

ஒருவனுக்கு வேண்டியது பெண்; இன்னொருவனுக்கு வேண்டியதுப் பணம்!-அவற்றுக்காக அவர்கள் யாரை வேண்டுமானாலும் என்ன வேண்டுமானாலும் செய்வார்கள்; அதற்கு என்னைப் போன்றவர்கள் பலியாகிக்கொண்டே இருக்க வேண்டியதுதானா? 'வல்லான் வகுத்ததே வாய்க்கால்' என்பதற்காக 'நல்லான்க'ளெல்லாம் அதில் விழுந்து செத்துக் கொண்டே இருக்க வேண்டியதுதானா?

என்ன மோசமான மனிதர்கள், என்ன மோசமான மனிதர்கள்-இவர்களிடம் அனுதாபம் கொள்ள நான் என்ன புத்தரா, ஏசுவா? அப்படியே இருந்தாலும் அவர்களை ஒருப் பொருட்டாக நினைக்காத இவர்கள், என்னையா ஒருப் பொருட்டாக நினைக்கப் போகிறார்கள்?

விடு, கழுதைகளை!-அவர்கள் பின்னால் உதைத்தால், நான் முன்னால் உதைக்கிறேன்-இதுதானே அவர்களுக்கும் எனக்கும் உள்ள வித்தியாசம்?

இதற்காக நான் ஏன் வருந்த வேண்டும், இதற்காக நான் ஏன் கலங்க வேண்டும்?

அவர்களைப் பொறுத்தவரை அவர்கள் அன்பு காட்டினாலும் திருந்தப் போவதில்லை; அனுதாபம் காட்டினாலும் திருந்தப் போவதில்லை- அப்படிப் பட்டவர்களை நான் என்ன செய்ய முடியும், ஆத்திரம் தீர அடித்து நொறுக்குவதைத் தவிர?

அதற்காக, 'அடித்தால் மட்டும் அவர்கள் திருந்தி விடவாப் போகிறார்கள்?' என்று என்னை யாராவது கேட்கலாம்-திருந்த மாட்டார்கள்தான்!-அவர்கள் திருந்த மாட்டார்கள் என்பதற்காக உயிர் இருந்தும் உயிர் இல்லாத

மனிதனாக, உணர்ச்சி இருந்தும் உணர்ச்சி இல்லாத மனிதனாக நான் ஏன் நடமாட வேண்டும்?

அது என்னால் முடியாதய்யா, அது என்னால் முடியவே முடியாது!

இந்தக் கடைசி வார்த்தையை மட்டும் கேட்டுக் கொண்டே வந்த சங்கர், ''எது முடிந்தாலும் முடியா விட்டாலும் இந்த அறையைக் காலி செய்ய உங்களால் முடியுமென்று நான் நினைக்கிறேன்; அதை முதலில் செய்யுங்கள்!'' என்றான் தன் கையிலிருந்தக் காபியை அவனுக்கு முன்னால் வைத்து.

''சர்மாஜிக்குப் பயந்தா?'' என்றான் மணி, சிரித்துக் கொண்டே.

''அவர் உங்களுக்குப் பயப்படுவதைத்தான் நீங்கள் விரும்பவில்லையே?'' என்று அவன் சொல்லைக் கொண்டே அவனை மடக்கினான் சங்கர்.

''ஆம்; அவர் மட்டும் என்ன, இந்த உலகத்திலுள்ள யாருமே என்னைக் கண்டு பயப்படுவதை நான் விரும்பவில்லைதான்!'' என்றான் அவன்.

# 32. பெருமைக்கு இழுக்கு!

காந்தி நகரிலிருந்து 'பார்வதி பவன'த்தை நெருங்கியதும், ''என்னை இங்கேயே விட்டுவிடுங்கள்!'' என்றான் சுந்தர்.

''ஏன், உள்ளேயேக் கொண்டு வந்து விடுகிறேனே?'' என்றார் ஆபத்சகாயம்.

''வேண்டாம்; இந்த நிலையில் நான் இருப்பது அம்மாவுக்கும் தெரிய வேண்டாம், அப்பாவுக்கும் தெரிய வேண்டாம்!''

''அதற்காக நீ இங்கிருந்து எப்படிப் போவாயாம்?''

''மெல்ல மெல்ல நடந்தேப் போய்விடுகிறேன்; நீங்கள் காரைக் கொண்டு போய் அப்பாவிடம் விட்டுவிடுங்கள்!''

''இப்படிச் சொல்வாய் என்று தெரிந்திருந்தால் உன்னை அடிப்பதற்கு முன்னாலேயே அவனை நான் தடுத் திருப்பேனே! இப்போது நீயே அல்லவா அவனைத் தண்டனையிலிருந்து தப்ப வைக்கப் பார்க்கிறாய்?'' என்றார் அவர், மீண்டும் தன் மானத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காக.

''அவன் தண்டனைப் பெற வேண்டும் என்பதற்காக என்னுடைய மானத்தை நான் காற்றில் பறக்கவிட முடியுமா, என்ன? நீங்கள் போய் வாருங்கள்!'' என்றான் அவன், அவருடைய பதிலைக் கூட எதிர்பாராமல் இறங்கிக் கொண்டே. ஆபத்சகாயம் அவனைத் தடுக்கவில்லை; 'எக்கேடாவது கெட்டுப் போகட்டும்!' என்று வந்த வழியே திரும்பினார், அதற்கு மேல் அவனைச் சமாளிக்க முடியாமல்.

அவர் போனதை ஒரு முறைக்கு இரு முறையாகப் பார்த்து நிச்சயப்படுத்திக்கொண்டு உள்ளே நுழைந்தான் சுந்தர். தன்னால் முடிந்தவரை சமாளித்தும் சமாளிக்க முடியாமல் அவன் ஆடி அசைந்து வருவதைப் பார்த்ததும், 'ஐயோ, மகனே!' என்று அலறிவிடவில்லை பார்வதி; ''என்னடா, எவன் உதைத்தான் இப்படி?'' என்றாள் அனுபவபூர்வமாக.

''என்னையாவது, எவனாவது உதைப்பதாவது? அதெல்லாம் ஒன்றுமில்லை அம்மா, மாடிப் படியிலிருந்து கீழே உருண்டுவிட்டேன்!''

''குடித்துவிட்டா?''

''போம்மா! என்றோ ஒரு நாள் வாழைப்பழம் தின்று விட்டு வந்தாலும் வந்தேன், அன்றிலிருந்து நீ என்னைக் குடிகாரன் என்று சொல்ல ஆரம்பித்துவிட்டாயே? நீ

வேண்டுமானால் வாழைப்பழம் தின்பவர்களின் வாயை முகர்ந்துப் பார்; அவர்களுடைய வாயெல்லாம் சாராய வாடை அடிப்பது தெரியும்!''

''அட, என் கண்ணே! உன் அப்பாவுக்கு வெறும் சோடாப் பிடிக்காதபோது, உனக்கு மட்டும் வெறும் வாழைப்பழமா பிடித்துவிடப் போகிறது? போ போ! போய்ப் படு, போ!'' என்றாள் அவள், தன் தலையில் லேசாகத் தட்டிக்கொண்டே.

இரவல் காரின் சுகத்தை இலவசமாக அனுபவித்துக் கொண்டேச் சென்ற ஆபத்சகாயத்துக்கு எத்தனையோச் சிந்தனைகள்!-எல்லாம் எதிர்காலத்தைப் பற்றியவைதான்-சுகானந்தத்தைத் தான் சந்தித்து இன்னும் இரண்டு நாட்கள் கூட ஆகவில்லை; அதற்குள் அவர் தன்னை மறுபடியும் அழைக்கிறார் என்றால், அது எதற்காக இருக்கும்? அருணாவின் கல்யாண விஷயமாக இருக்குமா, அல்லது...

அப்படியிருந்தால் அதில் அவர் இவ்வளவு அவசரம் காட்டலாமா? அதிலும், தலைக்கு மேல் உயர்ந்த தறுதலைப் பிள்ளை ஒன்றைப் பெற்றுத் தன் கையில் வைத்துக்கொண்டு?

அனுப்பவே அனுப்பினார் அவனை!-சினிமா நடிகைகள் சொல்லிக்கொள்கிறார்களே, தாங்கள் பெற்ற பிள்ளையைத் தங்கள் தம்பி என்று. அந்த மாதிரி அவனையும் தன் தம்பி என்றாவது சொல்லிக்கொள்ளச் சொன்னாரா?-அதுவும் இல்லை; 'யாரப்பா நீ?' என்று கேட்டால், அவன் கொஞ்சங்கூடக் கூசாமல் 'நான்தான் சுகானந்தத்தின் மகன்!' என்கிறான்!

நல்ல வேளை, அருணா அப்போது வீட்டில் இருந்திருந்தால் என்ன நினைத்திருப்பாள்?

அவள் நினைப்பதென்ன, தனக்கே இவ்வளவு பெரிய பிள்ளையைப் பெற்று வைத்திருக்கும் ஒரு தந்தைக்காத் தன்

மகளை இரண்டாந்தாரமாகக் கொடுப்பது என்றுத் தோன்ற வில்லையா? அதிலும், முதல் மனைவி வேறு உயிருடன் இருக்கும்போது?

இன்று சொல்கிறார், அருணாவுக்காக அவளை விவாகரத்து செய்துவிடுவதாக; நாளை இன்னொருத்திக்காக அவர் அருணாவையும் விவாக ரத்து செய்துவிடுவதாகச் சொன்னால்?

சொன்னால்தான் என்ன, அதனால் அவளுடைய வாழ்க்கையே பாழாகிவிடுமா?

அப்படித்தான் சிலர் சொல்கிறர்கள்; ஆனால் அதில் ஏனோ தனக்கு மட்டும் அவ்வளவு நம்பிக்கை இல்லை!

வயதானவராச்சே, சீக்கிரம் கண்ணை மூடிவிடுவாரே என்று சிலர் சொல்லலாம். அப்படியே மூடிவிட்டால்தான் என்ன?-விட்டது சனியன், ராஜாவின் ராஜ்யம் ராணியின் ராஜ்யமாகிவிடுகிறது!

இது போன்ற 'இனிய எண்ணங்க'ளில் மிதந்துக் கொண்டே ஆபத்சகாயம் கீதாவின் வீட்டுக்குள் நுழைந்தபோது, அங்கே கீதா இல்லை; அவளுக்குப் பதிலாக சுகானந்தமே அவரை எதிர்கொண்டழைத்து, ''உங்களிடம் காரைக் கொடுத்து விட்டு எங்கேப் போய்விட்டார் துரை, சினிமாவுக்கா?'' என்றார் கேலியும் கிண்டலுமாக.

''தெரியவில்லை; அதைப்பற்றி நானும் கேட்க வில்லை!'' என்றார் ஆபத்சகாயம், அடக்கமே உருவாக.

''கேட்காவிட்டால் போகிறது; ஆளையாவது நன்றாகப் பார்த்துக்கொண்டீர்களோ, இல்லையோ?''

''பார்த்துக்கொண்டேன், பார்த்துக்கொண்டேன்!''

''நீங்கள் பார்க்கவேண்டும் என்பதற்காகத்தான் அவனை நான் அங்கே அனுப்பிவைத்தேன். வாருங்கள், போவோம்!'' என்று ஆபத்சகாயத்தை மேலே அழைத்துக்கொண்டு போனார் அவர்.

''எதற்கு?'' என்று ஒன்றும் புரியாமல் கேட்டார், ஆபத்சகாயம்.

''அதைச் சொல்லத்தானே உங்களை நான் இங்கே வரச் சொன்னேன்? உட்காருங்கள்!'' என்று சுகானந்தம் அவரைத் தன் அறையில் உட்கார வைத்துவிட்டுத் தானும் உட்கார்ந்தார்.

அப்போது கிட்டன் வந்து, ''ஏதாவது கொண்டு வர வேண்டுமா?'' என்று வழக்கத்தையொட்டிக் கேட்டான்.

''ஒன்றும் வேண்டாம்; நான் கூப்பிடும் வரை நீ இங்கே வரவும் வேண்டாம்!'' என்று சொல்லி அவனைக் கீழே அனுப்பி விட்டு, ''அந்தப் பயல் சுந்தர் இருக்கிறானே, அவன் இன்று என்னைச் சுட்டுவிடப் பார்த்தான்!'' என்று ஆரம்பித்தார் அவர்.

''என்ன!'' என்று வாயைப் பிளந்தார் இவர்.

''ஆமாம் ஐயா, ஆமாம். 'பணம் பத்தும் செய்யும்' என்கிறார்களே, அவற்றில் இதுவும் ஒன்று போலிருக்கிறது!'' என்றார் சுகானந்தம்.

''என்னால் நம்ப முடியவில்லையே, இதை!'' என்றார் ஆபத்சகாயம்.

''நானும்தான் இந்த நிமிஷம் வரை அதை நம்பவில்லை; ஆனாலும் அவனைப் பற்றிய சந்தேகம் மட்டும் இன்னும் தீரவில்லை!''

''என்ன நடந்ததென்று கொஞ்சம் விவரமாய்த்தான் சொல்லுங்களேன்?''

''இன்று காலை அவன் என் கைத்துப்பாக்கியை எடுத்து வைத்துக்கொண்டு தோட்டத்திலிருந்து ஒரு மரத்தைக் குறி பார்த்துக் சுட்டுக்கொண்டிருந்தான். அப்போது நான் அந்தப் பக்கமாகப் போனேன். ஒரு குண்டு என் தலைக்கு மேல் சென்றது. 'என்னடா?' என்றால், 'குறி தவறிவிட்டது!' என்று கொஞ்சம்கூடப் பயமில்லாமல் இளிக்கிறான்!''

''சிறு பிள்ளைதானே, விளையாட்டுத்தனமாயிருக்கும்!''

''சரி, இது விளையாட்டுத்தனமாகவே இருக்கட்டும். இதற்கு முன் ஒரு நாள் எங்கள் வீட்டில் என்ன நடந்ததென்று தெரியுமா, உங்களுக்கு? என் கோட்டுப் பையில் ஒரு பாம்புக்குட்டி இருந்தது!-என்ன பாம்புக்குட்டி என்கிறீர்கள்? -நல்ல பாம்புக்குட்டி ஐயா, நல்ல பாம்புக்குட்டி!''

''அது எப்படி வந்தது, அங்கே?''

''அதையும் அவன்தான் கொண்டு வந்து போட்டிருப்பானோ என்று எனக்கு ஒரு சந்தேகம்!''

''சீச்சீ, அப்படியிருக்காது!''

''உங்களுக்குப் பணத்தின் அருமையைப் பற்றித்தான் தெரியுமே தவிர, அதன் குணத்தின் அருமையைப் பற்றித் தெரியாது; அதனால்தான் அப்படிச் சொல்கிறீர்கள்!-சரி, அது இருக்கட்டும். நீங்கள் எனக்காக ஓர் உதவி செய்கிறீர்களா?''

''என்ன உதவி?''

''நீங்கள்தான் துப்பறியும் இலாக்காவில் வேலை பார்த்திருக்கிறீர்களே, எதற்கும் அந்தப் பயல்மேல் ஒரு கண் வைத்துப் பாருங்களேன்?''

''அதற்கென்ன, பார்க்கிறேன்! அவன் இப்போது என்ன செய்து கொண்டிருக்கிறான்?''

''அதை ஏன் கேட்கிறீர்கள், போங்கள்! எந்தத் தொழிலைச் செய்தாலும் அந்தத் தொழிலை நேர் வழியில் செய்தால் பணம் பண்ண முடியாது என்பதுதான் உங்களுக்குத் தெரியுமே? அதற்காக எதுவாயிருந்தாலும் நாளை அவனுக்குத் திருடவும் தெரியவேண்டும், பதுங்கவும் தெரிய வேண்டுமே என்று சட்டம் படிக்கச் சொன்னேன்! எங்கே படிக்கிறான்; எத்தனையோ பொழுது போக்குகளில் அதையும் ஒரு பொழுது போக்காக வைத்துக் கொண்டிருக்கிறான்!''

''யோசனை நல்ல யோசனைதான்! ஆனால் பணம் அவனைப் படிக்க விடவில்லைபோலிருக்கிறது?'' என்றார் ஆபத்சகாயம் சிரித்துக்கொண்டே!

''படிக்க விடாததோடு நின்றால் தேவலையே? வேறு என்னவெல்லாமோ செய்யச் சொல்கிறதே! அதுதானே எனக்குக் கவலையாயிருக்கிறது?'' என்றார் அவர், உண்மையான கவலையுடன்!

''அந்தக் கவலை இனி உங்களுக்கு வேண்டாம், நான் கவனித்துக்கொள்கிறேன் அவனை!'' என்றார் ஆபத்சகாயம், தனக்கு அந்த நம்பிக்கை இல்லாவிட்டாலும் அவருக்காவது அந்த நம்பிக்கை இருந்துவிட்டுப் போகட்டுமே என்று!

இந்தச் சமயத்தில் 'டெலிபோன்' மணி கிணு கிணுக்கவே, 'ரிசீவ'ரை எடுத்துக் காதில் வைத்துக்கொண்டு, ''சுகானந்தம் பேசுகிறேன்; யார் வேண்டும் உங்களுக்கு?'' என்று கேட்டார் அவர்.

அதற்குமேல் அவர் ஒன்றும் பேசாமல், 'ம், ம்' என்று 'ம்' கொட்டிக்கொண்டிருக்கவே, 'யார் அது?' என்று பொறுமையிழந்து கேட்டார் ஆபத்சகாயம்.

''இன்ஸ்பெக்டர் இருதயசாமிப் பேசுகிறார்; கொஞ்சம் பொறுங்கள், இதோ வந்துவிட்டேன்!'' என்று அந்த இருதயசாமி சொல்லவேண்டியதைச் சொல்லி முடித்ததும் அவர் ஆபத்சகாயத்தின் பக்கம் திரும்பி, ''சுந்தரை யாரோ மணி என்பவன் அடித்துவிட்டானாம்! இதில் வேடிக்கை என்னவென்றால் சுந்தர் வந்து புகார் செய்வதற்குப் பதிலாக மணி வந்துப் புகார் செய்து இருக்கிறானாம், அவனைத் தான் அடித்து விட்டதாக! 'இது உண்மையா?' என்று சுந்தருக்குப் 'போன்' செய்து கேட்டால், 'சுத்தப் பொய்; என்னை எவனும் அடிக்கவில்லை, அடிக்கவும் முடியாது!' என்கிறானாம். இதற்கு நான் என்ன செய்யட்டும் என்று அவர் என்னைக் கேட்கிறார்! நீங்கள் தான் சொல்லுங்களேன், என்ன செய்யச் சொல்லலாம் என்று?'' என்றார் ரிசீவரைக் கையிலேயே வைத்துக்கொண்டு.

இதைக் கேட்டதும் ஆபத்சகாயத்துக்குத் திருடனைத் தேள் கொட்டியது போலிருந்தாலும் அதை அவர் வெளியே

காட்டிக் கொள்ளாமல், ''சுந்தரே தன்னை யாரும் அடிக்க வில்லை என்று சொல்லும்போது, அந்த மணியை நாம் என்ன செய்யச் சொல்வது? பேசாமல் விட்டுவிடச் சொல்லுங்கள்!'' என்றார் அந்த அறையின் முகட்டைப் பார்த்தபடி.

அப்படியே சொல்லி, ரிசீவரை 'ரெஸ்'டின் மேல் வைத்து விட்டுப், ''பார்த்தீர்களா, பணக்காரர்களுக்குள்ள அருங்குணங்களில் இதுவும் ஒன்று!-அதாவது, உதை பட்டால் கூட அதை அவன் வெளியேச் சொல்லமாட்டான், தன்னுடைய பெருமைக்கு அது இழுக்கு என்று!'' என்றார் அவர்.

# 33. நீதியும் மனிதனும்

தெய்வம் தவறு செய்கிறதோ இல்லையோ, மனிதன் தவறு செய்கிறான். தவறு செய்யாவிட்டால் அவன் மனிதன் அல்ல; தெய்வம்!

இப்படி ஒரு நியதி இந்த உலகத்தில் தொன்றுத் தொட்டு இருந்து வருகிறது. இதற்கு யார் காரணமோ, எது காரணமோ அது யாருக்கும் தெரியாது.

ஆனால் இந்தத் தவறு செய்யும் மனிதன் இருக்கிறானே, இவன் 'மனிதன் தவறு செய்வது இயற்கை' என்று எண்ணிப் பேசாமல் இருந்துவிடுவதில்லை. அந்தத் தவற்றை விசாரிக்க இன்னொரு மனிதனின் உதவியை நாடுகிறான்; அதற்குரிய தண்டனையை வழங்குமாறு வேறொரு மனிதனின் தயவை வேண்டுகிறான்!

இதில் சம்பந்தப்பட்ட அனைவருமே தவறு செய்யக் கூடிய மனிதர்கள்தான் என்றாலும், நீதி நிலை நாட்டப்பட்டு விட்டதாக அவன் மனப்பால் குடிக்கிறான்!

வேடிக்கையாயில்லையா, இது?

இந்த வேடிக்கைக்குத் தன்னையும் உள்ளாக்கிக் கொள்ள, நினைத்துத் தோல்வியுற்ற மணி, மேற்கண்டவாறு எண்ணிக் கொண்டே போலீஸ் நிலையத்தை விட்டு வெளியே வந்து மோகனின் வீட்டை அடைந்தபோது மணி எட்டுக்கு மேலிருக்கும். அருணாவை எதிர்பார்த்து வாசலில் நின்றுகொண்டிருந்த அன்னபூரணியம்மாள், அவனைக் கண்டதும் வழிமறிக்காதவள்போல் வழி மறித்து நின்று, ''ஏண்டா மணி, இன்று நடந்ததெல்லாம் உண்மைதானா? மோகனைக் கேட்டால் ஒன்றுமே சொல்லமாட்டேன் என்கிறான்; அதனால்தான் உன்னைக் கேட்கிறேன்!'' என்றாள் அவனை வாசலில் நிற்க வைத்து!

''உண்மைதான்! ஆனால், வீட்டுக்கு உரியவர் நினைத்துக் கொண்டிருக்கிறாரே, எங்களையும் கள்ளக் கடத்தல் பேர்வழிகள் என்று. அதுதான் உண்மையில்லை!'' என்றான் மணி.

''அது எனக்குத் தெரியும்; இங்கே ஒருவன் அவரைத் தேடிக் கொண்டு வந்தானே, அவன்தானே அந்தப் பேர்வழி?''

''ஆமாம்; அவனுக்கு உடந்தையாயிருந்திருக்கிறான் அந்த ஓட்டல்காரன்!''

''என்ன இருந்தாலும் நீ அவனை அப்படி அடித்திருக்கக்கூடாது!''

''நான் என்னம்மா, செய்வேன்? அந்த வகையிலாவது எனக்குக் கிடைக்க வேண்டிய நீதியை என்னால் தேடிக் கொள்ள முடிகிறதே என்பதில் எனக்கு ஒரு திருப்தி. அந்தத் திருப்தி கூட இல்லாமல் எத்தனை பேர் இந்த உலகத்தில் அவனைப் போன்றவர்களுக்கு நித்த நித்தம் பலியாகிக் கொண்டிருக்கிறார்கள்!''

இதைச் சொல்லும்போது உணர்ச்சி வசப்பட்ட அவன், தன்னை மீறி வந்தத் துக்கத்தை அடக்க முயன்றான். அதற்குள், ''என்னமோ, போ! கடவுள்தான் உன்னைக் காப்பாற்ற வேண்டும்!'' என்று 'முத்தாய்ப்பு' வைத்துக்

கொண்டே கதவைச் சாத்திவிட்டு, உள்ளே போவதற்குத் தயாரானாள் அவள், எங்கே அவன் தன்னைத் தொடர்ந்து உள்ளே வந்து விடுவானோ, என்னமோ என்று பயந்து!

அது தெரிந்தும் ''மோகன் இல்லையா வீட்டில்?'' என்று கேட்டுக்கொண்டே அவளைத் தொடர்ந்து உள்ளே ஓர் அடி எடுத்து வைத்தான் மணி, தெரியாதவன் போல.

அவனைத் தடுத்து நிறுத்த அவளுக்கு வாயும் வரவில்லை; மனமும் வரவில்லை. அதற்காகத் தன் கணவர் தனக்கு இட்டக் கட்டளையை அவனிடம் தெரிவிக்கவும் அவள் விரும்பவில்லை. இருந்தாலும், நிலைமையை எப்படியாவது சமாளிக்க வேண்டுமே என்று எண்ணி, அவன் கேட்டதற்கு நேரிடையாகப் பதில் சொல்லாமல், ''அவன் வந்ததும் ஓட்டலுக்கு வந்து உன்னைப் பார்க்கச் சொல்கிறேன்; நீ போ!'' என்றாள் சுற்றி வளைத்து!

அதற்கு மேல் அவளைச் சோதிக்க விரும்பாமல், ''வேண்டாம்; இனிமேல் அவன் அந்த ஓட்டலுக்கு வர வேண்டாம். அதைச் சொல்லத்தான் வந்தேன். நான்!'' என்று சொல்லிவிட்டு, மணி திரும்பினான்.

அவன் தலை மறைந்ததும் உள்ளேயிருந்த மோகன் வெளியே வந்து சிரித்தான்; சிரித்துவிட்டுச் சொன்னான்:

''நீ எதைச் சொல்லப் பயந்தாயோ, அதை அவன் எவ்வளவு தைரியமாகச் சொன்னான் பார்த்தாயா, அம்மா?''

''சொல்வது எதுவாயிருந்தாலும் அதைச் சொல்லத் தைரியம் மட்டும் இருந்தால் போதாது; நோக்கம் வேறு நல்ல நோக்கமாயிருக்க வேண்டும். அது அவன் சொல்வதில் இருக்கிறது; நாம் சொல்வதில் இல்லை. அதனால்தான் நாம் பயப்படுகிறோம்; அவன் தைரியமாயிருக்கிறான்!'' என்றாள் அன்னபூரணி.

''அதை நீயாவது புரிந்து கொண்டிருக்கிறாய்? அதுவே போதுமம்மா எனக்கு, அதுவே போதும்!'' என்றான் அவன்.

''அதற்காக நீ உன் அப்பாவை எதிர்த்து நிற்காதே! அதுவும் பிடிக்கவில்லை எனக்கு. என்ன இருந்தாலும் அவர் உன் தகப்பனார்; அவருக்கு நீ அடங்கித்தான் நடக்க வேண்டும்!'' என்றாள் அவள், பேச்சோடு பேச்சாக.

''எந்த வகையில் அடங்கி நடக்கச் சொல்கிறாய், என்னை? அவர் திருடர்களுக்குத் துணையிருக்க வேண்டும் என்கிறார்; நானும் துணையாயிருக்க வேண்டுமா? அவர் கள்ளக்கடத்தல் பேர்வழிகளுக்கு உடந்தையாயிருக்க வேண்டும் என்கிறார்; நானும் உடந்தையாயிருக்க வேண்டுமா? அவர் பணத்துக்காக ஓர் இளம் பெண்ணின் வாழ்க்கையையே பலி கொடுக்க வேண்டும் என்கிறார்; நானும் பலி கொடுக்க வேண்டுமா? எத்தனையோ அயோக்கியர்களுக்கு மத்தியில் இந்த வீடு தேடி வந்த ஒரே ஒரு யோக்கியனை அவர் இனி உள்ளே வர வேண்டாம் என்கிறார்; நானும் உள்ளே வரவேண்டாம் என்று சொல்ல வேண்டுமா...?''

அவன் அடுக்கினான்; அவள் திணறிப்போய், ''போதுமடா, போதும்! வயதுக்கு வந்த பிள்ளையையும் பெண்ணையும் எப்படி வழிக்குக் கொண்டுவருவது என்று அவருக்கும் தெரியவில்லை; அவருடைய விருப்பப்படியே நடப்பதுபோல நடந்து, அவரை எப்படி வழிக்குக் கொண்டு வருவது என்று உங்களுக்கும் தெரியவில்லை. நான் என்ன செய்வேன்? அவரைப் பார்ப்பேனா, உங்களைப் பார்ப்பேனா?'' என்றாள் வாடிய முகத்துடன்.

''அவரையே பார்த்துக்கொள் அம்மா, எங்களை நாங்களேப் பார்த்துக்கொள்கிறோம்!''

இதைச் சொல்லிவிட்டு அவன் அங்கே நிற்கவில்லை; 'விர்'ரென்று வெளியே போய்விட்டான்-மணியைப் பிடிக்கத்தான்!

அவன் போன திசையையே சிறிது நேரம் பார்த்துக் கொண்டு நின்ற அன்னபூரணி, ''நேற்றுவரை அசடாயிருந்த

இவன், இன்று எப்படித்தான் இப்படி மாறிவிட்டானோ தெரியவில்லை?'' என்றாள் பெருமூச்சுடன்.

ஆம், மோகன் மாறித்தான் போயிருந்தான்! அதற்கு முக்கியமானக் காரணங்கள் இரண்டு. ஒன்று, எதற்கும் மாறாத பாமாவின் காதல்; இரண்டு எதற்கும் அஞ்சாத மணியின் வீரம்!

இந்த இரண்டும் சேர்ந்து அசடாயிருந்த அவனைச் சமர்த்தாக மட்டும் ஆக்கவில்லை; 'அரை மனித'னாயிருந்த அவனை 'முழுமனித'னாகவும் ஆக்கிவிட்டிருந்தன.

அந்த முழு மனிதனைக் கண்டுதான் இப்போது அப்பாவும் மிரள்கிறார்; அம்மாவும் மிரள்கிறாள்!

இந்த நிலையிலே தன் தந்தையின் எதிர்காலக் கனவுகளிலிருந்து தன்னைத்தானே விடுவித்துக் கொள்வது கூட அவ்வளவு பெரிதாகப் படவில்லை அவனுக்கு; அருணாவை விடுவிப்பதுதான் பெரிதாகப் பட்டது.

அவளுக்குத் தன்னால் என்ன செய்யமுடியும், எந்த வகையில் உதவ முடியும்?

இந்த யோசனையுடன்தான் அன்று காலை அவன் மணியின் அறையை அடைந்தான். அவன், இவன் சொன்னதையெல்லாம் பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருந்துவிட்டு, ''இது கூட்டுறவு யுகம். இந்த யுகத்தில் 'காதல் கல்யாணம்' கூட்டுறவு வியாபாரமாயிருக்கிறது. கட்டாயக் கல்யாணம் தனியார் வியாபாரமாயிருக்கிறது. முதல் கல்யாணத்தில் லாபத்துக்கு அவ்வளவாக இடமில்லை; இரண்டாவது கல்யாணத்தில் லாபத்துக்கு நிறைய இடமிருக்கிறது. இவற்றில் உன் அப்பாவுக்கு எது பிடிக்குமோ, உனக்கு எது பிடிக்குமோ, என்ற வினாக்களுக்குத் தான் விடை காண வேண்டும். இதைத் தவிர வேறொன்றும் சொல்லத் தோன்றவில்லை எனக்கு; நீ வேண்டுமானால் பாமாவுடன் கலந்து யோசித்துப் பாரேன்?'' என்று சொல்லிவிட்டான்.

இது குத்தலாகப் பட்டது மோகனுக்கு; மணியுடன் வம்புக்கு நின்றான். அந்த வம்பு சண்டையாயிற்று; அந்தச் சண்டை பிறகு சமாதானமாயிற்று. கடைசியில், ''இப்போது நீ வேலைக்கு வரப்போகிறாயா, இல்லையா?'' என்றான் அவன் பொய்யான கோபத்துடன்; ''வர முடியாது!'' என்றான் இவனும் பொய்யான கோபத்துடன். ''சரி!'' என்று அவன் கீழே இறங்கினான்; ''நில்!'' என்று அவனை அங்கேயே நிற்க வைத்துவிட்டு, இவன் இரண்டு கடிதங்களை எழுதி அவனிடம் கொடுத்தனுப்பினான். ஒன்று, விடுமுறைக்காகப் பரந்தாமனுக்கு; இன்னொன்று, முடிந்தால் அன்று மாலை தன்னை வந்து பார்ப்பதற்காகப் பாமாவுக்கு.

எது எப்படி ஆனாலும் அன்று மோகன் வீடு திரும்புவதாக இல்லை-அன்று மட்டும் என்ன, முடிந்தால் இன்னும் இரண்டு நாட்கள் கூட-அவன் தன் அப்பாவுக்காக, 'அஞ்ஞாத வாசம்' செய்யத் தயாராயிருந்தான். அதனால் அவருடைய மனம் ஏதாவது மாறுதலை அடைகிறதா, இல்லையா என்பதை அனுபவபூர்வமாகத் தெரிந்துகொள்வதற்காக. ஆனால் நடந்தது?-அதற்கு நேர் விரோதமானது!

யாரோ ஒருத்திக்காக இந்த மணி அந்த சுந்தருடன் வம்புக்கு நிற்க, அவன் இவனைப் பழி வாங்க நினைக்க, அதில் தான் சிக்கிக்கொள்ள, அதற்காகத் தன் அப்பாவின் உதவியை நாடுவதற்காக அங்கே இவன் போக, அன்று மாலையே அல்லவாத் தான் வீடு திரும்ப வேண்டியதாகி விட்டது?

அப்படித்தான் திரும்பினேனே, இவனைத் தடுத்து நிறுத்தவாவது முடிந்ததா, என்னால்?-அதுவும் இல்லை!

எங்கிருந்தோ வந்தான் அந்த சுந்தர்! அவனை ஒரு பிடி பிடித்துவிட்டு, இவன் போய்விட்டான் சர்மாஜியைக் கவனிக்க!

அவர் என்ன, அவ்வளவு சாதாரணமானவரா?-'பயல் தொலைந்தான்; இவனுக்காக இனி அப்பாவின் உதவியைக்

கூட நாடமுடியாது நம்மால் என்று நினைத்துக்கொண்டிருந்தால், மறுபடியும் வந்து நிற்கிறான் இவன் அவருக்கு முன்னால்!-எதற்காக? அடிபட்ட சுந்தரைக் கொண்டுபோய் ஆஸ்பத்திரியில் சேர்ப்பதற்காக; 'அவனை நான் அடித்து விட்டேன்!' என்று இவனே போய்ப் போலீசாரிடம் புகார் செய்வதற்காக!

இப்படியும் ஒரு வேடிக்கையான மனிதன் இருப்பானா, இந்த உலகத்தில்?-'சரி, ஏதோ கெட்ட காலம்; இனி இவனை யாராலும் காப்பாற்ற முடியாது!' என்று இவனைப் பொறுத்தவரை எல்லா நம்பிக்கைகளையும் இழந்துவிட்டு நிற்கும் போது மீண்டும் வருகிறான், என்னை ஓட்டல் அறைக்கு வரவேண்டாம் என்று எச்சரிக்க!

இவன் சொன்னால் இவனுடைய அறைக்கு நான் வராமல் இருந்துவிடுவேனா?-நான் சொல்வதை இவன் கேட்காத போது, இவன் சொல்வதை மட்டும் நான் ஏன் கேட்க வேண்டுமாம்?-பார்த்துக்கொண்டே இருங்களேன், என்னதான் நடக்கப் போகிறதென்று?

இவன் இப்போது வழியிலேயே கிடைத்தால் ஆச்சு, கிடைக்காவிட்டால் இவனுடைய அறைக்கு நான் போகத்தான் போகிறேன்-என்ன செய்து விடுவானாம், இவன் என்னை?

யாரோ ஒருத்திக்காக இவன் மட்டும் என்னப் பாடு வேண்டுமானாலும் படலாம், இவனுக்காக நான் எந்தப் பாடும் படக் கூடாதா?

இருடா பயலே, இரு!-அருணாவுக்கும் மற்றும் எனக்கும் முதலில் கல்யாணமாகட்டும்; அதற்குப் பிறகு பார்,நீ வேண்டாமென்றாலும் உன்னுடைய தலையிலே ஒரு பெண்ணைப் பிடித்துப் பலவந்தமாகக் கட்டி, நீ வீண் விவகாரத்துக்குப் போகும் போதெல்லாம் அவளைக் கொண்டு உன்னை நான் மத்தால் மொத்தச் சொல்லா விட்டால் என் பெயர் மோகன் அல்ல!

இந்தச் சூளுரையுடன் வழியெல்லாம் மணியைப் பார்த்துக்கொண்டே சென்ற மோகன், அவனைக் காணாமல் கடைசியாக அவன் அறையையே அடைந்து விட்டான்!

ஆனால் என்ன ஏமாற்றம்!-அங்கே அவன் கதவைத் தட்டியதும் அவன் எதிர்பார்த்தபடி மணி வந்து கதவைத் திறக்கவில்லை; சங்கர்தான் வந்து கதவைத் திறந்தான்.

''என்னடா சங்கர், எங்கே மணி?''

''பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் இருக்கிறார், சார்!''

''என்ன,பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலா?''

''ஆமாம் சார், அங்கேதான் அவர் இருக்கவேண்டும்!''

''என்ன உளறுகிறாய்? இருக்கிறார் என்கிறாய், இருக்க வேண்டும் என்கிறாய்...!''

''நிலைமை அப்படி சார்! இருந்தால் அவர் பைத்தியக் கார ஆஸ்பத்திரியில் இருக்கவேண்டும்; இல்லாவிட்டால் போலீஸ் லாக்-அப்'பில் இருக்கவேண்டும்...''

''அப்போதே நினைத்தேன்; அவனையும் பிடித்துவிட்டார்களா, இங்கே?''

''இல்லை; இவர்தான் 'என்னைப் பிடித்துக் கொள்ளுங் கள்' என்று சொல்வதற்காக அவர்களைத் தேடிக்கொண்டு போனார்!''

''எதற்கு?''

''நான்தான் உங்களிடம் சொன்னேனே, அந்த சுந்தரைப் பற்றி-அவனை இவர் அடித்துவிட்டாராம்!''

''ஓ, அதுவா? அது எனக்கும் தெரியும்; அதற்குப்பின் என்ன ஆயிற்று? அதுதானே தெரிய வேண்டும், எனக்கு!''

''எனக்கும் அதுதான் தெரியவில்லை, சார்! ஏழு மணி இருக்கும்; அறையின் சாவியை என்னிடம் கொடுத்து, 'நான் திரும்பி வரும்வரை இதை நீயே வைத்துக்கொள்' என்றார். 'எங்கே போகிறீர்கள்?' என்று கேட்டேன்; 'சுந்தரை அடித்து

விட்டேன் என்று போலீசாரிடம் சொல்லிவிட்டு வருவதற் காக!' என்றார். நான் சிரித்தேன். 'என்னடா சிரிக்கிறாய்?' என்றார். 'உங்களைப் பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்கு அனுப்பினாலும் அனுப்பிவிடுவார்கள், சார்!' என்றேன். 'அனுப்பினால் அனுப்பட்டும்!' என்று அவர் போய்விட்டார்!''

''இதெல்லாம் ஏழு மணிக்குத்தானே நடந்தது?''

''ஆமாம், சார்!''

''அவன் இப்போது எங்கள் வீட்டுக்கு வந்திருந்தானேடா! என் அம்மாவால் அவனை நான் அங்கே பார்த்துப் பேச முடியாமற் போய்விட்டது!''

''அப்படியானால் போலீசார் அவரைப் 'பைத்தியக்கார ஆஸ்பத்திரி'க்கும் அனுப்பவில்லை, 'லாக்-அப்'பிலும் தள்ளவில்லை என்று அர்த்தம்!''

''அர்த்தம் சரி; இப்போது எங்கே போயிருப்பான் அவன்?''

''வேறு எங்கே போயிருக்கப்போகிறார், கடற்கரைக்குப் போயிருப்பார்!''

''நீ சொல்வது சரி, எனக்கும் இப்போது கடற்கரைக்குப் போனால் தேவலை என்று தோன்றுகிறது. நான் வருகிறேன். முடிந்தால் அவனை நான் அங்கேயே பார்த்துக் கொள்கிறேன்; இல்லாவிட்டால் அவன் வந்ததும் நீ சொல், இன்றிரவு நானும் இங்கே வந்து படுத்துக்கொள்ளப் போகிறேன் என்று!''

மோகன் போய்விட்டான். ''தாராளமாகப் படுத்துக் கொள்ளுங்கள். எனக்கு இருக்கவே இருக்கிறது, வராந்தா!'' என்று சொல்லிக்கொண்டே சங்கர் கதவைச் சாத்திக் கொண்டான்.

# 34. மரண சாசனம்

சங்கர் சொன்னது உண்மை!-பெரும்பாலும் தனிமையையே விரும்பிய மணி, சற்றே குழப்பம் ஏற்பட்டாலும் கடற்கரைக்குச் சென்றுவிடுவது வழக்கம். அன்றோ, அவனைப் பொறுத்தவரை குழப்பத்துக்கு ஒன்றும் குறைவில்லை. ஆகவே, பதட்ட நிலை கொஞ்சம் தணிந்ததும் அவன் கடற்கரையை நோக்கி நடையைக் கட்டிவிட்டான்!

அதே கடல், அதே அலை, அதே ஒலி...

அதே வானம், அதே பிறை, அதே நட்சத்திரக் கூட்டங்கள்...

உலகம் எங்கே மாறியிருக்கிறது, அது அப்படியேதான் இருக்கிறது!

இந்த அன்னபூரணியம்மாள்-யார் மாறினாலும் இவர்கள் மாறமாட்டார்கள் என்றுதான் இத்தனை நாளும் நான் எண்ணிக்கொண்டிருந்தேன்; இப்பொழுது அவர்களும் அல்லவா மாறிவிட்டார்கள்!

நான் கேட்டது, 'மோகன் இல்லையா வீட்டில்?' என்பது; அதற்கு அவர்கள் நேரிடையாகப் பதில் சொல்ல வேண்டுமானால் என்ன சொல்லியிருக்கவேண்டும்?- 'இருக்கிறான், இல்லை' என்று இரண்டில் ஒன்றுதானே சொல்லியிருக்க வேண்டும்? அப்படிச் சொல்லவில்லை அவர்கள்-அவன் வ்ந்ததும் ஓட்டலுக்கு வந்து என்னைப் பார்க்கச் சொல்கிறார்களாம்!

அத்துடனாவது நின்றார்களா?-அதுவும் இல்லை; நான் 'வருகிறேன்!' என்று சொல்வதற்கு முன்னாலேயே, 'நீ போ!' என்று வேறு அவர்கள் என்னை வழியனுப்ப வருகிறார்கள்!

இதிலிருந்தே தெரியவில்லையா, அவனை உள்ளே வைத்துக்கொண்டே அவர்கள் 'இல்லை' என்று சொல்கிறார்கள் என்று?

ஒருவேளை அவனே சொல்லியிருப்பானோ, 'இல்லை' என்று சொல்லச் சொல்லி?-சீச்சீ, அப்படி இருக்காது!- நேற்றைய மோகனாயிருந்தால் ஒருவேளை அப்படிச் சொல்லியிருக்கலாம்; இன்றைய மோகன் ஒருநாளும் அப்படிச் சொல்லியிருக்க மாட்டான்!

ஆம், அன்றிருந்த மோகன் வேறு; இன்றிருக்கும் மோகன் வேறு.

ஆனாலும், 'யாரோ ஒருத்தி'க்காக நான் எடுத்துக் கொண்ட சிரமம் அன்றுதான் பிடிக்கவில்லையென்றால், இன்றும் பிடிக்கவில்லை போலிருக்கிறதே, அவனுக்கு?-ஒரு வேளை அந்த 'யாரோ ஒருத்தி' தன் 'தங்கை'தான் என்று தெரிந்தால் பிடிக்குமோ?

பிடிக்கும்; சந்தேகமில்லாமல் பிடிக்கும்-ஆனால் அதற்காக அவளுக்குக் கொடுத்த வாக்குறுதியை மீறி அவளை அவனிடமும் அவனைச் சேர்ந்தவர்களிடமும் காட்டிக் கொடுத்துவிட முடியுமா, என்னால்?-அது முடியாது; அது என்னால் முடியவே முடியாது.

அதற்காக வேறு வழியில் என்னை ஒழித்துக் கட்ட முயன்ற அந்த சுந்தரை அவர்களுக்கு முன்னால் உதைக்காமலாவது இருந்திருக்க முடியுமா, என்னால்?- அதுவும் முடியாது; அதுவும் என்னால் முடியவே முடியாது!

நான் என்ன ஏசுவா?-ஒரு கன்னத்தில் அடித்தால், இன்னொரு கன்னத்தையும் திருப்பிக் காட்ட?

நான் என்ன, புத்தரா?-கொல்லவிருப்பது ஆட்டுக்குட்டி யாயிருந்தாலும், அதற்காகக் குனிந்து என் கழுத்தை நீட்ட?

நான் என்ன, காந்தியா?-செருப்பால் அடித்து என் பல்லை உடைத்தாலும், 'அனுதாபத்துக்குரிய அவனை விட்டு விடுங்கள்!' என்று அப்போதும், 'அஹிம்ஸா தர்ம'த்தைக் கடைப்பிடிக்க?

இல்லை!-நான் ஏசு இல்லை; நான் புத்தர் இல்லை; நான் காந்தியும் இல்லை!

சாதாரண மனிதன்; மிகமிகச் சாதாரண மனிதன்!

நான் என்ன செய்வேன், தெரியுமா?...

அதைச் சொல்ல ஆரம்பிக்கும்போது அவன் நெஞ்சில் மூண்டது வெஞ்சினம்; அந்த வெஞ்சினத்தோடு அவன் சொன்னான்:

என்னை எவனாவது ஒரு செருப்பால் அடித்தால், அவனை நான் இரண்டு செருப்பால் அடிப்பேன்; என்னுடைய பற்களில் இரண்டை எவனாவது உதிர்த்தால், அவனுடைய பற்களில் நான்கை நான் உதிர்ப்பேன்!-ஆமாம்!

பல்லை நறநறவென்று கடித்தபடி இதைச் சொல்லி முடித்ததும், அவன் ஒரு காலைச் சட்டென்று தூக்கித் தன் பலம் கொண்ட மட்டும் பூமியை ஓர் உதை உதைத்தான்!

அத்துடன் நிற்கவில்லை அவன்; தன் கால்களில் இருந்த செருப்புகள் இரண்டையும் கழற்றி எடுத்து, அந்தக் கையில் ஒன்றும் இந்தக் கையில் இன்னொன்றுமாக ஏந்தி, தனக்கு முன்னால் நிற்கும் எதிரியை அடிப்பதுபோல் அப்படியும் இப்படியுமாக ஓங்கி ஓங்கி அடித்தான்!-அதன் பலன்?-ஒன்று கடலில் விழுந்தது; இன்னொன்றுக் கரையில் விழுந்தது!

அப்பாடா! இப்போதுதான் தன்னையும் மீறித் தனக்கு வந்த ஆத்திரம் கொஞ்சம் தணிந்தது போலிருந்தது அவனுக்கு!-கரையில் விழுந்து கிடந்த ஒற்றைச் செருப்பைப் பரிதாபத்துடன் பார்த்தான்; பார்த்துவிட்டுச் சொன்னான்:

இனி உன்னால் எனக்குப் பிரயோசனமில்லை! -உன் னால் மட்டும் என்ன, இந்த உலகத்தில் ஒற்றையாயிருக்கும் எதனாலுமே யாருக்கும் எந்தவிதமான பிரயோசனமும் இருக்காது போலிருக்கிறது!-அப்படிப் பார்த்தால், நானும் தான் ஒற்றையாயிருக்கிறேன் இந்த உலகத்தில்; என்னாலும் எந்தவிதமான பிரயோசனமும் இருக்காதோ?

ஏன் இருக்காது?-இரட்டையாயிருக்கும் செருப்பைப் போலவே ஒற்றையாயிருக்கும் குடையும் மனிதனுக்கு

உதவியாய்த்தானே இருக்கிறது?-அதே மாதிரி நானும் இருப்பேன்; என்னில் ஒருவனாயிருக்கும் என் ஆன்மா என்னை விட்டுப் பிரியும் வரை, அதே மாதிரி நானும் இருப்பேன்!

ஆனால் நீ?-உன்னால் அப்படி இருக்க முடியாது; உன்னில் ஒருவன் உன்னை விட்டுப் பிரிந்த பிறகு, உன்னால் அப்படி இருக்கவே முடியாது!-வா, வந்துவிடு! உன்னில் ஒருவன் எங்கே போய்ச் சேர்ந்தானோ, அங்கேயே நீயும் போய்ச் சேர்ந்துவிடு! வா, வந்துவிடு!

இவ்வாறு சொல்லிக்கொண்டே சென்று அவன் அந்தச் செருப்பை எடுக்கப் போனபோது...

நாலைந்து புத்தகங்கள்; அதற்கு நடுவே தலை நீட்டிக் கொண்டிருந்தது ஒரு நீண்ட கடிதம்!

இவற்றை யார் இங்கே வைத்துவிட்டுப் போயிருப்பார்கள்?- சுற்றுமுற்றும் பார்த்தான் அவன்; கண்ணுக்கெட்டிய தூரம் வரை யாருமே இல்லை-பொன்னா, பொருளா, எடுத்துத்தான் பார்ப்போமே?

இப்படி நினைத்து அவற்றை எடுத்துப் பார்த்தான்; எல்லாம் பாடப்புத்தகங்கள்!-எந்த மாணவனாவது இவற்றை இங்கே மறந்து வைத்துவிட்டுப் போயிருப்பானோ?-அப்படியிருந்தால் இந்தக் கடிதம் ஏன் இவற்றுக்கு நடுவே தலையை நீட்டிக்கொண்டிருக்கிறது?

கடிதத்தை எடுத்துப் பார்த்தான்; இருட்டில் ஒன்றும் தெரியவில்லை. வெளிச்சத்துக்கு வந்தான்; முத்துக் கோர்த்தாற்போல் அதில் எழுதியிருந்ததாவது:

> அன்பு!-அப்படி என்று ஒன்று உங்களுக்கும் எனக்கும் இடையே இருந்தால், அந்த அன்புள்ள அப்பாவுக்கு!
>
> இறுதி வணக்கம்...

இறுதி வணக்கமாவது?-இப்படி எழுதி வைத்துவிட்டு எவனாவது இந்தக் கடலில் விழுந்து கிழுந்து செத்துத் தொலைந்தானா, என்ன?-அடப் பாவி, இன்னும் கொஞ்சம் முன்னாலேயே இந்தக் கடிதத்தை நான் பார்த்திருக்கக் கூடாதா?

கடிதத்தை மடித்து அவன் வைத்தபடியே வைத்து விட்டுக் கரையோரமாகச் சிறிது தூரம் ஓடிப் பார்த்தான்; ஒரு தடயமும் கிடைக்கவில்லை.

கடலில் குதித்துச் சிறிது தூரம் நீந்தியும் பார்த்தான்; எதுவும் தட்டுப்படவில்லை, அவன் கைக்கு?

''நல்லது, ரொம்ப நல்லது, காணாமற்போனதே ரொம்ப ரொம்ப நல்லது. உன்னை நான் கண்டுபிடித்திருந்தால், உனக்கு நான் உயிர்பிச்சை அளித்திருந்தால்,அதற்காக என்னை நீ அடிக்கக்கூட வந்திருப்பாய்-'இந்த அழகான உலகத்தில் மறுபடியும் என்னை நீ ஏன் வாழவிட்டாய்?' என்று! ஓம் சாந்தி, ஓம் சாந்தி!'' என்று சொல்லிக்கொண்டே, எந்தவிதமான ஏமாற்றமுமின்றி அவன் மறுபடியும் கரைக்கு வந்தான்; கடிதத்தை எடுத்து, விட்ட இடத்திலிருந்து படித்தான்:

''நீங்கள் சொன்னீர்களே, 'நாலும் தெரிந்த நாற்பத் தெட்டு' ஒன்றைப்பற்றி, அந்த நாற்பத்தெட்டை நீங்கள் சொல்வதற்கு முன்னாலேயே தெரியும், எனக்கு! தெரியும் என்றால், ஆளை நீங்கள் காட்டுவதற்கு முன்னால் எனக்குத் தெரியாது; அவருடைய குணாதிசயங்கள் மட்டுமேத் தெரியும்!

'எப்படித் தெரியும் என்கிறீர்களா?-சொல்கிறேன்:

அந்த 'நாற்பத்தெட்டு'க்கு 'இருபத்து நா'லில் ஒரு செல்வம் இருக்கிறது. அந்தச் செல்வத்தைத் துரதிர்ஷ்ட வசமாக நான் காதலித்தேன். அது என்னிடம் காதல் உரையாடுவதாக எண்ணிக்கொண்டு, வாயில் வந்தபடி என்னவெல்லாமோப் பிதற்றும். அந்தப் பிதற்றல்

களிலிருந்துதான் 'நாற்பத்தெட்'டின் அருமை பெருமைகளைப் பற்றி நான் ஓரளவு அறிந்துக் கொள்ள முடிந்தது.

அவற்றையெல்லாம் இங்கே விவரிக்க நான் விரும்பவில்லை; சுருக்கமாகச் சொல்லப்போனால், அது ஒரு நாய்-சொரி பிடித்த நாய். வெறி பிடித்த நாய்!- அவ்வளவே!

அந்த நாயை உங்களுக்கு எதிர்த்தாற்போலேயே என்னுடன் விளையாட விட்டு நீங்கள் வேடிக்கை பார்த்த போதுக் கூட உங்கள் மேல் நான் கோபம் கொள்ளவில்லை; மாறாக, வருத்தமேக் கொண்டேன்-இப்படியும் ஓர் அசட்டு அப்பா நமக்கென்று வந்து வாய்த்திருக்கிறாரே என்று!

அதே நாயை அதன் விருப்பத்துக்கு இணங்க நான் மணக்க வேண்டுமென்று அடுத்த நாளே நீங்கள் வந்து சொன்னபோதுக்கூட, உங்கள் மேல் நான் ஆத்திரம் கொள்ளவில்லை; மாறாக, அனுதாபமேக் கொண்டேன்- பாழும் பணம் உங்களை என்னப் பாடு படுத்துகிறது என்று எண்ணி!

அத்துடன் நில்லாமல், அதற்காக என்னை நீங்கள் அறைய வேறு வந்துவிட்டீர்களே, அப்போதுதான் அந்த அறை என் கன்னத்தில் விழவில்லை அப்பா, இதயத்திலேயே விழுந்துவிட்டது!

அதுவும் எப்போது விழுந்தது என்கிறீர்கள்?-எந்த 'இருபத்து நாலு' என்னை மனப்பூர்வமாகக் காதலிப்பது போல் நடித்து, எந்த 'இருபத்து நாலு' என்னை மனப்பூர்வமாக ஏமாற்ற நினைத்ததோ, அந்த 'இருபத்து நா'லை எண்ணி நான் குமுறிக்கொண்டிருந்தபோது, உங்கள் அறை விழுந்தது என் இதயத்தில்!

அதையும் தாங்கியிருப்பேன், 'மணி என்றோர் அண்ணா இருக்கிறார்' என்ற தைரியத்தில்!-ஆம் அப்பா, 'இருபத்து நா'லிடமிருந்து மட்டுமல்ல; 'நாற்பத்தெட்'டிடமிருந்தும் அந்த அண்ணாவால் என்னைக் காப்பாற்ற முடியும்!-ஆனால் என்ன பிரயோசனம்? உங்களுக்குள்ளப் பணப் பைத்தியம் எங்களை மானத்தோடு வாழவிடாது போலிருக்கிறதே, இந்த உலகத்தில்?

அதனால்தான் வாழ்வைத் தழுவ வேண்டிய இந்த வயதிலே நான் சாவைத் தழுவுகிறேன். என்னுடைய சாவாவது உங்களுடையப் பணப் பைத்தியத்தைத் தெளிய வைக்கட்டும்; அதன் பலனாக அண்ணன் மோகனுக்காவது அவனுடைய விருப்பப்படி கல்யாணம் நடக்கட்டும்.

அம்மாவை எனக்காக அழ வேண்டாமென்று சொல்லுங்கள்; அவர்கள் எனக்காக அழுவதைக் காட்டிலும் உங்களுக்காக அழுவது நல்லது!

நான் வருகிறேன்!-இந்த நேரத்தில் கூட என் மரணத்தைப் பற்றியக் கவலையை விட, என்னுடைய நகைகளைப் பற்றியக் கவலை அதிகமாயிருக்கும் உங்களுக்கு!- விடுங்கள், அந்தக் கவலையை; அவையனைத்தும் 'இன்சூர்' செய்யப் பட்ட 'பார்சல்' மூலம் நாளை உங்களுக்குக் கிடைக்கும்!

இது உங்களுக்குத் தவிர்க்கமுடியாத ஏமாற்றம்தான்; இருந்தாலும் தாங்கிக்கொள்வீர்கள் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது.

நான் வரட்டுமா?-டாடா!

அளவு கடந்த மகிழ்ச்சியுடன்

உங்களை விட்டுப் பிரியும் அருமைக் குமாரி,

அருணா.''

பின் குறிப்பு: 'இந்தக் கடிதத்தையும் பார்சலிலேயே வைத்திருக்கக் கூடாதா?' என்று நீங்கள் நினைக்கலாம்; அப்படி வைத்தால் ஊர் சிரிக்காமல் போய்விடுமே என்றுதான் வைக்கவில்லை- அது சிரித்தாலாவது புத்தி வராதா, உங்களுக்கு?'

கடிதத்தைப் படித்து முடித்ததும் மணி அழவில்லை- சிரித்தான்; சிரித்துவிட்டுச் சொன்னான்:

ஊர் சிரிக்க வேண்டும் என்பது உன்னுடைய எண்ணமானால், இந்தக் கடிதத்தை நான் மறைப்பது தவறு!-இதோ வைத்துவிட்டேன் அருணா. உன்னுடைய

கடிதத்தை இதோ நான் இருந்தது இருந்தபடி இருந்த இடத்திலேயே வைத்து விட்டேன்!

தன்னையும் மீறிக் கரகரத்த குரலில் இவ்வாறு சொல்லிக் கொண்டே, அந்தக் கடிதத்தை இருந்தது இருந்தபடி இருந்த இடத்திலேயே வைத்துவிட்டுத் திரும்பினான் மணி.

அப்போது, ''என்ன கடிதம், ஏன் இந்தக்கோலம்?'' என்று கேட்டுக்கொண்டே அங்கு வந்தான் மோகன்.

''என்னை ஒன்றும் கேட்காதே; அந்தக் கடிதத்தை எடுத்துப் படித்துப் பார், தெரியும்!'' என்றான் மணி, அவனைத் திரும்பிக்கூடப் பார்க்காமல், கடிதத்தை மட்டும் முதுகுப்புறமாகக் கையை நீட்டி அவனுக்குச் சுட்டிக் காட்டி.

மோகனும் அதற்குமேல் அவனை ஒன்றும் கேட்கவில்லை; குனிந்து கடிதத்தை எடுத்தான்.

# 35. ஜன்னலுக்கு வெளியே!

'அவர் என்ன ஆகியிருப்பார்?'

இப்படி ஒரு கேள்வியைத் தனக்குத் தானே போட்டுக் கொண்டு அன்றிரவு முழுவதும் பாமா தன் வீட்டுக்குள்ளேயே நடந்து பார்த்தாள்; நின்று பார்த்தாள்; படுத்துப் பார்த்தாள்; எழுந்து உட்கார்ந்தும் பார்த்தாள் - அக்காவின் லேசான குறட்டை ஒலிதான் அதற்குப் பதிலாகக் கிடைத்ததே தவிர, வேறொரு பதிலும் கிடைக்கவில்லை!

அவளுக்குத் தெரியும், அந்த மாதிரி வழிக்கெல்லாம் அவர் போகக் கூடியவர் அல்லவென்று - பிறருக்குத் தெரியுமா, அது?

அதிலும், யாரோ ஒருப் புண்ணியவான் செய்த சூழ்ச்சி அது என்று வேறு சொல்கிறார்கள்- உலகத்தில் எப்போதுமே முதல் வெற்றி சூழ்ச்சிக்குத்தானே கிடைக்கிறது?- அந்த வெற்றி அதற்கும் கிடைத்தால் தன்னுடைய கதி?...

அவருடைய பிரிவால் தனக்குப் பால் கசக்காது; ஏனெனில் தான் பாலே சாப்பிடுவதில்லை. படுக்கையும் நோகாது; ஏனெனில் தனக்குப் படுக்கை என்று ஒன்று இல்லவேயில்லை. - எப்போதும் உறுத்தும் கோரைப் பாய்தான் அப்போதும் உறுத்தும்!

ஆனால்...

ஆனால் என்ன? - முதல் வெற்றி சூழ்ச்சிக்குக் கிடைத்தாலும், இரண்டாவது வெற்றி நிச்சயம் தர்மத்துக்குக் கிடைக்கும்; அந்த வெற்றியும் இன்றிரவே கிடைத்து விட்டால்? - எனக்கு நிம்மதி!

இல்லாவிட்டால்...

ஐயாவுக்கும், அம்மாவுக்கும் அது தெரியலாம்; அவர்கள் அதை நம்பி, 'போயும் போயும் அவனைக் கட்டிக் கொண்டா மாரடித்தாள், இவள்!' என்று நினைக்கலாம்.

அதற்குப் பிறகு இருக்கவே இருக்கிறாள் அக்கா, ஒன்றும் இல்லாததற்கெல்லாம் ஒப்பாரி வைக்க!

இந்தச் சங்கடங்களிலிருந்தெல்லாம் தான் தப்ப வேண்டுமானால் இன்றிரவு அவர் காதும் காதும் வைத்தாற்போல் விடுதலையாகி வீடு வந்து சேர்ந்துவிட வேண்டும்- சேர்ந்திருப்பாரா? சேர்ந்து விடுவாரா?

யாருக்குத் தெரியும்? - இங்கே வந்து இப்படித் தவித்துக் கொண்டிருப்பதைக் காட்டிலும் பேசாமல் மணி சாருடனேச் சென்றிருந்தால், விஷயத்தை உடனேத் தெரிந்து கொண்டு வீடு திரும்பியிருக்கலாம். அவர் என்னமோத் தன்னை அழைக்கத் தான் அழைத்தார்; தான்தான்...

எங்கே அழைத்தார், அதற்குள்தான் யாரோ ஒருவன் அந்தச் சேதியை எடுத்துக் கொண்டு அவரைத் தேடி வந்து விட்டானே? அவன் வந்ததும், 'நீங்கள் போங்கள், நான் பார்த்துக் கொள்கிறேன்' என்று சொல்லி, அவர்தான் தன்னை அனுப்பிவிட்டாரே?...

சட்டம் எல்லாருக்கும் பொது என்கிறார்கள்; அப்படி யிருக்கும்போது முன்னாள் போலீஸ் அதிகாரியின் மகன் என்பதற்காக அது வளைந்துக் கொடுககுமா? - அப்படியே வளைந்துக் கொடுத்தாலும் அவர் அதை விரும்பலாம்; மணி சார் விரும்புவாரா? - பணம் எல்லாருக்கும் பொதுவா யில்லாத வரை, சட்டம் எல்லாருக்கும் பொதுவாயிருக்க முடியாது என்று சொல்பவராயிற்றே, அவர்!

அது என்னமோ உண்மைதான்; ஆனாலும் இவருக்கு வந்த ஆபத்து தவறிப்போய் அவருடையத் தலையில் விழுந்திருக்கும்போது...

எந்தக் குறிக்கோளும் கொஞ்சம் குறி தவறத்தானே செய்யும்?

ஆகவே, 'எப்படியாவது வெளியே வந்தால் போதும்!' என்றுதான் இவரும் நினைப்பார்; அவரும் நினைப்பார்!- எப்படியோ விஷயம் வில்லங்கமின்றி முடிந்தால் நல்லது!

இவ்வாறு எண்ணிக் கொண்டே அவள் ஜன்னலோரமாக வந்து நின்றாள். வானத்தில் முளைத்த விடிவெள்ளி, 'இன்னுமா நீ தூங்கவில்லை?' என்பதுபோல் அவளை எட்டிப் பார்த்தது; சில்லென்றடித்த பனிக்காற்று, 'எந்த விதமான செலவும் இல்லாமல் உன்னுடைய அறையை நான் ஏர்-கண்டிஷன் செய்து வைத்திருக்கும்போதுக் கூடவா உனக்குத் தூக்கம் பிடிக்கவில்லை?' என்பதுபோல் அவளை ஒரு தழுவுத் தழுவித் தன் கை வரிசையைக் காட்டிற்று. கண்ணைக் கிறங்க வைத்த அந்தக் காலை இளங்காற்றிலே, 'கொஞ்சம் தூங்கித் தான் பார்ப்போமே?' என்று அவள் திரும்பினாள். அப்போது 'களுக்'கென்ற சிரிப்பொலி அவள் காதில் விழுந்தது. சுற்று முற்றும் பார்த்தாள்; யாரையும் காணவில்லை. அக்காதான் சிரித்துவிட்டு ஏதும் அறியாதவள் போல் இருக்கிறாளோ என்னமோ என்று எண்ணி, ''அக்கா, அக்கா! உன்னைத்தான் அக்கா!'' என்று ஒரு முறைக்கு இரு முறையாகக் குரல் கொடுத்துப் பார்த்தாள்; 'கர்ர்ர், கர்ர்ர்'

என்ற சத்தத்தைத் தவிர அவளிடமிருந்து வேறு எந்தச் சத்தமும் வரவில்லை. 'வெறும் மனப் பிரமையோ, என்னமோ!' என்று அவள் மறுபடியும் திரும்பி, மேலே ஓர் அடி எடுத்து வைத்தாள்; மீண்டும் 'களுக்' கென்றச் சிரிப் பொலி அவள் காதில் விழுந்தது. அதைத் தொடர்ந்து, ''என்னடி! உணவும் செல்லவில்லை, உறக்கமும் கொள்ள வில்லையா?'' என்ற மீனாட்சியம்மாளின் குரலும் கேட்கவே, ''நீங்கள்தானா! யாரோ, என்னமோ என்று நான் பயந்தேப் போனேன்!'' என்று சொல்லிக்கொண்டே அவள் முன்னால் எடுத்து வைத்தக் காலைப் பின்னால் எடுத்து வைத்தாள். தன் அறையின் ஜன்னலுக்குப் பின்னால் நின்று அவளைக் கவனித்துக் கொண்டிருந்த மீனாட்சியம்மாள், ''வானத்தில் நிலவைக்கூடக் காணோமேடி, உன்னுடைய முகம் ஏன் இப்படி வாட்டமுற்றிருக்கிறது?'' என்றாள் மேலும் தொடர்ந்து.

''போங்களம்மா, நீங்கள் ஒண்ணு!'' என்று சிணுங்கிக் கொண்டே ஜன்னல் கதவைச் சாத்தினாள் பாமா.

''திறடி, திற! ஆளில்லாமல் கதவைச் சாத்தி என்னப் பிரயோசனம்? திறடி, திற!'' என்றாள் மீனாட்சியம்மாள், அப்போதும் அவளை விடாமல்.

பாமா திறக்கவில்லை!

மறுநாள் பொழுது விடிந்ததும் முதல் நாள் இரவு பாமா தூக்கமில்லாமல் தவித்ததைப் பற்றியே அந்த வீட்டில் எல்லோரும் பேசினார்கள். அவர்களுடையப் பேச்சில் தான் மட்டும் கலந்துக் கொள்ளாமல் இருப்பானேன் என்று கலந்துக் கொண்ட சொக்கலிங்கனார், ''கல்யாணம் ஆகும் வரை அப்படித்தான் இருக்கும்; இல்லையா, பாமா?'' என்று பாமாவையேக் கேட்டு வைத்தார். ''அப்படித்தான் இருக்கும், போங்களேன்!'' என்று அவர் முகத்தில் அடித்தாற்போல் சொல்லிவிட்டு, அதற்குமேல் அவள் அங்கே இருக்க விரும்பாமல் ஆபீசுக்குப் போய்விட்டாள்!

அங்கே...

அன்றும் காணவில்லை, மோகனை!- இப்போதுதான் அவளையும் அறியாமல் அவள் உள்ளத்தில் கவலைப் படர்ந் தது; அதன் அறிகுறியாக அவள் முகத்திலும் கருமை நிறைந்தது.

என்ன ஆகியிருப்பார், அவர்? இந்த மணி சார் கூடத் தன்னைத் தேடி வந்து ஒன்றும் சொல்லக்காணோமே! நாமா வது அவரைத் தேடிச் சென்று விசாரித்துப் பார்ப்போமா?...

இந்த எண்ணத்துடன் அவள் மணியின் அறையை நோக்கிச் சென்றபோது, பரந்தாமனின் அறையிலிருந்து அவன் வெளியே வந்து கொண்டிருந்தான்.

''உங்களைத்தான், ஒரு நிமிஷம்!'' என்றாள் அவள்.

''என்ன மோகன்தானே? இன்று வரமாட்டான், ஆபீசுக்கு; நான் வரட்டுமா?'' என்றான் அவன், வெட்டு ஒன்றும் துண்டு இரண்டுமாக.

இது என்னவோபோலிருந்தது அவளுக்கு-இன்று ஏன் இவரிடம் இந்த மாறுதல்? எதற்காக இவர் இன்று இவ்வளவு சீக்கிரம் என்னிடமிருந்து விடை பெற்றுக் கொள்ள நினைக்கிறார்?- ஒன்றும் புரியவில்லை அவளுக்கு; இருந்தாலும் அதை வெளியேக் காட்டிக்கொள்ளாமல், ''ஏன் என்று தெரிந்துக் கொள்ளக் கூடாதா, நான்?'' என்றாள் அவனைத் தொடர்ந்து.

''அதை என்னிடமிருந்து தெரிந்துக் கொள்வதைவிட அவனிடமிருந்தேத் தெரிந்துக் கொள்வது நல்லது!''

''அப்படியானால்...?''

அவள் தயங்கினாள்; ''என்ன?'' என்று அவன் தூண்டினான்.

அவள் தன் குரலைக் கொஞ்சம் தாழ்த்தி, ''அவர் இன்னும் அங்கேயேதான் இருக்கிறாரா?'' என்றாள், அவன் காதோடுக் காதாக.

''ஓ, அதைக் கேட்கிறீர்களா நீங்கள்! அதெல்லாம் பழையக் கதையாகிவிட்டதே? அவன் நேற்றே அங்கிருந்து வந்துவிட்டான்!''

''அப்பாடா! இப்போதுதான் போன உயிர் திரும்பி வந்ததுப் போலிருக்கிறது, எனக்கு!'' என்றாள் பாமா.

''உங்களுக்கு மட்டுமென்ன? எனக்கும் நேற்று அப்படித்தான் இருந்தது. ஆனால் அவன் அப்பாவுக்கு அது ஒன்றும் அவ்வளவுப் பெரிய விஷயமாக இல்லை. அவர் நினைத்தால் குற்றவாளியை நிரபராதியாக்க முடியும் போலிருக்கிறது. நிரபராதியைக் குற்றவாளியாக்க முடியும் போலிருக்கிறது! நான் நினைக்கிறேன், கடவுள்கூட அவருக்கு அடுத்தபடியாகத்தான் இருக்கவேண்டுமென்று!-சரி, நான் வரட்டுமா?''

''இன்னும் ஒரே ஒரு நிமிஷம்; என்றுமில்லாத அவசரம் இன்று மட்டும் ஏன் உங்களுக்கு?''

''அதுவா? அதுதான் எனக்கும் தெரியவில்லை!- ஒருவேளை என்னைச் சுற்றியிருக்கும் ஒவ்வொருவரிட மிருந்தும் -ஏன், இந்த உலகத்திலிருந்துங்கூட நான் அவசர அவசரமாகப் போய்விட நினைக்கிறேனோ, என்னமோ?''

''நீங்கள் நினைப்பது உங்களுக்கே தெரியவில்லையா?''

''தெரியவில்லை, இப்போது!''

''அதற்குக் காரணம் விரக்தியாயிருக்கலாம்; அந்த விரக்திக்குக் காரணம்?''

''எதைச் சொல்லுவேன், யாரைச் சொல்லுவேன்? நானாகவே இருக்கலாம்!''

''அப்படித்தான் நானும் நினைக்கிறேன்! ஏனெனில், பல தொல்லைகளுக்கு உங்களை நீங்களே காரணமாக்கிக் கொண்டிருக்கிறீர்கள்!''

''அது நான் வந்த வழி!-சில சமயம் எதைக் கண்டும் ஓடக்கூடாது என்றுத் தோன்றுகிறது; சில சமயம் ஓடிவிட்டால் தேவலை என்றுத் தோன்றுகிறது எனக்கு!-இந்த

இரண்டுங் கெட்டான் நிலையில்தான் நேற்றும் இருந்தேன்; இன்றும் இருக்கிறேன்!''

''இல்லை; இன்று கொஞ்சம் வேறுபட்டிருக்கிறீர்கள்!''

அவள் அப்படிச் சொன்னதும், அவன் தன்னைத் தானே ஒரு முறை ஏற இறங்கப் பார்த்துக்கொண்டான்; பார்த்துக் கொண்டே சொன்னான்:

''ஆம், இன்று நான் கொஞ்சம் வேறுபட்டுத்தான் இருக்கிறேன்! இல்லாவிட்டால் இன்று மட்டும் தன்னுடன் இருக்கும்படி அவன் அத்தனைக் கெஞ்சுக் கெஞ்சியும் நான் வேலைக்கு வந்திருப்பேனா?''

''எவன்?''

''ஓ, நானே அகப்பட்டுக்கொண்டு விட்டேனா உங்களிடம்? அவன்தான், உங்கள் காதலன்...''

''எதற்காகக் கெஞ்சினார், உங்களை?''

''அதுதான் புதிய கதை; அந்தக் கதையைத்தான் என்னிடமிருந்து தெரிந்துகொள்வதைவிட அவனிடமிருந்து தெரிந்துகொள்வது நல்லது என்றேன், நான்!''

''ஏன், நீங்கள் சொல்லக்கூடாதா அதை?''

''மன்னியுங்கள், அதை நான் சொல்வதற்குமில்லை; சொல்லவும் முடியாது!''

''சரி, அவரை நான் பார்ப்பதற்காவது...''

''ஏற்பாடுதானே, அவசியம் செய்கிறேன்!''

''நன்றி; நான் வரட்டுமா?'' என்றாள் அவள், இம்முறை அவனை முந்திக் கொண்டு!

''அந்தப் பெருமை நமக்கு வேண்டாம்; ஔவை கொடுத்த தென்னை மரத்துக்கே இருக்கட்டும்!'' என்றான் அவன்.

''எந்தப் பெருமை?''

''நன்றி காட்டும் பெருமைதான்!''

அவள் சிரித்தாள்; அவன் அதை வெறுத்தான்!

# 36. அன்புக்கொரு ஜீவன்

பாமாவின் சிரிப்பை மட்டும் என்ன-நெடுங் கடலை, நீலவானை, உதயசூரியனை, பூரணசந்திரனை, தாரகையை, தென்றலை, வண்ண மலரை, பாடும் குயிலை, ஆடும் மயிலைக் கூட மணி வெறுக்கக்கூடிய நிலையில்தான் இருந்தான் அப்போது!

ஆம், அருணாவின் மரண சாசனம் அந்த அளவுக்கு வெறுப்பு மூட்டியிருந்தது, அவனுக்கு. வெறுப்பு அவளுடைய மரண சாசனத்தின் மேல் மட்டுமல்ல; அவள் மேலும்தான்!

என்னப் பெண்கள் இந்தக் காலத்துப் பெண்கள்? எடுத்ததற்கெல்லாம் தங்களைத் தாங்களே மாய்த்துக் கொண்டு! எது தங்களை மாய்க்க வருகிறதோ, அதையல்லவா மாய்க்க வேண்டும், இவர்கள்!

அடிக்கடி தனக்குத் தொல்லை கொடுத்து வந்த காளை ஒருவனை, கன்னி ஒருத்தி செருப்பால் அடித்தாளாமே, அந்தத் தைரியம் வேண்டுமானால் இவர்களுக்கு வரவேண்டாம்; அடிக்கடித் தன்னுடன் வம்புக்கு நின்றப் பதி ஒருவனை, பத்தினி ஒருத்திப் பல்லால் கடித்தேக் கொன்று விட்டாளாமே, அந்தத் துணிவு வேண்டுமானால் இவர்களுக்குப் பிறக்க வேண்டாம்-சட்டம் இருக்கிறதே, பதினெட்டு வயது நிரம்பிவிட்டால் எந்தப் பெண்ணும் தனக்கு விருப்பமானவனை எந்தவிதமானத் தடைக்கும் அஞ்சாமல் திருமணம் செய்துக்கொண்டு விடலாம் என்று. உரிமை இருக்கிறதே, அந்தத் திருமணத்துக்குப் பிறகும் அவன் தனக்குப் பிடிக்கவில்லையென்றால் அவனிடமிருந்து சட்ட ரீதியாக அவள் விலகிக்கொண்டு விடலாமென்று. அவற்றையாவது பயன்படுத்திக் கொள்ளக்கூடாதா, இவர்கள்?

வாழ்க்கையில் இவர்களுக்கு உதவக் கடலை விட்டால் வேறு கதி கிடையாதா? மூட்டைப் பூச்சி மருந்தை விட்டால் வேறு வழி கிடையாதா? - கொடுமை, கொடுமை!

இந்தக் கொடுமைக்குப் படிக்காத பெண்கள்தான் பலியாகிறார்கள் என்றால், படித்த பெண்களும் அல்லவா பலியாகிவிடுகிறார்கள்?

இந்த லட்சணத்தில்தான் இவர்களில் பலருக்கு வாழ்க்கையில் உள்ள ஒரே பிரச்னைக் காதல் பிரச்னையாகப் படுகிறது! அந்தக் காதல் பிரச்னையை மையமாக வைத்து எழுதப்படும் கதைகளையும், எடுக்கப்படும் படங்களையும் விழுந்து விழுந்துப் படிக்கிறார்கள்; விழுந்து விழுந்துப் பார்க்கிறார்கள், பலன்? அதற்காக இவர்கள் வாழ்வதைவிடச் சாவதுதான் அதிகமாயிருக்கிறது!

சாகட்டும், சாகட்டும்; காதலுக்காக இன்னும் எத்தனை பேர் வேண்டுமானாலும் இந்த உலகத்தில் சாகட்டும் - அதை நான் வரவேற்கிறேன், அத்துடன் சுயநலமும் சேர்ந்து சாவதால்!

ஆனால் இந்த அருணாக் காதலுக்காகச் சாக வில்லையே, காசுக்காகவல்லவாச் செத்திருக்கிறாள்?

பாழும் பணம் அவளுடைய அப்பாவையே அல்லவா அவளுக்கு எமனாக்கியிருக்கிறது!

அவர்தான் என்ன செய்வார், பாவம்! தனக்கு மேலுள்ள வர்க்கத்தார் தன்னைவிடக் குறைவாக உழைத்து, தன்னைவிட மேலான நிலையில் வாழ்வதை அவர் ஒவ்வொருக் கணமும் பார்க்கிறார்; அவர்களைப் போலவேத் தானும் வாழவேண்டுமென்று நினைக்கிறார்; அதற்காகத் திருடப் பயந்தாலும் திருடர்களுக்குத் துணையாயிருக்கப் பயப்படவில்லை; சுகானந்தத்தை வெறுத்தாலும் அவருடையப் பணத்தை வெறுக்கவில்லை!

அந்தப் பணத்துக்காக அவர் தன்னை மட்டுமல்ல, தன் மகளையும் இழக்கச் சித்தமாயிருந்திருக்கிறார். ஆனால் அந்த

இழப்பு அவர் எதிர்பார்த்ததற்கு நேர்விரோதமாகவல்லவா நேர்ந்திருக்கிறது, இப்போது?

அனுதாபத்துக்குரியவர்கள், அனுதாபத்துக்குரியவர்கள்! காதலில் பெண்ணுக்கு ஏமாற்றம்; கல்யாணத்தில் அப்பாவுக்கு ஏமாற்றம்! அனுதாபத்துக்குரியவர்கள், அனுதாபத்துக்குரியவர்கள்!

யார் அனுதாபத்துக்குரியவர்கள், அவர்களா நானா? அதுகூட யோசிக்க வேண்டிய விஷயமாகத்தான் இருக்கிறது. ஏனெனில், யாரை நாம் அனுதாபத்துக்குரியவர்களாக நினைக்கிறோமோ, அவர்கள் நம்மை அனுதாபத்துக்குரியவர் களாக நினைக்கிறார்கள் இப்போது! நினைக்கட்டும் நினைக் கட்டும், யார் என்ன வேண்டுமானாலும் நினைக்கட்டும்!

இவ்வாறு எண்ணிப் பொருமியபடி அவன் தன் வேலையில் கவனம் செலுத்த ஆரம்பித்தபோது , "சார், கிடைத்துவிட்டது சார்!" என்று சொல்லிக்கொண்டே ஓடி வந்தான் பியூன் பிச்சையா.

அவ்வளவுதான்; "எங்கே கிடைத்தது, எப்போது கிடைத் தது? யார் வந்து சொன்னது, இதை?" என்று கேள்வி மேல் கேள்வியாகக் கேட்டுக்கொண்டேத் துள்ளி எழுந்தான் மணி.

பிச்சையாவுக்கு ஒன்றும் புரியவில்லை; "எதைக் கேட்கிறீர்கள், நீங்கள்?" என்று தலையைச் சொறிந்தான்.

"எதைச் சொல்கிறாய் நீ?" என்று மணி அவனைத் திருப்பிக் கேட்டான்.

"காலையில் சைக்கிள் சாவியைக் காணோமென்று தேடிக் கொண்டிருந்தீர்களே, அதுக் கிடைத்துவிட்டது சார்!"

"ஓ அதுவா? சரி சரி, கொடு இப்படி!" என்று அதை வாங்கித் தன் கால்சட்டைப் பைக்குள் வைத்துக்கொண்டு "போ போ, போய் உன் வேலையைப் பார்!" என்றான் மணி.

அவன் போய்விட்டான்; 'இது என்ன தொல்லை! நான் விட்டாலும் அந்த நினைப்பு என்னை விடாதுபோலிருக்

கிறதே? அவன் ஏதோ சொல்ல வந்தால், நான் ஏதோ கேட்டுத் தொலைக்கிறேனே?' என்று எண்ணி மருகியவனாய், மறுபடியும் தன் வேலையில் முனைந்தான் மணி.

அப்போது சக குமாஸ்தா ஒருவன் அவனை மெல்ல அணுகி, '' ஏன் சார், அந்த மோகன் பதைபதைக்கும் வெய்யிலில் கடற்கரையில் திரிந்துக் கொண்டிருக்கிறானே, அதைப் பற்றி ஏதாவது தெரியுமா உங்களுக்கு?'' என்று கேட்டான்.

''தெரியாதே!'' என்றான் மணி, ரத்தினச் சுருக்கமாக.

''போங்கள் சார்! அவனைப்பற்றி உங்களுக்குத் தெரியாதென்றால் வேறு யாருக்குத் தெரியப்போகிறது?'' என்றான் அவன்.

''என்னதான் நண்பனாயிருந்தாலும், ஒருவனைப்பற்றி இன்னொருவனுக்கு எல்லாமே தெரிந்திருக்கவேண்டுமென்பதில்லை; தெரிந்திருக்க வேண்டுமென்ற அவசியமும் கிடையாது!'' என்றான் மணி, மேலும் பேச்சை வளர்த்த விரும்பாமல்.

அவன் போய்விட்டான்; 'இந்த ஆபீஸ் வேறு எங்கேயாவது இருந்து தொலைத்திருக்கக் கூடாதா? அவனும் கடற்கரையிலேயேத் திரிந்துகொண்டிருக்கிறான்;இதுவும் கடற்கரையிலேயே இருந்து கொண்டிருக்கிறது. இவனைத் தொடர்ந்து இன்னும் எத்தனை பேர் வந்து அவனைப் பற்றி என்னிடம் கேட்கப்போகிறார்களோ? அவர்களுக்கெல்லாம் நான் என்ன பதில் சொல்லப்போகிறேனோ?' என்று முணுமுணுத்தவனாய் எடுத்த 'பைலை' எடுத்த இடத்திலேயே விட்டெறிந்துவிட்டு எழுந்து நின்றான் மணி.

''ஐயா உங்களைக் கூப்பிடுகிறார்!'' என்ற 'அழைப்பு' டன் அவனுக்கு எதிர்த்தாற்போல் வந்து நின்றான் பிச்சையா.

''நல்ல சமயத்தில்தான் நீயும் வந்து கூப்பிடுகிறாய்; இதோ வந்துவிட்டேன் என்று சொல்!'' என்று சொல்லி, அவனை அனுப்பிவிட்டு, அருகிலிருந்த தண்ணீர்க் கூஜாவை

எடுத்து அதே மூச்சில் ஒரு நெட்டு நெட்டிவிட்டுப் பரந்தாமன் அறைக்குள் நுழைந்தான் மணி.

''வாருங்கள்; உட்காருங்கள்!'' என்றார் அவர்.

''உட்காரச் சொல்வது உங்கள் கடமை; நிற்பது என் கடமை. நீங்கள் விஷயத்தைச் சொல்லுங்கள்'' என்றான் அவன்.

''காலையிலிருந்து நான் உங்களிடம் கொஞ்ச நேரம் தனி யாகப் பேச வேண்டும் என்று நினைக்கிறேன்; பேசலாமா, வேண்டாமா என்று தயங்கித் தயங்கி நிற்கிறேன்!''

''பேச வேண்டுமானால் பேசுங்கள்; பேச வேண்டா மென்றால் பேச வேண்டாம்!''

''நானும் அப்படிச் சொல்லி, நீங்களும் இப்படிச் சொன்னால் என்ன செய்வதென்று தெரியவில்லையே எனக்கு! எதற்கும் இன்னும் கொஞ்ச நேரம் நான் யோசித்துப் பார்க்கிறேன்; நீங்கள் போய் வருகிறீர்களா?'' என்றார் அவர்.

'இதற்குத்தானா என்னைக் கூப்பிட்டீர்கள்!' என்பது போல் முகத்தைத் தொங்கவிட்டுக் கொண்டு அவன் திரும்பினான்.

''ஒரு நிமிஷம்!'' என்றார் அவர் மீண்டும்.

''என்ன, சொல்லுங்கள்?'' என்றான் அவன், மறுபடியும் திரும்பி.

''இன்று மாலை என்னுடன் எங்கள் வீட்டுக்கு வர முடியுமா, உங்களால்?''

''மன்னிக்க வேண்டும்; இன்று வேறொருவரிடம் நான் போகவேண்டியிருக்கிறது!''

''நாளை?''

''அவசியம் வருகிறேன்!''

அவன் போய்விட்டான்; 'இவனைத் தவிர வேறு யாரிடமும் அதைச் சொல்ல முடியாது; ஆனால், எப்படிச் சொல்வது என்றுதான் தெரியவில்லை!' என்று தனக்குத்தானே எண்ணிப் பெருமூச்சு விட்டார், அவர்!

அருணாவின் சடலம் கடற்கரையில் ஒதுங்கும், ஒதுங்கும் என்று அன்று முழுவதும் அங்குமிங்குமாக அலைந்துக் கொண்டிருந்த மோகன், கடைசியாக அலுத்துப் போய் அங்கிருந்த ஒருக் கட்டுமரத்தின் மேல் உட்கார்ந்தான்.

இப்போது அவன் கண்கள் அழுதுப் புலம்பவில்லை, மனம்தான் அழுது புலம்பிக்கொண்டிருந்தது.

ஐயோ, அருணா! என்னைவிட உன்னை நான் தைரியசாலி என்று நினைத்தேனே? கடைசியில், எனக்குள்ள தைரியம்கூட உனக்கு இல்லாமற் போய்விட்டதே?

அப்படி என்ன நடந்துவிட்டது, இவ்வளவு அவசரப் பட்டு நீ இந்த முடிவுக்கு வந்துவிட?-அப்பா சொன்ன ஒரு வார்த்தை, அப்பா அடித்த ஓர் அடி-அதற்கா இவ்வளவு பெரிய தண்டனை எங்களுக்கு?

ஒரே ஒரு முடி உதிர்ந்தால்கூட கவரிமான் உயிர் வாழாது என்கிறார்களே, அந்த இனத்தைச் சேர்ந்தவளாவல்லவா ஆகிவிட்டாய், நீ?-அந்த அளவுக்கு அப்பா என்ன செய்தார், உன்னை? யாரோ ஒரு கயவனுடன் அவர் உன்னை விளையாடவிட்டு வேடிக்கை பார்த்தவர் என்று எழுதியிருக்கிறாயே, அந்த விளையாட்டா உன்னை இந்த வினைக்கு உள்ளாக்கிவிட்டது?

தாங்க முடியாத துக்கம் அருணா, இது தாங்க முடியாத துக்கம்!-மானம் பெரிதென்று நினைக்கும் நீ, வாழ்வு பெரி தென்று நினைக்கும் அப்பாவுக்கா பெண்ணாய் வந்து பிறக்க வேண்டும்? அதற்காக வாழ்வைக் காதலிக்க வேண்டிய இந்த வயதிலே, நீ சாவையாக் காதலிக்க வேண்டும்?

அப்பாவுக்காகச் சாகத் துணிந்த நீ, அம்மாவுக்காக வாழத் துணிந்திருக்கக் கூடாதா? -அவர்கள் என்ன செய்தார்கள் உன்னை? சேதி கேட்டு அலறி விழுந்தவர்கள் இன்னும் எழுந்திருக்கவேயில்லையே, அருணா!

அவர்களுக்கு அடுத்தபடியாக அந்த வீட்டில் என் அன்புக்கு ஆதாரமாயிருந்த ஒரே ஜீவன் நீ!-உன்னுடைய

பிரிவை நான் எப்படிச் சகிப்பேன்? உன்னுடைய மறைவை நான் எப்படி மறப்பேன்?

உலகமெல்லாம் சமாதானத்தில்தான் சந்தோஷம் கிடைக்கும் என்கிறார்கள்; ஆனால் எனக்கோ உன்னுடன் சண்டையிடுவதில்தான் சந்தோஷம் இருந்தது!-அந்தச் சந்தோஷத்துக்காக இனி நான் யாருடன் சண்டையிடுவேன், யாருடன் சச்சரவிடுவேன்?

நீ இல்லாத அந்த வீட்டில் இனி என்ன இருக்கப் போகிறது, எனக்கு?-அப்பாவின் உருட்டலும் மிரட்டலும் இருக்கும்; அம்மாவின் கண்ணீரும் கம்பலையும் இருக்கும்!-அதைத் தவிர அன்புக்கென்று ஒரு ஜீவன், ஆசைக்கென்று ஒரு ஜீவன் அங்கே ஏது அருணா, ஏது?...

இந்த ஆறாத் துயருடன் அவன் ஆழ்கடலையே வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்த போது, 'ஏன், நான் இல்லையா?' என்பது போல் பாமா வந்து நின்றாள், அவனுக்கு எதிரே!

அவளைக் கண்டதும், ''நீ எப்படி வந்தாய், இங்கே?'' என்றான் அவன், அந்த நிலையிலும் வியப்புடன்.

''உன்னைப் பார்க்க வேண்டுமென்று சொன்னார்கள்; அழைத்துக்கொண்டு வந்தேன்!'' என்றான் மணி, அவளை முந்திக்கொண்டு.

# 37. வாழ்க்கையிலும் மாணவி

ஞானி கடவுளை நெருங்குகிறானோ இல்லையோ, விஞ்ஞானி கடவுளை நெருங்குகிறான் என்பதில் யாருக்கும் சந்தேகம் இருக்க முடியாது.

அந்த விஞ்ஞானியாலேயே இதுவரை விடை காண முடியாத புதிர்கள் இன்னும் எத்தனையோ இந்த உலகத்தில் இருந்துகொண்டுதான் இருக்கின்றன.

அவற்றில் ஒன்று, மனிதன் சாவைத் தழுவினாலும், சாவு மனிதனைத் தழுவாதது!

எல்லோருடைய விஷயத்திலும் இது உண்மையாகி விடுவதில்லையென்றாலும், அருணாவின் விஷயத்தில் உண்மையாயிற்று. ஆம், அவள் சாவை விரும்பினாலும் சாவு அவளை விரும்பவில்லை. ஆகவே, 'நீ போடியம்மா, உன்னை ஏற்றுக் கொள்ள நாங்கள் தயாராயில்லை!' என்பது போல், கடல் அலைகள் அவளை எந்த வேகத்தில் பின்னால் இழுத்துக்கொண்டு சென்றனவோ, அதே வேகத்தில் முன் னால் தள்ளிக்கொண்டு வந்து விட்டுவிட்டுப் போய்விட்டன!

பேச்சு மூச்சற்றுக் கரையிலே ஒதுக்கப்பட்டுக் கிடந்த அவளை, அந்தப் பக்கமாக அப்போது வந்துக் கொண்டிருந்த பரந்தாமன் பார்த்தார். ப்ார்த்ததும், 'இந்த ஊர் வம்பெல்லாம் நமக்கு எதற்கு?' என்று அவர் அப்பால் போய்விடவில்லை; அவ்வாறு போவதற்கு இளம் பிராயத்தில் அவர் பெற்றிருந்த 'சாரணர் பயிற்சி'யும் இடம் கொடுக்கவில்லை. ஆகவே, அவளுக்கு அளிக்கவேண்டிய 'முதல் உதவி'யைத் தானே அளித்த பின், அவளைத் தன் காரிலேயே வைத்து மருத்துவமனைக்குக் கொண்டு போனார். வழியில் மூர்ச்சை தெளிந்து எழுந்த அருணா நடந்ததை ஒருவாறுப் புரிந்துக் கொண்டு, "எங்கேப் போகிறீர்கள்?" என்றுக் கேட்டாள்.

"ஏன், மருத்துவமனைக்கு!" என்றார் அவர்.

"ஐயோ, வேண்டாம்! அங்கே என்னைக் குற்றவாளி யாக்கிவிடுவார்கள்; இங்கேயே இறக்கி விட்டுவிடுங்கள்!" என்றாள் அவள்.

"இங்கேயே இறக்கி விட்டுவிடுவதற்கா உங்களை நான் இவ்வளவு தூரம் கொண்டு வந்தேன்? சும்மா வாருங்கள்; தற்செயலாக நேர்ந்த விபத்து என்று சொன்னால், உங்களை யாரும் அங்கேக் குற்றவாளியாக நினைக்க மாட்டார்கள்!"

"மன்னியுங்கள்; அப்படியெல்லாம் சொல்லி என்னைக் காப்பாற்றிக் கொள்ள நான் விரும்பவில்லை. அத்துடன்..."

''அத்துடன் என்ன?''

''நானே தற்கொலை செய்துகொள்வதாக அங்கே ஒரு கடிதம் வேறு எழுதி வைத்திருக்கிறேன்!''

''எங்கே, கடற்கரையிலா?''

''ஆமாம்!''

''ஐயையோ! முதலில் அங்கே போய் அதை எடுத்துக் கொண்டு விடவேண்டுமே, நாம்? இல்லாவிட்டால் போலீசார் அனாவசியமாகத் தொந்தரவு கொடுப்பார்களே!''

இப்படிச் சொல்லிக்கொண்டே வந்த வழியே காரைத் திருப்பினார் அவர். 'ஏதோ ஒரு வழி; அந்த வழி மருத்துவ மனைக்குச் செல்லாமலிருந்தால் சரி!' என்பதுபோல் அருணா அமைதியானாள்!

கடற்கரைச் சாலையில் காரை நிறுத்திவிட்டு, ''நீங்களும் வருகிறீர்களா? இல்லை, நானே போய்ப் பார்க்கட்டுமா?'' என்றார் பரந்தாமன்

''இந்த ஈர உடையில் நான் எப்படி உங்களுடன் வருவேன்? நீங்களே போய்ப் பாருங்கள்!'' என்றாள் அருணா.

''நீங்கள் கடிதம் எழுதி வைத்த இடத்தைப் பற்றிக் குறிப்பாக ஏதாவது...''

''ஒன்றும் சொல்வதற்கில்லை, நாலைந்து பாடப் புத்தகங்களுக்கு நடுவே அதை நான் எழுதி வைத்தேன் என்பதைத் தவிர!''

''அப்படியானால் நீங்கள்...?''

''கல்லூரியில் மட்டுமல்ல, வாழ்க்கையிலும் மாணவி!''

வாழ்க்கையிலும் மாணவி!-வார்த்தை சிறிதாயிருந்தாலும் பொருள் பெரிதாயிருக்கிறதே?

எந்தக் கசப்பான அனுபவத்துக்குப் பிறகு, இந்த ஞானோதயம் இவளுக்கு உண்டாகியிருக்கிறதோ? அந்தக் கசப்பான அனுபவம் என்னவாயிருக்கும்?-வேறு என்ன

வாயிருக்கப் போகிறது, இந்த வயதில்?-காதல் அனுபவமாய்த்தான் இருக்கும்!

அதற்குப் பரிகாரம் தற்கொலையைத் தவிர வேறு ஒன்றுமே கிடையாதா, இந்தப் பெண்களுக்கு?

ஐயோ, பாவம்! உதிர்ந்த மலரும், திரிந்த பாலும்கூட ஏதாவது ஒரு வகையில் இந்தக் காலத்தில் உபயோகப்படும் போது, இவர்கள் மட்டும் உபயோகப்படக் கூடாதா?

இவ்வாறு எண்ணமிட்டுக்கொண்டே, அவளைக் கண்டெடுத்த அதே இடத்திலேயே அவளுடையக் கடிதத்தையும் கண்டெடுக்க முயன்றார் பரந்தாமன்; கிடைக்க வில்லை. ஏமாற்றத்துடன் திரும்பி வந்து, ''என்னுடைய முயற்சி வெற்றி பெறவில்லை. உங்களுடைய வீட்டு விலாசத்தைச் சொல்லுங்கள்; நான் உங்களைக் கொண்டு போய் அங்கே விட்டுவிட்டுப் போகிறேன்!'' என்றார் அவர் காரில் ஏறி உட்கார்ந்து.

பதில் இல்லை!

''ஏன் பேசாமல் இருக்கிறீர்கள்?'' என்று கேட்டுக் கொண்டே அவர் திரும்பினார்.

அவள் உட்கார்ந்திருந்த இடம் காலியாயிருந்தது!

அதற்குள் எங்கே போயிருப்பாள் அவள்? -காரை விட்டுக் கீழே இறங்கிச் சுற்றுமுற்றும் பார்த்தார். சற்றுத் தூரத்தில் அவள் மறுபடியும் கடற்கரையை நோக்கிச் சென்று கொண்டிருப்பது தெரிந்தது!-விரைந்துச் சென்று அவளை வழிமறித்து நின்று, ''எங்கே போகிறீர்கள்?'' என்று கேட்டார்.

'இது என்னத் தொல்லை! இந்த உலகத்தை விட்டு அந்த உலகத்துக்கே போய்விட்டால்கூட இவர் தன்னைத் தொடர்ந்து வந்துக்கொண்டே இருப்பார் போலிருக்கிறதே?' என்று நினைத்த அருணா, ''அதற்குள் வந்துவிட்டீர்களா, நீங்கள்! எங்கேக் கடிதம்?'' என்று கேட்டாள், ஏதாவது கேட்டு வைக்கவேண்டுமே என்பதற்காக.

''கிடைக்கவில்லை; வாருங்கள் போவோம். உங்களை நான் உங்கள் வீட்டில் இறக்கி விட்டுவிட்டுப் போகிறேன்!'' என்றார் அவர், மறுபடியும்.

''நன்றி, இதுவரை செய்த உதவிக்கு. இனி நீங்கள் போகலாம்!'' என்றாள் அவள்.

அவர் போகவில்லை; ''இந்த நிலையில் உங்களை விட்டு விட்டா? அதுதான் முடியாது!'' என்றார், நின்ற இடத்திலேயே நின்று.

''முடியாதென்றால் நீங்கள் போய்க் காரில் உட்காருங் கள்; நான் போய் அந்தக் கடிதத்தை எடுத்துக்கொண்டு வந்து விடுகிறேன்!'' என்றாள் அவள், அவரிடமிருந்து தப்ப.

''காரை யார் எடுத்துக்கொண்டுப் போய்விடப் போகிறார் கள்? நானும் உங்களுடன் வருகிறேன்!'' என்றார் அவர், அவளைப் புரிந்துகொண்டு.

''என்னை மட்டும் யார் எடுத்துக்கொண்டுப் போய்விடு வார்களாம்?'' என்றாள் அவளும், அவரைப் புரிந்துகொண்டு.

''அலைகள்! ஏனெனில், அவை ஏற்கெனவே ஒரு முறை உங்களை எச்சரித்திருக்கின்றன!'' என்றார் அவர்.

''நாசமாய்ப் போகட்டும்! அவற்றை யார் எச்சரிக்கச் சொன்னார்கள், என்னை?'' என்றாள் அவள்.

''கடவுள்! ஏனெனில், அவர் நீங்கள் சாவதை விரும்பவில்லை!''

''அதனால்தான் அவரோடு சேர்ந்து நீங்களும் என்னைக் காப்பாற்ற விரும்புகிறீர்கள் போலிருக்கிறது! சரி, காப்பாற்றுங்கள்; எத்தனை நாட்கள் உங்களால் என்னைக் காப்பாற்ற முடியுமோ, அத்தனை நாட்கள் காப்பாற்றுங்கள்!'' என்று சொல்லிக்கொண்டே அவள் திரும்பினாள்.

பரந்தாமன் அவளைத் தொடர்ந்தார். வெற்றிப் புன்னகையுடன் அல்ல; நீண்டப் பெருமூச்சுடன்!

இருவரும் காரில் ஏறி உட்கார்ந்ததும், ''எங்கே இருக் கிறது உங்கள் வீடு?'' என்றுக் கேட்டார் பரந்தாமன் மெல்ல.

''என் வீடு எங்கே இருந்தால் உங்களுக்கென்ன? அங்கே நான் போக விரும்பவில்லை!'' என்றாள் அருணா, இரைந்து.

''வேறு எங்கே போக விரும்புகிறீர்கள்?''

''நான் போக விரும்பிய இடத்துக்குத்தான் நீங்கள் என்னைப் போகவிடவில்லையே?''

''இப்படியே நீங்கள் பேசிக்கொண்டிருந்தால் கடைசியில் நான் உங்களை என்ன செய்வேன், தெரியுமா?''

''என்ன செய்வீர்கள்?''

''போலீசாரிடம் கொண்டு போய் விட்டுவிடுவேன்!''

''போலீசாரிடம் என்ன, தூக்குமேடைக்கே வேண்டுமானாலும் கொண்டுபோய் விட்டுவிடுங்கள்!''

இது என்னத் தொல்லை!-ஆம், சற்று நேரத்துக்கு முன்னால் அருணாவுக்குப் பரந்தாமன் தொல்லையாகத் தோன்றியது போலவே பரந்தாமனுக்கு அருணா தொல்லையாகத் தோன்றினாள் இப்போது!-ஆனாலும், அதற்காக அவளைக் கீழே இறக்கிவிட்டுவிடவும் அவர் விரும்பவில்லை; அப்படி இறக்கி விடுவதாயிருந்தால்தான் மருந்துவமனையின் வாசலிலேயே அவர் அவளை இறக்கிவிட்டுவிட்டிருக்கலாமே?

ஆகவே தன் மனத்தைத் தானே திடப்படுத்திக் கொண்டு, ''என் வீட்டுக்கு வேண்டுமானால் வருகிறீர்களா?'' என்றார் அவர்.

''உங்கள் வீட்டுக்கா, நான் எதற்கு?'' என்றாள் அவள்.

''முதலில் உங்கள் உடையை மாற்றிக்கொள்ளலாம், பிறகு...''

''பிறகு என்ன?''

''உங்களை நீங்களே கொஞ்சம் சரி செய்துக் கொள்ளலாம்!''

''ஏன், இப்போது நான் சரியாக இல்லையா?''

''சரியாய்த்தான் இருக்கிறீர்கள்; மூளைதான் கொஞ்சம்...''

''ஆமாம், மூளைதான் கொஞ்சம் பேதலித்திருக்கிறது! இல்லாவிட்டால் என்னை நீங்கள் உங்களுடைய வீட்டுக்கு அழைப்பீர்களா?''-இதைச் சொல்லிவிட்டு அவள் சிரித்தாள்; ''ஏன் சிரிக்கிறீர்கள்?'' என்று கேட்டார் அவர். பதில் வார்த்தையாக வரவில்லை; சிரிப்பாகவே வந்தது!

இப்போதுதான் அவளுடைய மன நிலை மட்டுமல்ல, உடல் நிலையும் கெட்டுவிட்டதென்ற உண்மை அவருக்குத் தெரிந்தது. அவளைத் தனக்குத் தெரிந்த டாக்டர் ஒருவரிடம் கொண்டுபோய்க் காட்டினார்.

''ஏன், என்ன நடந்தது?'' என்று டாக்டர் கேட்டார்; பரந்தாமன் நடந்ததைச் சொன்னார்.

டாக்டர் அவளைப் பரிசோதித்துப் பார்த்துவிட்டு, ''இவ்வளவு நேரம் என்ன செய்துக் கொண்டிருந்தீர்கள், கொஞ்சம் முன்னாலேயே வந்திருக்கக் கூடாதா?'' என்று சொல்லிக்கொண்டே, ஒன்றுக்கு இரண்டாக அவள் உடம்பில் ஊசி மருந்தைச் செலுத்திவிட்டு, இரண்டு மாத்திரைகளை வேறு எடுத்து வாயில் போட்டு வெந்நீரை ஊற்றினார்.

சிரிப்பு நின்றது; ஆனால் நிலைகுத்தி நின்ற கண்கள் மட்டும் நிலைகுத்தி நின்றபடியே இருந்தன!

''சரி, இவளை உடனே வீட்டுக்குக் கொண்டு போய் உடையை மாற்றுங்கள். இரவு முழுவதும் கோதுமைத் தவிட்டை வறுத்து ஒத்தடம் கொடுத்துக்கொண்டே இருங்கள்; பொழுது விடிந்ததும் நான் வந்து பார்க்கிறேன்!'' என்றார் டாக்டர்.

''கவலைப்படும் அளவுக்கு ஒன்றுமில்லையே?'' என்றார் பரந்தாமன்.

''இப்போது ஒன்றும் சொல்வதற்கில்லை; பொழுது விடிந்ததும் சொல்கிறேன்!'' என்றார் அவர்.

# 38. சங்கமம்

விடியுமா?-அன்றைய இரவு மட்டுமல்ல, அருணாவின் வாழ்வும் விடியுமா என்ற கவலையோடு, அவளுக்கு அருகிலேயே ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டு உட்கார்ந்து கொண்டிருந்தார் பரந்தாமன்.

அவருக்குக் கீழே மண்ணெண்ணெய் அடுப்பு ஒன்று எரிந்துக் கொண்டிருந்தது. அதன் உதவியால் அவ்வப்போது கோதுமைத் தவிட்டை வறுப்பதும், வறுத்த தவிட்டை எடுத்து ஒத்தடம் கொடுப்பதுமாக அவருடைய நேரம் கழிந்து கொண்டிருந்தது.

என்ன ஒத்தடம் கொடுத்து என்னப் பயன்? அவளிடம் எந்தவிதமான மாறுதலும் இல்லை; நிலை குத்தி நின்ற கண்கள் நிலை குத்தி நின்றபடியேதான் இருந்தன. அதுதான் பெரிய சோதனையாயிருந்தது அவருக்கு. எப்படியாவது இவள் பிழைத்துவிட்டால் எல்லாருக்கும் நல்லது; பிழைக்காவிட்டால்?...

அந்தப் பழி தன்மேல் விழுந்தாலும் விழுந்துவிடலாம் அல்லவா?

அதற்காகத் தான் என்ன செய்ய முடியும், இப்போது? இவளுடைய விருப்பத்துக்கு விரோதமாக இவளைக் கொண்டு போய் மருத்துவமனையில் சேர்த்துவிட முடியுமா? இல்லை, போலீசாரிடம்தான் ஒப்படைத்துவிட முடியுமா?

அப்படியே ஒப்படைத்தால்தான் என்ன? எந்த வம்புக்கு அஞ்சுகிறேனோ, அந்த வம்பு தன்னை விட்டுவிடவா போகிறது?-ஊஹும்!

ஒன்று வேண்டுமானால் செய்யலாம்-எந்தக் கடற்கரையில் இவள் ஒதுக்கப்பட்டுக் கிடந்தாளோ, அதே கடற்கரையில் இவளைக் கொண்டு போய்க் கிடத்திவிட்டு வேண்டுமானால் வந்துவிடலாம். ஒரு பொறுப்புள்ள மனிதன் செய்யக்கூடிய காரியமா, அது?-சீச்சீ!

இந்தச் சமயத்தில் அம்மாவாவது இங்கே இருந்திருக் கலாம்; அதுவும் இல்லை-இரண்டாவது முறையாகப் பெற்றுப்பிழைக்கப்போகும் தன் பெண்ணைப்பார்த்துவிட்டு அவர்கள் எப்போது வரப்போகிறார்களோ, என்னமோ?

அதுவரை இவள் இங்கேயா இருந்துக் கொண்டிருப்பது? பார்ப்பவர்கள் என்ன சொல்வார்கள்?

அவர்கள் சொல்வது தன்னைப் பாதிப்பதைவிட, இவளையல்லவா அதிகமாகப் பாதிக்கும்? அதற்குத் தான் இடம் கொடுக்கலாமா? கூடாது; கூடவே கூடாது!

இவளுடைய உடல்நிலை கொஞ்சம் தேறியதும் இவளைக் கொண்டுபோய் இவள் வீட்டில் விட்டுவிட வேண்டும். அப்போதும் இவள் அதற்குச் சம்மதிக்கா விட்டால்?...

சம்மதிக்காவிட்டால் என்ன செய்வது, 'எக்கேடாவது கெட்டுப் போ!' என்று கழுத்தைப் பிடித்து வெளியேத் தள்ளிவிட வேண்டியதுதான்!

இவளுடைய முகத்தைப் பார்த்தால் எந்தப் பாவிக்கும் அப்படிச் செய்ய மனம் வராதுபோலிருக்கிறதே? அப்படி இருக்கும்போதுத் தனக்கு மட்டும் மனம் வரவா போகிறது?

அதைப்பற்றி இப்போது யோசிப்பானேன்?-முதலில் அவள் உடம்பு தேறட்டும்!...

இந்தத் தீர்மானத்துடன் ஏதாவது மாறுதல் தோன்றி யிருக்கிறதா என்பதைத் தெரிந்துகொள்வதற்காக அவள் முகத்தை ஆயிரத்தோராவது தடவையாக அவர் ஏறிட்டுப் பார்த்தபோது, ''பெயரைச் சொல்லிக் கூப்பிட்டுப் பாருங்களேன், ஏதாவது பதில் வருகிறதா என்று பார்ப்போம்?'' என்றாள் பக்கத்து வீட்டுப் பார்வதி, அவருக்குப் பின்னால் வந்து நின்று.

இதைக் கேட்டதும், ''இன்னுமா நீங்கள் வீட்டுக்குப் போகவில்லை?'' என்று வியப்புடன் கேட்டுக்கொண்டே அவளை நோக்கித் திரும்பினார் பரந்தாமன்.

"போனேன்! அவர்தான் சொன்னார், 'அம்மாகூட ஊரில் இல்லையே, நீயாவது இன்னும் கொஞ்ச நேரம் இருந்து பார்த்துவிட்டு வருவதுதானே?' என்று; வந்தேன்!" என்றாள் அவள்.

"ஓய்வெடுக்க வேண்டிய நேரத்தில் என்னால் உங்களுக்கு வேறுத் தொல்லை! என்ன செய்யலாம், தன்னை மறந்து கிடக்கும் ஒருப் பெண்ணுக்கு உடை மாற்றி விட வேண்டுமானால் இன்னொருப் பெண்ணின் உதவியைத்தான் நாட வேண்டியிருக்கிறது!" என்றார் அவர்

"இதில் என்னத் தொல்லை, எனக்கு? அந்த மட்டும் 'ஆபத்துக்குப் பாவமில்லை' என்று நீங்களே அந்தக் காரியத்தில் இறங்கிவிடாமல் என்னை அழைத்தீர்களே, அதைச் சொல்லுங்கள்!" என்றாள் அவள்,வெட்கத்தால் தன் தலையைச் சற்றே தாழ்த்தி.

"எந்த நிலையிலும் எவருடைய மானத்துக்கும் பங்கம் வராமல் எவன் காக்கிறானோ, அவன்தானேம்மா மனிதன்!" என்றார் அவர்.

இந்தச் சமயத்தில்,"எப்படி ஐயா, இருக்கிறது?" என்று கேட்டுக்கொண்டே பார்வதியின் கணவரும் அங்கே வர, "அப்படியேதான் இருக்கிறது!" என்றார் பரந்தாமன், அவருடைய வயதுக்குரிய மரியாதையைத் தரவேண்டு மென்பதற்காகத் தன் இருக்கையை விட்டு எழுந்து நின்று.

"அப்படியே இருக்கிறதா! பெயரைச் சொல்லிக் கூப்பிட்டுப் பாருமே?" என்றார் அவரும்.

"அதுதானே தெரியவில்லை, எனக்கு!"

"நல்ல ஆளய்யா, நீர்! பெயரைக் கூடத் தெரிந்துக் கொள்ளாமல் என்ன உதவி செய்யவேண்டியிருக்கிறது, உதவி?"

"உதவிக்கும் பெயருக்கும் என்ன சம்பந்தம்? அப்படி ஒன்றும் இருப்பதாகத் தெரியவில்லையே, எனக்கு!"

''ஏன் இல்லை? ஆணுக்கும் பெண்ணுக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறதோ, அந்தச் சம்பந்தம் அதிலும் இருக்கிறது இந்தக் காலத்தில்! இதுகூடத் தெரியாமல் நீர் எதற்குத்தான் பிரம்மச்சாரியாயிருக்கிறீரோ, எனக்குத் தெரியவில்லை!'' என்று சொல்லிக்கொண்டே அவர் அருணாவை நெருங்கி, ''அம்மா, அம்மா! இங்கே பார், அம்மா?'' என்றார் கனிவுடன்.

அப்போதுதான் சற்றே சலனமுற்ற தன் கண்களால் அவள் அவரை மிரண்டு நோக்கினாள்!

''சபாஷ்! நன்றாகப் பார் என்னை, நான்தான் உன் அப்பா!'' என்றார் அவர், அவளுக்கு ஆளை அடையாளம் தெரிகிறதா என்பதைத் தெரிந்துகொள்வதற்காக.

அவ்வளவுதான்; ''ஐயோ, அப்பாவா? வேண்டாம், வேண்டாம்!'' என்று அலறினாள் அவள்.

அவர் சிரித்து, ''நான் அப்பா இல்லை அம்மா, அண்ணா!'' என்றார் மீண்டும்.

''அண்ணாவா! நீ எப்படி அண்ணா, இங்கே வந்தாய்?'' என்றாள் அவள்.

''தேவலையே, ஆளைத் தெரியாவிட்டாலும் இடத்தைத் தெரிகிறதே? இனிப் பயமில்லை!'' என்றார் அவர்.

அதற்குள் ஆறாய்ப் பெருகிய வியர்வையைத் தன் முந்தானையால் துடைத்துவிட்டு, ''தூங்கம்மா, தூங்கு!'' என்றாள் பார்வதி.

அருணா சற்றேப் புரண்டுக் கண்ணை மூடினாள்!

''நாங்கள் வருகிறோம்; இனி நீரும் கவலையின்றித் தூங்கலாம்!'' என்று விடை பெற்றுக்கொண்டார் பக்கத்து வீட்டுக்காரர், தன் மனைவி பார்வதியுடன்.

அவர் சொல்லி விட்டுச் சென்றபடி, பரந்தாமன் தூங்கவில்லை; தன் முயற்சித் தனக்களித்த வெற்றிக் களிப்பில் மீண்டும் அருணாவுக்கு ஒத்தடம் கொடுக்க ஆரம்பித்து விட்டார்!

அவள் தன் மென்கரத்தால் அவருடைய வன்கரத்தைப் பற்றி, ''உங்கள் பெயர்?'' என்றாள் மெல்ல.

''சொல்ல மாட்டேன்!'' என்றார் அவர், புன்னகையுடன்.

''ஏன், என்மேல் கோபமா?''

''இல்லை; உங்களுடையப் பெயரை நீங்கள் சொன்னால்தான் என்னுடையப் பெயரை நான் சொல்வேன்!''

''உங்கள் என்ன வேண்டியிருக்கிறது, உங்கள்! அன்புக்கு உள்ள தடைகளில் அதுவும் ஒன்று என்று உங்களுக்குத் தெரியாதா? எங்கே, 'உன்னுடைய பெயரை நீ சொன்னால் தான் என்னுடையப் பெயரை நான் சொல்வேன்!' என்று சொல்லுங்கள், பார்ப்போம்?''

அவர் அப்படியே சொன்னார்; அவள் புன்னகையுடன், ''என் பெயர் அருணா; உங்கள் பெயர்?'' என்றாள்.

''பரந்தாமன்!'' என்றார் அவர்.

''சாட்சாத் பரந்தாமனே வந்தாற்போல்தான் வந்திருக்கிறீர் கள்!'' என்று சொல்லிவிட்டு, ''உங்கள் பெயரை நான் சொல்வ தில் ங்களுக்குக் கோபமில்லையே?'' என்றாள் அவள்.

''இல்லை!'' என்றார் அவர்.

''இந்த வீட்டில் உங்களைத் தவிர வேறு யாரும் இல்லை போலிருக்கிறதே, எங்கே சாப்பிடுகிறீர்கள்?'' என்றாள் அவள், சுற்று முற்றும் பார்த்துக்கொண்டே.

''இங்கேயேதான்; நான் சமைத்துச் சாப்பிடுகிறேன்!'' என்றார் அவர்.

''இன்று சமைத்தீர்களா?''

''இல்லை!''

''ஐயோ பாவம்! என்னால் பட்டினி வேறு இருக்கி றீர்களா, நீங்கள்?''

''அது ஒன்றும் எனக்குப் புதிதல்ல; வாரத்துக்கு ஒரு நாள் பட்டினி இருப்பது என் வழக்கம், நீங்கள் வேண்டுமானால் கொஞ்சம் 'ஆர்லிக்ஸ்' சாப்பிடுகிறீர்களா?''

''பார்த்தீர்களா, மறுபடியும் 'நீங்கள்' என்று ஆரம்பித்து விட்டீர்களே?''

''இல்லையில்லை; நீ வேண்டுமானால் கொஞ்சம் 'ஆர்லிக்ஸ்' சாப்பிடுகிறாயா?''

''கொடுங்கள்; உங்கள் கையால் விஷத்தைக் கொடுத்தாலும் அதை நான் இப்போது மகிழ்ச்சியுடன் சாப்பிடத் தயார்!'' என்றாள் அவள்.

அவர் எழுந்தார்; ''அதிசயமான மனிதர்; மணி அண்ணனைப்போல் இவரும் ஓர் அதிசயமான மனிதர்!'' என்றாள் அவள்.

''என்ன, மணி அண்ணனா!'' என்றார் அவர், வியப்புடன் திரும்பி.

''ஆம்; ஒன்றுக்கு இரண்டு அண்ணன்மார் எனக்கு இருக்கிறார்கள். ஒருவர் பெயர் மோகன்; இன்னொருவர் பெயர் மணி!'' என்றாள் அவள்.

''அடக், கடவுளே! எனக்கு நீ ரொம்பத் தூரத்தி லிருப்பதாகவல்லவா நான் நினைத்தேன்? இவ்வளவு அருகில் இருக்கிறாயே?'' என்றார் அவர்.

''ஏன், அவர்களைத் தெரியுமா உங்களுக்கு?''

''தெரியும்; என்னுடன்தானே அவர்களும் வேலை பார்க்கிறார்கள்!'' என்றார் அவர்.

''அடப், பாவமே! இப்படியா அகப்பட்டுக்கொள்வேன் நான் உங்களிடம்?'' என்றாள் அவள்.

மறுநாள் காலை சொன்னதுசொன்னபடி டாக்டர் வந்தார்; அருணாவைப் பரிசோதித்துப் பார்த்துவிட்டு, ''இனி பயமில்லை, எல்லா அபாயத்தையும் தாண்டிவிட்டாள்!'' என்று சொல்லிவிட்டுப் போனார்.

அவருடையத் தலை மறைந்ததும், ''அவருக்குத் தெரியாது, இனிமேல்தான் அபாயமெல்லாம் இருக்கிற தென்று!'' என்றார் பரந்தாமன், சிரித்துக்கொண்டே.

''என்ன அபாயம்?'' என்று கேட்டாள் அருணா.

''என்னுடையத் தலை மறைந்ததும் நீ கடலை நோக்கி ஓடும் அபாயம்தான்!'' என்றார் அவர், சிரித்துக்கொண்டே.

''இனி ஓட மாட்டேன்!'' என்றாள் அவள், தானும் சிரித்துக்கொண்டே.

''ஏன்?'' என்று கேட்டார் அவர்.

''இந்த உலகத்தில் சாகத் தூண்டுபவர்கள் மட்டும் இல்லை; வாழத் தூண்டுபவர்களும் இருக்கிறார்கள் என்ற உண்மை இப்போதுதான் தெரிந்தது, எனக்கு!'' என்றாள் அவள்!

# 39. இந்தப் பெண்கள்!

சாட்சாத் விநாயகப் பெருமான் இதுவரை கல்யாணம் செய்துகொள்ளாமல் இருப்பதற்குக் காரணம், எந்தப் பெண்ணைப் பார்த்தாலும் அவருக்குத் தன் தாயாரைப்போல் தோன்றுவதுதான் என்று சிலர் சொல்கிறார்கள்.

பரந்தாமனுக்கு அப்படியொன்று ம் தோன்றவில்லை யென்றாலும், அவருடையக் கல்யாணத்துக்கும் அவருடைய தாயார்தான் தடையாயிருந்து வந்தாள்!

'தாய்க்குப் பின் தாரம்' என்பது உலக வழக்காயிருந் தாலும், 'தாரத்துக்குப் பின் தாய்!' என்பதுதானே 'உலக வாழ்க்கை'யாயிருந்து வருகிறது?-அந்த உலக வாழ்க்கைக்கு அஞ்சித்தான் அவர் தன் கல்யாணத்தைத் தள்ளிப் போட்டுக் கொண்டே வந்தார்-அதாவதுத் தன் தாயின்மேல் தான் கொண்டுள்ள அன்புக்கு எந்தவிதமானப் பங்கமும் நேராமல் இருக்க வேண்டுமானால், அவள் உயிரோடிருக்கும் வரை தான் கல்யாணம் செய்துகொள்ளாமல் இருக்க வேண்டும்- இதுவே அவருடைய முடிவாயிருந்தது. அந்த முடிவை மாற்ற இன்றுவரை அவருடையத் தாயாராலும் முடியவில்லை; தங்கையாலும் முடியவில்லை.

இந்த நிலையில்தான் அவர் கொஞ்சமும் எதிர்பாராத விதமாக அவருடைய உள்ளத்திலே இடம் பிடிக்க முயன்றாள் அருணா. அவள் அப்போதிருந்த நிலையில் அவளைப் பொறுத்தவரை அதுத் தவிர்க்க முடியாததாகவும் இருந்தது. ஏனெனில், தெரிந்தோத் தெரியாமலோ அவள் அவரால் காப்பாற்றப்பட்டு விட்டாள். இனித் தன் தந்தையின் எதிர்காலக் கனவுகளிலிருந்தும், எல்லையற்ற ஆசைகளிலிருந்தும் அவள் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமானால், அவளுக்குத் தெரிந்தவரை இரண்டே வழிகள்தான் இருந்தன. ஒன்று, அவள் தற்கொலை முயற்சியை மறுபடியும் மேற்கொள்ள வேண்டும்; அல்லது அவள் தன் அப்பாவுக்குத் தெரியாமல் யாரையாவது மணந்து, அதற்குப் பின்னால் அவருடைய ஆசீர்வாதத்தைக் கோரிப் பெறவேண்டும்.

இந்தத் தீர்மானத்துடன்தான் முதல் நாள் காலை அவள் தன் வீட்டை விட்டுக் கிளம்பினாள். ஆனால், அப்பாவுக்குத் தெரியாமல் திருமணம் என்பது நினைப்பதற்குத்தான் சுலபமாயிருந்ததேத் தவிர, நடப்பதற்கு அது அவ்வளவு சுலபமாயிருக்குமென்றுத் தோன்றவில்லை அவளுக்கு. அதிலும், சுந்தரைப் போன்ற ‘வேட்டை நாய்கள்’ மலிந்து கிடக்கும் இந்தக் காலத்தில் காதலாவது, அப்பாவுக்குத் தெரியாமல் கல்யாணமாவது? அந்தக் கானல் நீரைத் தேடி ஓடுவதைவிடக் கடல் நீரைத் தேடி ஓடுவதே மேல் என்று நினைத்தாள் அவள். அந்த நினைப்பைச் செயலாக்க அவள் ஓடவும் ஓடினாள்; விழவும் விழுந்தாள்! ஆனால் அதுவும் அவளை வேண்டாமென்று ஒதுக்கிவிட்ட பிறகு? ஒதுக்கியதோடு நில்லாமல், ‘இந்த உலகத்தில் சுந்தரைப் போன்றவர்கள் மட்டும் இல்லை; பரந்தாமனைப் போன்றவர்களும் இருக்கிறார்கள்’ என்று அவரைக் காட்டாமல் காட்டிவிட்டப் பிறகு?...

சாவு கசந்து, வாழ்வு இனித்தது அவளுக்கு; ஆனால் அவருக்கு? அதைத்தான் தெரிந்துக் கொள்ள முடியவில்லை அவளால்!

அதை எப்படி அவ்வளவு சீக்கிரத்தில் தெரிந்துக் கொள்ள முடியும்? நாளடைவில் வேண்டுமானால் தெரிந்து கொள்ளலாம். அதற்கு வேண்டிய பொறுமை அவளுக்கு என்னமோ இருக்கத்தான் இருந்தது. ஆனால் அவள் அப்பாவுக்கு?

இருக்குமா? இருக்க முடியுமா? செத்தாலாவது அவர் தன் மகளோடு தன்னுடைய ஆசைகளையும் சேர்த்து எரித்து விடுவார்! உயிராயிருந்தால்?...

வம்புக்கு நிற்காமல் விடுவாரா? அதுதான் யோசனையா யிருந்தது அவளுக்கு. அதற்காகவே அவள் ஓரளவு அவசர உணர்ச்சிக் கூடக் காட்டினாள், அந்த விஷயத்தில்! அவரும் அதைப் புரிந்து கொள்ளக் கூடியவர்தான். ஆனால் தன்னைப் பற்றி ஒன்றுமே தெரிந்துக் கொள்ளாமல் அவரால் அதை எப்படிப் புரிந்துக் கொள்ள முடியும்?

தன் உணர்வுப் பெற்ற பிறகாவது அவர் தன்னைப் பற்றி ஏதாவது கேட்பார், அதற்குப் பிறகுத் தான் நடந்தவற்றைச் சொல்லி, அவருடையப் பரிபூரணப் பாதுகாப்பைக் கோரலாம் என்று அவள் எதிர்பார்த்தாள். ஆனால் அவரோப் பொழுது விடிந்தப் பிறகுகூட அவளுடைய உடல் நலனில்தான் கவனம் செலுத்தினாரே தவிர, உள நலனில் கவனம் செலுத்தவில்லை!

முதல் நாள் இரவு அவளாகவே தன் உள்ளத்தை அவரிடம் ஓரளவு திறந்து காட்டியபோதுக் கூட, அவருடைய உதடுகள்தான் அசைந்தனவே தவிர, உள்ளம் அசைய வில்லை!

இதனாலெல்லாம் அவர்மேல் அவள் கொண்ட மதிப்பு உயர்ந்தாலும், அந்த மதிப்புக்கு முன்னால் தன்மானம் இறங்குவதுபோல் தோன்றிற்று அவளுக்கு. ஆகவே, அன்று மாலைவரையிலாவது அவரைக் கொஞ்சம் விட்டுப் பிடிக்கலாம் என்று அவள் நினைத்துக் கொண்டிருந்தபோது, ''இந்த உலகத்தில் சாகத் தூண்டுபவர்கள் மட்டும் இல்லை,

வாழத் தூண்டுபவர்களும் இருக்கிறார்கள் என்ற உண்மை இப்போதுதான் தெரிந்தது எனக்கு என்று சொன்னாயே, அந்த உண்மை யாரால் தெரிந்தது உனக்கு?'' என்று கேட்டுக்கொண்டே வந்தார் பரந்தாமன்.

அதுதான் சமயமென்று, ''உங்களால்தான்!'' என்றாள் அருணா, கொஞ்சம்கூடத் தயங்காமல்.

''அப்படியானால் உன்னை நம்பி நான் உன்னை இங் கேயே விட்டுவிட்டு ஆபீசுக்குப் போகலாமா?'' என்றார் அவர்.

''தாராளமாக!'' என்றாள் அவள்.

''மிக்க மகிழ்ச்சி; நான் வருகிறேன். சாயந்திரம் நீ விரும்பினால் உன்னைக் கொண்டு போய் உன்னுடைய வீட்டில் விட்டு விடுகிறேன்!'' என்று சொல்லிவிட்டுச் சென்றார் அவர்.

'அந்தக் கடைசி வார்த்தையைச் சொல்லாமல் போகக் கூடாதோ?' என்று நினைத்தாள் அவள்!

இந்தப் பெண்கள்! - நினைத்தவுடன் தங்கள் உயிரை மட்டுமல்ல; உள்ளத்தைக்கூட எவ்வளவு எளிதில் இழக்கத் தயாராகிவிடுகிறார்கள்!

'இந்த அருணா!- இவள் என்னைச் சந்தித்து இன்னும் இருபத்து நாலு மணி நேரம்கூடச் சரியாக ஆகவில்லை; அதற்குள் இவள் என்னைக் காதலிக்க ஆரம்பித்துவிட்டாள்!

அந்தக் காதலுக்கு இவள் படித்த கதைகள் மட்டுமா துணையாக நிற்கின்றன, பார்த்த சினிமாக்களும் துணையாக நிற்கின்றன! இல்லாவிட்டால் நேற்றிரவு அவள் பேசிய அந்த வசனம், அவள் செய்த அந்தச் சேட்டை இரண்டுமே அவ்வளவு செயற்கையாகவா இருக்கும்?

என்னமோ, போகட்டும்! - காட்டில் வளர்ந்த கொடியாயிருந்தாலும் கிடைத்தக் கொம்பைப் பற்றிப் படரத் துடிக்கிறது என்று நினைக்கலாம்; இந்த வீட்டில் வளர்ந்த கொடி ஏன் இப்படித் துடிக்கிறது?

ஏற்கெனவேக் காதலில் ஏற்பட்ட தோல்வியாயிருக்குமோ? - அப்படியிருந்தால், சாகத் துடிப்பது வேண்டுமானால் நியாயமாயிருக்கலாம்; வாழத் துடிப்பது எப்படி நியாயமாயிருக்க முடியும்?

ஒன்று மட்டும் சர்வ நிச்சயமாகத் தெரிகிறது - அதாவது, இவள் தன் வீட்டுக்கு இன்னொரு முறை உயிரோடு போக விரும்பவில்லை!

ஏன், என்னக் காரணம்? - மோகனுக்குத் தெரியலாம்; ஆனால் அதை அவரிடம் எப்படிக் கேட்பது?

கேட்காவிட்டாலும் விஷயத்தை அவரிடம் சொல்லிவிட வேண்டியதுத் தன் கடமை - அதற்கு மேல் அவர் தன் தங்கையை எந்த வழியில் அழைத்துச் செல்கிறாரோ, அந்த வழியில் அழைத்துச் செல்லட்டும்!'

இந்தத் தீர்மானத்துடன்தான் அன்று அவர் ஆபீசுக்குள் நுழைந்தார்; நுழைந்ததும் மோகன் வழக்கம்போல் உட்காரும் இடத்தைப் பார்த்தார் - காலியாயிருந்தது; 'இது என்ன முட்டாள்தனம்? இன்று அவர் எப்படி வேலைக்கு வர முடியும்?' என்று தன்னைத் தானே கடிந்துக் கொண்டுத் தன் அறைக்குள் நுழைந்தார்.

அவர் தன் ஆசனத்தில் அமர்ந்ததும், மின் விசிறியைச் சுழல விட்டுவிட்டுப் போவதற்காகப் பிச்சையா வந்தான் உள்ளே. அவனிடம், "மணி சார் வந்துவிட்டாரா?" என்று விசாரித்தார் அவர்.

"வந்து விட்டார்; கூப்பிடட்டுமா?" என்றான் அவன்.

"இப்பொழுது வேண்டாம்; அப்புறம் சொல்கிறேன்!" என்றார் அவர்; அவன் போய்விட்டான்.

அதற்குப் பிறகு அவர் யோசித்தார், யோசித்தார், அப்படி யோசித்தார். அந்த யோசனையின் முடிவில்தான் அவனை அழைத்து, "இன்று மாலை என்னுடன் வர முடியுமா?" என்றுக் கேட்டார்; அவனோ பாமாவை

அழைத்துக் கொண்டுப் போக வேண்டுமே என்பதற்காக மறுநாள் வருவதாகச் சொல்லி விட்டான்.

'அதற்கு மேல் என்ன செய்வது?' என்ற யோசனையுடன் அன்று மாலை அவர் கடற்கரைக்குச் சென்ற போது...

ஆழம் காண முடியாத கடலுக்கு அருகே, ஆழம் காண முடியாத சோகத்துடன் உட்கார்ந்துக் கொண்டிருந்த மோகன் அவரைக் கண்டதும் தன்னையறியாமல் எழுந்து நின்றான். அவனைத் தொடர்ந்து அவனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்த பாமாவும் எழுந்து நின்றாள்.

''இன்னும் நீ வீட்டுக்குப் போகவில்லையா?'' என்றார் அவர், அவளை நோக்கி.

''இல்லை. இவர் இங்கே... இவர் இங்கே...''

''அது எனக்குத் தெரியும்; அதற்காக நீ இவருடன் இருந்து என்ன செய்யப் போகிறாய், இங்கே? கல்யாண மாகியிருந்தாலும் யாரையாவதுக் கட்டிக்கொண்டு அழலாம்; அதுவுந்தான் ஆகவில்லையே, இன்னும்?'' என்றார் அவர் சிரித்துக் கொண்டே.

அவருடைய சிரிப்பு என்னவோ போலிருந்தது மோகனுக்கு. 'எல்லாம் தெரிந்த இவரா இப்படிச் சிரிக்கிறார்!' என்று தனக்குள் நினைத்தான்.

அதற்குள், ''இவருடைய நிலைமை தெரிந்துமா நீங்கள் இப்படிச் சிரிக்கிறீர்கள்? என்னால் நம்பவே முடிய வில்லையே?'' என்றாள் பாமா, வியப்புடன்.

''எப்படி நம்ப முடியும், என்னுடைய நிலைமை உங்களுக்குத் தெரிந்தால்தானே? வாருங்கள், போவோம்!'' என்றார் அவர்.

''எங்கே?'' என்று கேட்டாள் அவள்.

''என் வீட்டுக்கு!''

''உங்கள் வீட்டுக்கா, எதற்கு?''

''விருந்து வைக்க!''

''நல்ல சமயம் பார்த்தீர்கள், விருந்து வைக்க!- ஏனாம்?''

''பொதுவாகக் காதல் என்றால் - ஒன்று, காதல் செத்து விடும்; அல்லது, காதலர்கள் செத்து விடுவார்கள். இரண்டுமே நடக்காமல் இன்றுவரை உங்கள் காதலும் நீடித்து, நீங்களும் நீடிப்பதற்காக!'' என்றார் அவர், மேலும் சிரித்துக் கொண்டே.

மோகனால் பொறுக்க முடியவில்லை; ''மன்னிக்க வேண்டும், சார்! உங்கள் விளையாட்டு வெந்தப் புண்ணில் வேல் கொண்டுக் குத்துவதுபோலிருக்கிறது!'' என்றான் அவன், குறுக்கிட்டு.

''குத்தாமல் என்ன செய்யும், உங்கள் அருணா என் வீட்டில் இருக்கும்போது நீங்கள் வந்து இங்கே உட்கார்ந்துக் கொண்டிருந்தால்?'' என்றார் அவர், அப்போதும் அமைதியாக.

''என்ன! எங்கள் அருணா உங்கள் வீட்டில் இருக்கிறாளா!''

வியப்பினால் தன்னை மறந்துக் கத்தினான் மோகன்; ''ஆமாம் சார், ஆமாம்; நீங்கள் வாருங்கள், என்னுடன்!'' என்று சொல்லிக்கொண்டே அவர் காரை நோக்கி நடந்தார்.

இருவரும் அவரைத் தொடர்ந்தனர்.

# 40. அடைக்கலம்

''சாயந்திரம் நீ விரும்பினால் உன்னைக் கொண்டு போய் உன்னுடைய வீட்டில் விட்டுவிடுகிறேன்!''

''சாயந்திரம் நீ விரும்பினால் உன்னைக் கொண்டு போய் உன்னுடைய வீட்டில் விட்டுவிடுகிறேன்!''

காலையில் அவர் போகும்போது கடைசியாகச் சொல்லி விட்டுப் போன இந்த வார்த்தை தன்னுடைய நினைவைச் சுற்றிச் சுற்றி வர, அன்றையப் பொழுது முழுவதையும் கட்டிலிலேயே கழித்துக் கொண்டிருந்தாள் அருணா.

அவ்வப்போது பார்வதி வருவாள்; அவளுடைய தேவைகளைக் கவனிப்பாள். அத்துடன், அவளுடைய துயரத்தைப் பற்றியும் விசாரிப்பாள்; அந்தத் துயரத்துக்கு ஆறுதலாக ஏதாவது சொல்லிவிட்டும் போவாள்.

அவள் போனபின், தன்னுடைய உள்ளத்தைப் போலவே வெறிச்சோடிக் கிடக்கும் அந்த வீட்டைப் பார்ப்பாள் அருணா. எவ்வளவுப் பெரிய வீடு! இந்த விசாலமான வீட்டைப் போலவே அவருடைய உள்ளமும் விசாலமாய்த்தான் இருக்கிறது. ஆனால்...

ஆனால் என்ன? அவ்வளவு பெரிய உள்ளத்தில் தனக்கென்று ஒரு சிறிய இடத்தைக்கூட அவ்வளவு எளிதில் கொடுத்து விடுபவராயில்லையே, அவர்? முதல் நாள் மாலை தான் அவ்வளவு தூரம் மறுத்தும் மறுநாள் காலை 'சாயந்திரம் நீ விரும்பினால் உன்னைக் கொண்டு போய் உன்னுடைய வீட்டில் விட்டுவிடுகிறேன்' என்று தானே அவர் சொல்கிறார்!

சரி, என்னுடைய வீட்டிற்கு நான் போக விரும்பாவிட்டால அவர் என்ன செய்வார், என்னை? தன்னுடைய வீட்டிலேயே வைத்துக் கொண்டு விடுவாரா? அல்லது கழுத்தைப் பிடித்து தள்ளிவிடுவாரா?

இதைத்தான் காலையிலேயே கேட்டுத் தெரிந்து கொண்டிருக்க வேண்டும் நான்; கேட்கவில்லை. அதனாலென்ன, இப்பொழுது வந்ததும் கேட்டுவிட்டால் போகிறது!

இந்த முடிவுடன் அவள் எழுந்து விளக்கைப் பொருத்தப் போனபோது, வாசலில் கார் வந்து நிற்கும்

சத்தம் கேட்டது. 'அதோ அவரும் வந்துவிட்டார்!' என்ற மகிழ்ச்சியுடன் அவள் பொருத்திய விளக்கைக் கைகூப்பி வணங்கிவிட்டு வெளியே வந்தாள்.

''அருணா! இப்படிக்கூடச் செய்யலாமா நீ?'' என்று கேட்டுக் கொண்டே அவளுக்கு எதிர்த்தாற்போல் வந்து நின்றான் மோகன்!

அவ்வளவுதான்; அவளுடைய மகிழ்ச்சி இருந்த இடம் தெரியாமல் பறந்தது. ஆனாலும் அதை வெளியேக் காட்டிக் கொள்ளாமல், ''அப்படி என்ன செய்துவிட்டேன் நான். அதற்கும் குறுக்கே தான் இவர் வந்து நின்று விட்டாரே? வா அண்ணா, வா பாமா!'' என்று அவர்களை உள்ளே அழைத்துக் கொண்டு சென்றாள் அவள்.

அதற்குள் காரைக் கொண்டு போய் அதற்குரிய இடத்தில் நிறுத்திவிட்டு வந்தப் பரந்தாமன், ''என்ன அருணா! எப்படி இருந்தது, என் சமையல்?'' என்றுக் கேட்டார்.

''சமைத்தவர்களைத் தவிர வேறு யாரும் அதைச் சாப்பிட முடியாதுப் போலிருந்தது'' என்றாள் அவள்.

''அப்படியானால் நீ அதைச் சாப்பிடவேயில்லையா?''

''சாப்பிட்டேன், நீங்கள் எடுத்துக் கொண்ட சிரமத்துக்காக!''

''நன்றி; அதேமாதிரி இப்பொழுது நான் சுடப்போகும் ரொட்டியையும் நீங்கள் அனைவரும் துணிந்து சாப்பிட்டு என்னைக் கௌரவிக்க வேண்டும்!'' என்று சொல்லிக் கொண்டேச் சென்று, தன் 'ஆபீஸ் வேட'த்தைக் களைந்து விட்டு, அடுக்களைக்குள் நுழைந்தார் அவர்.

''ஏன், இவரைத் தவிர இந்த வீட்டில் வேறு யாரும் கிடையாதா?'' என்று கேட்டாள் பாமா.

''இல்லை; இருந்த ஓர் அம்மாவும் பெண்ணின் பிரசவத்துக்காக ஊருக்குப் போயிருக்கிறாராம்!'' என்றாள் அருணா.

''அடப் பாவமே, அதற்காக ஆபீசிலிருந்து வந்ததும் இவர் அடுக்களைக்காப் போவது? சார், இங்கே வாருங்கள் சார்! நான் வேண்டுமானால் அந்த ரொட்டியைச் சுட்டுத் தருகிறேன்!'' என்றாள் பாமா.

''வேண்டாம்; இன்று ஒரு நாள் தானே உங்களால் சுட்டுக் கொடுக்க முடியும், நாளைக்கு?'' என்றார் அவர்.

''அதற்கு ஒரு சமையற்காரனையாவது வைத்துக் கொண்டிருக்கலாமே?'' என்றாள் அவள்.

''ஏற்கெனவே நமக்குள் இருக்கும் வகுப்புகள் போதாதென்று அப்படி ஒரு வகுப்பைச் சிலர் வளர்த்துக் கொண்டு வருகிறார்கள்; 'அந்தத் தொண்'டில் நானும் ஈடுபட விரும்பவில்லை. ஏனெனில், அவரவர்களுடைய வேலையைக் கூடிய வரை அவரவர்களே செய்து கொள்ள வேண்டுமென்று விரும்புபவன் நான்!'' என்றார் அவர்.

இந்தச் சமயத்தில் மோகன் குறுக்கிட்டு, ''அதற்காகக் கல்யாணம் செய்துக் கொள்ளாமல் இருந்து விடாதீர்கள்; அதனால் ஒரு பெண்ணின் வாழ்வு பாதிக்கப்படலாம்!'' என்றான் சிரித்துக் கொண்டே.

''முதலில் உங்கள் கல்யாணம் நடக்கட்டும்; அதற்குப் பிறகு என்னுடையக் கல்யாணத்தைப் பற்றி நான் யோசிக்கிறேன்!'' என்றார் அவர்.

இதைக் கேட்டதும் தன்னை மனதில் வைத்துக் கொண்டுதான் அவர் அப்படிச் சொல்கிறாரோ என்று நினைத்தது அருணாவின் உள்ளம்; ஆனால் அவர் அப்படி நினைக்கவில்லை!

சிறிது நேரத்துக்குப் பிறகு அவர்கள் நால்வரும் சேர்ந்தாற்போல் ரொட்டியுடன் போராடிக் கொண்டிருந்த போது, ''ஆமாம், இவர்கள் மட்டும்தான் உங்களுக்குக் கிடைத்தார்களா இங்கே அழைத்துக் கொண்டு வர? அப்பாவும், அம்மாவும் கிடைக்கவில்லையா?'' என்றாள் அருணா, பரந்தாமனை நோக்கி.

அவளுடையக் கேள்வியில் இருந்தக் குத்தலை ஒருவாறு புரிந்துக் கொண்டப் பரந்தாமன், ''இல்லை; நீதான் உன் வீட்டு முகவரியையே என்னிடம் சொல்ல விரும்ப வில்லையே! அவர்களை எப்படி என்னால் இங்கே அழைத்துக் கொண்டு வர முடியும்?'' என்றார் அழுத்தலாக.

''ஏன், அண்ணாவைக் கேட்டிருந்தால் தெரிந்திருக்குமே?''

''மறந்துவிட்டேன்!''

''ஐயோ பாவம்! இப்பொழுது வேண்டுமானால் கேட்டுக் குறித்து வைத்துக் கொள்கிறீர்களா?''

''வேண்டாம்; அவசியமானபோது அதை நானேத் தெரிந்துக் கொள்கிறேன்!''

''ஏன், இப்பொழுது தெரிந்துக் கொள்ள விரும்ப வில்லையா?''

''இல்லை. ஏனெனில், இன்னும் கொஞ்ச நாட்கள் நீ இங்கேயே அஞ்ஞாத வாசம் செய்வதுதான் நல்லது என்று உன் எதிர்கால அண்ணி நினைக்கிறார்!''

இதைக் கேட்டதும் அதுவரை புயல் வீசிக் கொண்டிருந்த தன் உள்ளத்தில் அமைதித் தவழ, ''உண்மையாகவா?'' என்றாள் அருணா.

''ஆமாம், அருணா! உன் 'மரண சாஸன'த்தால் கூட அப்பாவின் மனத்தை மாற்ற முடியவில்லை; அப்படி இருக்கிறது அவருடையப் பேச்சு, நடவடிக்கை எல்லாம். அதனால் தான் சொல்கிறேன், இன்னும் கொஞ்ச நாட்கள் நீ இங்கேயே இருப்பது நல்லதென்று!'' என்றான் மோகன், என்றுமில்லாதப் பொறுப்புணர்ச்சியுடன்.

''அதற்கென்ன அண்ணா, அப்படியே இருக்கிறேன்; அவரைப் பொறுத்தவரை இறந்தவள், இறந்தவளாகவே இருக்கக்கூட நான் தயார்!'' என்றாள் அருணா.

''அதுதான் சரி! அதற்குக் குறுக்கே நிற்க அந்தக் கடிதம் ஒன்றுதான் இருந்தது; அதுவும் தான் இப்போது உங்களிடமே வந்து சேர்ந்துவிட்டதே?'' என்றாள் பாமா.

''ஆனால் எங்கே இருப்பது? அதுதான் இப்போதுள்ளப் பிரச்னை!'' என்றான் மோகன்.

''அதுதான் நீங்கள் என்னை இங்கேயே இருக்கச் சொன்னதாக இவர் சொல்கிறாரே, இருக்கிறேன்!''

''இங்கேக் கொஞ்ச நாட்கள் வேண்டுமானால் இருக்கலாம்; அதற்குப் பிறகு?''

''கல்யாணத்தைச் செய்து, அவள் கணவனுடன் அவளை அனுப்பிவிடுங்கள்?''

இதைச் சொல்லிவிட்டுப் பரந்தாமன் அருணாவை ஒரு தினுசாகப் பார்த்தார்; அவளும் அவரை ஒரு தினுசாகப் பார்த்து, ''எங்கே விற்கிறான் அந்தக் கணவன், என்ன விலை?'' என்று கேட்டாள் எரிச்சலுடன்.

''விசாரித்துச் சொல்கிறேன்!'' என்றார் அவர், அப்போதும் அமைதியாக.

அதற்குள் பாமா குறுக்கிட்டு, ''ஏன், எங்கள் வீட்டுக்கு வேண்டுமானால் வந்து இருக்கட்டுமே?'' என்றாள் மோகனிடம்.

''இருக்கலாம். ஆனால் அவள் இருக்கும் இடம் அப்பாவுக்குத் தெரிந்து அவர் ஒரு வேளை வந்தாலும் சமாளிக்கக் கூடிய இடமாயிருக்க வேண்டும்; உங்களால் முடியுமா, அவரைச் சமாளிக்க?'' என்று மோகன் கேட்டான்.

''அது கொஞ்சம் சந்தேகம்தான்!'' என்றாள் பாமா.

இந்தச் சமயத்தில் பரந்தாமனின் மேல் ஒரு கண் வைத்துக் கொண்டே, ''இவரால் மட்டும் அப்பாவைச் சமாளிக்க முடியும் என்று நினைக்கிறாயா, அருணா? எனக்குத் தோன்றவில்லை. இவர் அவரைக் கண்டதும் ஓடியே விடுவார்!'' என்றான் அவருடைய வீரத்தைச் சற்றே சோதிக்க எண்ணி.

''வந்து பார்க்கட்டும். அதற்குப் பிறகு நான் ஓடுகிறேனா, இல்லையா என்பதை நீயேத் தெரிந்துக் கொள்வாய்!'' என்றார் அவர், அடக்கமாயிருந்தாலும் தாமும் ஓர் 'ஆண் பிள்ளை' என்ற உணர்வுடன்.

''சரி, அதைப் பற்றிப் பின்னால் யோசிப்போம்; இப்போது நான் வருகிறேன்!'' என்று மோகன் எழுந்தான்.

''அதற்குள் என்ன அவசரம், உட்கார் அண்ணா!'' என்றாள் அருணா.

''ரொம்ப அழகுதான்! இங்கே உன்னைப் பார்த்ததும் நான் சாப்பிட்டுவிட்டேன்; அங்கே அம்மா சாப்பிட வேண்டாமா? உன்னுடைய கடிதத்தைப் பார்த்ததிலிருந்து அவர்கள் அழுத கண்ணும் சிந்திய மூக்குமாக இருக்கிறார்களே?''

''அப்படியானால் இங்கே நான் இருப்பதை நீ அவர்களிடம் சொல்லிவிடப் போகிறாயா, என்ன?''

''சொல்லாமல் எப்படி இருக்க முடியும், அப்பாவிடம் சொல்லாவிட்டாலும் அம்மாவிடம் சொல்லித்தானே ஆக வேண்டும்?''

''அந்த அசட்டு அம்மா அவரிடம் சொல்லாமல் இருக்குமா?''

''சொல்ல வேண்டாம் என்றால் சொல்ல மாட்டார்கள். அவர்களுக்கும் அவரிடமுள்ளக் குறைபாடுகள் தெரியத் தானேத் தெரிகின்றன? இருந்தாலும் கடமை என்று ஒன்று இருக்கிறது பார். அது சிலருடைய விஷயத்தில் மடமைக்கும் ஆதாரமாயிருப்பதுபோல, அவர்களுடைய விஷயத்திலும் ஆதாரமாயிருந்திருக்கிறது! இல்லாவிட்டால் எல்லாம் தெரிந்திருந்தும் அவரைத் தட்டிக் கேட்காமல் அவர்கள் இருந்திருப்பார்களா?''

''என்னமோ அண்ணா, எனக்கென்னமோ பயமாய்த்தான் இருக்கிறது!''

''இன்னொரு விஷயத்தை நான் இதுவரை உன்னிடம் சொல்லவில்லை; அதைச் சொன்னால் நீ இப்படிப் பயப்பட மாட்டாய்!''

''அது என்ன விஷயம்?''

''உன்னுடைய கடிதத்தைப் பற்றி அவர் என்ன நினைக்கிறார், தெரியுமா? அவரை ஏமாற்றுவதற்காக நீ அப்படி ஒரு கடிதம் எழுதிக் கடற்கரையில் வைத்துவிட்டு, யாரோ ஒருவனுடன் ஓடிப் போய் விட்டாய் என்று நினைக்கிறார்! போதுமா? நீ தைரியமாயிருக்க இன்னும் ஏதாவது வேண்டுமா?'' என்றான் அவன் கொஞ்சம் உணர்ச்சி வசப்பட்டு.

அவ்வளவுதான்; ''வேண்டாம், அண்ணா! போதும், அதுவே போதும்!'' என்று தலையைப் பிடித்துக் கொண்டாள் அவள்.

# 41. சுந்தரின் கடிதம்

''அருணா இறந்திருப்பாள் என்று எனக்குத் தோன்றவில்லை; தனக்குப் பழக்கமான யாரோ ஒருவனுடன் அவள் ஓடித்தான் போயிருக்க வேண்டும்!''

ஆபத்சகாயம் இப்படிச் சொல்லித் தன்னைத் தானே ஏமாற்றிக் கொள்ள நினைத்தாலும், அதற்குக் காரணம் அவர்தான் என்பதை அவருடைய மனம் மட்டும் அடிக்கடி அவருக்குச் சுட்டிக் காட்டிக் கொண்டே இருந்தது. அதன் காரணமாக அவள்மேல் அவர் கொண்ட ஆத்திரம் வெகு சீக்கிரத்திலேயே அனுதாபமாக மாறிற்று. அந்த அனுதாபத்துடன் அவள் தனக்கு அனுப்பி வைத்த நகைகளையும், எழுதி வைத்தக் கடிதத்தையும் எழுபத்தோராவது தடவையாக அவர் ஏறெடுத்துப் பார்த்தபோது, அவரையும் அறியாமல் அவருடையக் கண்கள் குளமாயின. அத்துடன்,

முதல்நாள் மாலை தன் மகனே தன்னைக் கொல்ல நினைக்கிறான் என்று சுகானந்தம் சொன்னது வேறு அவருடைய நினைவுக்கு வந்து, அவரை என்னவெல்லாமோ எண்ண வைத்தது.

அங்கேப் பணத்துக்காக மகன் தந்தையைக் கொல்ல நினைக்கிறான்; இங்கேப் பணத்துக்காகத் தந்தை மகளைக் கொன்று விட்டார்!

இப்படி நினைத்ததும் அவர் தன்னைத்தானே கண்டு வெட்கியதோடு நிற்கவில்லை; சிரிக்கவும் செய்தார்!

கண்ணீருடன் சிரிப்பும் கலந்த அந்த வேளையிலே, "சார், சார்!" என்றக் குரல் வாசலிலிருந்து வந்தது.

"யார், அது?" என்றுக் கேட்டபடி, மாடி வராந்தாவில் இருந்தவாறே வாசலை எட்டிப் பார்த்தார் அவர்; அபேஸ் அய்யாசாமி வழக்கம்போல் சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டே அவருடைய அழைப்பை எதிர்பார்த்து அங்கே நின்றுக் கொண்டிருந்தான்!

ஆனால் அவரோ இன்று அவனை வழக்கம்போல் வரவேற்கவில்லை; அதற்குப் பதிலாக அவனைப் பார்த்ததும் பார்க்காதவர்போல் திரும்பி, 'பகலில் பெரிய மனிதர்களுக்குத் துணை; இரவில் திருடர்களுக்குத் துணை! ஏண்டா ஆபத்சகாயம், பாழும் பணத்துக்காக இப்படி ஒரு வேடம் நீ போடத்தான் வேண்டுமா? பதவி வகித்த காலத்தில் நீ பெற்ற அனுபவம் அதற்குத்தான் பயன்பட வேண்டுமா?' என்று தன்னைத் தானேக் கேட்டுக் கொண்டு, 'வேண்டாம்; அந்தப் பாவத்தை இனி நீ செய்ய வேண்டாம்!' என்று தனக்குத் தானே பதிலும் சொல்லிக் கொண்டார்

அப்போது, "யாரப்பா, அது?" என்று கேட்டுக் கொண்டே மோகன் உள்ளே நுழைய, "நான்தான் அபேஸ் அய்யாசாமிங்க; அப்பாவைப் பார்க்கணுங்க!" என்றான் அவன், வழக்கம்போல்.

''அதைச் சொல்லிக் கொண்டு வாசலிலேயே நிற்பானேன்? நீங்கள் தான் இந்த வீட்டுக் 'கௌரவ விருத்தின'ராச்சே, நேராக மேலேப் போகலாமே!'' என்றான் அவன், எரிச்சலுடன்.

அவ்வளவுதான்; ''அனுப்பாதே, அவனை மேலே அனுப்பாதே!'' என்று அங்கிருந்தபடியேக் கத்தினார், ஆபத்சகாயம்.

மோகனுக்கு ஒன்றும் புரியவில்லை; 'கௌரவ விருந்தினர்களின் காப்பாளரா இப்படிச் சொல்கிறார்!' என்ற வியப்புடன் அவன் அவரை அண்ணாந்துப் பார்த்தான்.

''போகச் சொல்; அவனை உடனே அங்கிருந்துப் போகச் சொல்!'' என்றார் அவர், மீண்டும்.

இப்போதுதான் அபேஸ் அய்யாசாமியும் ஒன்றும் புரியாமல், ''என்ன, என்னையாப் போகச் சொல்கிறார்!'' என்றான் மோகனிடம்.

''ஆமாம், உன்னைத்தான்!'' என்றான் மோகன், அதுதான் சமயமென்று அவன் முகத்தில் அடித்தாற்போல் கதவைச் சாத்தி.

அப்பாடா! நல்ல சமயத்தில் வந்து சேர்ந்தான் மோகன்; இல்லாவிட்டால் அவனை விரட்டுவது அவ்வளவு எளிதாயிருந்திருக்காது தனக்கு. இப்போது மட்டுமென்ன, அவன் முகத்தை நேருக்கு நேராகப் பார்க்க முடியவில்லையேத் தன்னால்?

இப்படி ஒரு பெருமூச்சுடன் அவர் கீழே இறங்கி வந்து, ''ஏண்டா மோகன், இப்போது நீ கடற்கரையிலிருந்துதானே வருகிறாய்?'' என்றார் பரிவும் பாசமும் ஒன்றையொன்று முந்த.

''ஆமாம். ஏன், என்ன வேண்டும் உங்களுக்கு?'' என் றான் அவன், அப்போதும் அவரைப் புரிந்து கொள்ளாதவன் போல.

''ஒன்றுமில்லை; அருணாவைப் பற்றி ஏதாவது...''

அவர் முடிக்கவில்லை; அதற்குள் அவன், ''தெரியவில்லை!'' என்று ஒரு கைக்கு இரு கையாக விரித்துவிட்டு நழுவினான்.

''சரி, நான் போய்ப் பார்க்கிறேன்!'' என்று அவன் கொஞ்சமும் எதிர்பாராத விதமாக அவர் கிளம்பினார்.

அது என்னவோ போலிருந்தது அவனுக்கு; நின்று, ''இந்த இருட்டிலா?'' என்றான், அப்போதும் உண்மையை அவரிடம் சொல்லாமல்.

''வெளியே இருட்டாயிருந்தால் என்ன, உள்ளேதான் இப்போது வெளிச்சம் அடிக்க ஆரம்பித்து விட்டதே!'' என்று சொல்லிக் கொண்டே அவர் நடந்தார்.

அதற்குமேல் அவன் அவரைத் தடுக்கவில்லை; 'அதுவும் ஒருவிதத்தில் நல்லதுதான்!' என்று தன் அம்மாவைத் தேடினான், அந்தரங்கமாக விஷயத்தைச் சொல்ல. அவள் கிடைக்கவில்லை!

எங்கே போயிருப்பாள்?- இந்தக் கேள்வியுடன் அவன் அந்த வீட்டை ஒரு முறைக்கு இரு முறையாக வலம் வந்துக் கொண்டிருந்தபோது, வாசலில் வாடகைக் கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டது; திரும்பிப் பார்த்தான்- அன்னபூரணியம்மாள் ஆனந்தப் பரவசத்துடன் அதிலிருந்து இறங்கி உள்ளே வந்து கொண்டிருந்தாள்!

''எங்கேம்மாப் போய் வருகிறாய், நீ?'' என்றான் மோகன் வியப்புடன்.

''ஏன், அருணாவின் வீட்டுக்குத்தான்!'' என்றாள் அவள்.

''அருணாவின் வீட்டுக்கா! அது எங்கே இருக்கிறது?'' என்றான் அவன் மேலும் வியப்புடன்.

''போடா, போ! எனக்கு ஒன்றும் தெரியாது என்று நினைத்துக் கொண்டிருக்கிறாயா? எல்லாம் தெரியும்; கொஞ்ச நேரத்துக்கு முன்னால் நீ அந்தக் குட்டி பாமாவுடன் வந்து அவளைப் பார்த்தாயே, அதுகூட எனக்குத் தெரியும்!''

''அட, கடவுளே! அப்போது நீ எங்கே இருந்தாய்? எப்படி அங்கே வந்தாய்?''

''எல்லாம் பார்வதியின் கிருபை!''

''பார்வதியின் கிருபையா? அது யார், அந்தப் பார்வதி?''

''அப்படிக் கேள், சொல்கிறேன்: அவள் அங்கே எங்கள் ஊர்க்காரி; இங்கே அருணாவின் வீட்டுக்குப் பக்கத்து வீட்டுக்காரி!''

''இது என்ன வம்பு! 'அருணாவின் வீடு, அருணாவின் வீடு' என்று அடிக்கொரு தரம் சொல்கிறாயே, அது எங்கள் ஆபீசரின் வீடு, அம்மா!''

''அதுவும் தெரியும், எனக்கு! அதனால் என்ன, நாளைக்கு அவர்தானே அவள் கழுத்தில் மாலையிடப் போகிறார்?''

''அதுவும் பார்வதியின் கிருபையால்தான் நடக்கப் போகிறதாக்கும்?''

''ஆமாம்; இத்தனைக்கும் முதல் நாள் இரவுவரை அருணா என்னுடைய மகள் என்பதேப் பார்வதிக்குத் தெரியாதாம். மறுநாள் காலை அவளைப் பற்றி அவளிடமே விசாரித்தபோதுதான், அவள் என்னுடைய மகள் என்பதுப் பார்வதிக்குத் தெரிந்ததாம். அதற்குப் பிறகு அவள் அருணாவிடமே அதைப் பற்றி பேசியிருக்கிறாள். அப்படிப் பேசும்போது அவளுடைய மனமும் அதைத்தான் விரும்புகிறதென்று பார்வதிக்குத் தெரிந்திருக்கிறது. உடனே இங்கே ஓடி வந்தாள் அது சம்பந்தமாக என்னுடன் பேச. நான்தான் அதைப்பற்றி இங்கேப் பேச வேண்டாமென்று அவளை அங்கே அழைத்துக் கொண்டு போனேன்!''

''அப்படிச் சொல்லு; இல்லாவிட்டால் அவள் இருக்கும் இடம் உனக்கு எப்படித் தெரிந்திருக்கப் போகிறது? ஆமாம், உன்னை பார்த்ததைப் பற்றி அவள் என்னிடம் ஒன்றுமே சொல்லவில்லையே?''

''நான் தான் சொல்ல வேண்டாம் என்றேன், நீ அவசரப்பட்டு அப்பாவிடம் சொல்லிவிடப் போகிறாய் என்று!''

''உனக்குத் தெரியாதா, அவர் இப்போது அடியோடு மாறிவிட்டார்!''

''அதை நீ நம்பாதே; புலி பாய்வதற்குக்கூடப் பதுங்கும்!'' என்றாள் அவள்.

''அதைத்தான் நானும் சொல்ல வேண்டுமென்று இருந்தேன்!'' என்றான் அவன்.

மறுநாள் காலை ஆபீசுக்கு வந்ததும் வராததுமாக இருக்கும்போதே மணியை அழைத்து, ''இன்று மாலை நீங்கள் என்னுடன் வரவேண்டுமென்ற அவசியமில்லை; வேறு ஏதாவது வேலை இருந்தால் பார்க்கலாம். அதைச் சொல்லத்தான் உங்களை அழைத்தேன்; நீங்கள் போகலாம்!'' என்றார் பரந்தாமன்.

''மகிழ்ச்சி! உங்களால் காப்பாற்றப்பட்டிருக்கும் அருணா மோகனின் தங்கை மட்டுமல்ல; என்னுடையத் தங்கையும் கூட!'' என்றான் மணி.

''அது எப்படித் தெரியும், உங்களுக்கு?'' என்றார் அவர்.

''மோகன் சொன்னான். அப்போதே நானும் நினைத்தேன், அதற்காகத்தான் நேற்று நீங்கள் என்னை அழைத்திருப்பீர்களென்று'' என்றான் அவன்.

''ஓ, அப்படியா? அவள் இப்போதும் எங்கள் வீட்டில் தான் இருக்கிறாள்; நீங்கள் விரும்பினால் அவளை எப்போது வேண்டுமானாலும் அங்கே வந்துப் பார்க்கலாம்!'' என்றார் அவர்.

''வருகிறேன், அவசியம் என்று தோன்றும்போது!'' என்றான் அவன்.

''சரி, வாருங்கள்!'' என்றார் அவர்.

அவன் அறையை விட்டு வெளியேறியதும் பிச்சை யாவை அழைத்து, ''மோகனைக் கூப்பிடு!'' என்றார் அவர்.

அடுத்த நிமிடம் மோகன் வந்து அவருக்கு முன்னால் நின்றான். ''உங்களிடம் நான் கொஞ்சம் தனியாகப் பேச வேண்டியிருக்கிறது; இன்று மாலை கடற்கரையிலுள்ள காந்தி சிலைக்குக் கீழே என்னை வந்துப் பார்க்க முடியுமா உங்களால்?'' என்றார் பரந்தாமன்.

''அதற்கென்ன, அவசியம் வந்துப் பார்க்கிறேன்!'' என்றான் அவன், அதுவும் அருணாவின் கல்யாணத்தைப் பற்றியப் பேச்சாய்த்தான் இருக்குமென்று எண்ணி!

ஆனால் அன்று மாலை அவன் அவரை அவர் சொன்ன இடத்தில் சந்தித்தபோது...

அவர் அவனிடம் ஒன்றும் பேசவில்லை; அதற்குப் பதிலாகத் தன் பெயருக்கு வந்திருந்தப் பிரித்த கவர் ஒன்றை எடுத்து அவனிடம் நீட்டிவிட்டுத் தன் முகத்தை வேறு பக்கமாகத் திருப்பிக் கொண்டார்.

அவன் அதற்குள் இருந்தக் கடிதத்தை எடுத்துப் பார்த்தபோது...

அவன் தலையில் இடி விழவில்லை; இந்த உலகமேக் கீழே இறங்கி, அவனைக் கீழே கீழே இழுத்துக் கொண்டே செல்வது போலிருந்தது.

காரணம் வேறொன்றுமில்லை; அவன் கையிலிருந்தக் கடிதம் சுந்தரின் கடிதமாயிருந்ததுதான்!

''எனது முன்னாள் காதலியான அருணாவுக்கும், இந்நாள் காதலரான திரு. பரந்தாமனார்க்கும்,

என் இதயபூர்வமான அனுதாபங்கள்!

கடலால்கூடக் கைவிடப்பட்டுவிட்ட அருணாவுக்கும் உங்களுக்கும் கல்யாணம் என்று அறிய மகிழ்ச்சி. அந்தக் கல்யாணத்துக்கு இத்துடன் இருக்கும் கடிதங்கள் எந்த வகையிலாவது உதவுமா என்றுப் பாருங்கள்.

இங்ஙனம்,

சுந்தர்.''

இதைப் படித்ததும் அத்துடன் இருந்தக் கடிதங்களையும் புரட்டிப் பார்த்தான் அவன்- அத்தனையும் காதல் கடிதங்கள்; அருணா, சுந்தருக்கு எழுதியக் காதல் கடிதங்கள்! - அடிப் பாவி, இவ்வளவு மோசமானவளா நீ?

அவன் வெகுண்டான்! - அவனுடைய முகபாவத்தி லிருந்தே அதை ஒருவாறுப் புரிந்துக்கொண்ட பரந்தாமன் சொன்னார்; அழுத்தந் திருத்தமாகச் சொன்னார்:

''காதலிப்பது பெண்களின் குற்றமல்ல, இயற்கையின் குற்றம். அந்தக் குற்றத்துக்கு அவர்களை மட்டும் ஆளாக்கி விட்டு, ஆண்கள் தப்பித்துக் கொள்ள முடியாது. அதைச் சமூகம் அனுமதித்தாலும் நான் அனுமதிக்க முடியாது!''

''அப்படியானால்...''

அவன் முடிக்கவில்லை; அதற்குள் அவர் தொடர்ந்தார்:

''இந்தக் கடிதங்கள் ஒரு விதத்தில் உங்களுக்கு நன்மையே செய்திருக்கின்றன என்று நான் நினைக்கிறேன். ஏனெனில் இவற்றைப் பார்த்தபிறகுதான் நான் அருணாவை உடனேக் கல்யாணம் செய்துக் கொண்டு விடுவது என்ற தீர்மானத்துக்கு வந்திருக்கிறேன்!''

கொஞ்சங்கூடச் சலனம் இல்லாமல் அவர் இதைச் சொன்னதும், ''உண்மையாகவா?'' என்றான் அவன், வியப்புடன்.

''உண்மைக்குக் கீழே உட்கார்ந்திருக்கும்போதுகூட ண்மைப் பேசாமல் இருக்க முடியுமா?'' என்றார் அவர், காந்தியின் சிலையைச் சுட்டிக் காட்டி.

அதற்குமேல் அவன் அவரை ஒன்றும் கேட்காமல் காந்தியின் சிலையைத் தன் முகத்தில் சாந்தி நிலவப் பார்த்தான்; ''வஞ்சிக்கப்பட்டப் பெண்களுக்கு மறுபடியும் வாழ்வளிக்க வேண்டும்; அதற்கு வாலிபர்கள் தயங்காமல் முன் வர வேண்டும்'' என்று அன்றொரு நாள் அவர் சொன்னது அவனுடைய நினைவுக்கு அப்போது வந்தது!

# 42. காதலும் கல்யாணமும்

கடற்கரைக்கும் வீட்டுக்குமாகத் தான் மட்டும் நடைப் பிணம்போல் நடந்துக் கொண்டிருக்க, அன்னபூரணி யம்மாளும், மோகனும் மட்டும் அருணாவைப் பற்றியக் கவலையே இல்லாமல் அவரவர்கள் அவரவர்களுடையக் காரியத்திலேயேக் கண்ணாயிருப்பது என்னவோ போலிருந்தது, ஆபத்சகாயத்துக்கு. 'இதில் ஏதாவது மர்மம் இருக்குமோ?' என்று அவர் யோசித்தார், யோசித்தார் அப்படி யோசித்தார். ஒன்றும் புரியாமற் போகவே, ''குழந்தையை நீ மறந்தே விட்டாயா, என்ன?'' என்றார் அவர், தன் மனைவியிடம்.

''எந்தக் குழந்தையை?'' என்றாள் அவள், வெடுக்கென்று.

''அருணாவைத்தான் சொல்கிறேன்!'' என்றார் அவர், அப்போதும் குழைவுடன்.

''அட, என் குழந்தையே! எத்தனை நாளாக அவள் உங்களுக்குக் குழந்தையானாள்?'' என்றாள் அவள், கேலியும் கிண்டலுமாக.

''எப்பொழுதுமே அவள் எனக்குக் குழந்தைதான். ஏன், உனக்குக் குழந்தையில்லையா, அவள்?''

''யாரோ ஒருவனுடன் ஓடிப்போன பிறகு, அவள் ஏன் எனக்குக் குழந்தையாகிறாள்?''

''யார் சொன்னது, அப்படி?''

''நீங்கள் தானே சொன்னீர்கள்?''

இதை அவள் சொன்ன வேகமும், அந்த வேகத்தில் தன் கன்னத்தை நோக்கி நீண்ட அவள் கையும் அவரை மேலும் நிலைகுலைய வைத்தன. ''ஆமாம், சொன்னேன்; ஆத்திரத்தில் அறிவிழந்து நான்தான் அப்படிச் சொன்னேன்!'' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டு அவர் திரும்பினார். சின்னஞ்சிறு வயதில், தான் வேலைக்குப்

போகும் நேரத்தில், அருணா தன் அம்மாவின் இடுப்பின் மேல் ஏறி உட்கார்ந்து கொண்டு, 'டாடா' சொல்லும் பாவனையில் எடுக்கப்பட்ட படம் ஒன்று அவர் கண்ணில் பட்டது. ''ஐயோ, கண்ணே! அப்போதெல்லாம் உன் மேல் நான் எவ்வளவு அன்பாயிருந்தேன்? அந்த அன்பெல்லாம் இப்போது எங்கே? பாழும் பணத்தாசை அந்த அன்பைக் கொல்ல, உன்னை நான் கொன்று விட்டேனே!'' என்று வாய்விட்டுச் சொல்லி, மனம் விட்டு அழுதார்.

அப்போது, ''இவர் ஏன் அழுகிறார்?'' என்று கேட்டுக் கொண்டு உள்ளே வந்தான் மோகன்.

''அருமை மகள் அருணாவுக்காக!'' என்றாள் அன்னபூரணி, அலட்சியமாக

''அட, பாவமே! சுகானந்தத்துக்காகத்தான் இவர் அழுகிறாராக்கும் என்றல்லவா நான் நினைத்தேன்!'' என்றான் அவனும் அதைவிட அலட்சியமாக

எப்படி இருக்கும் அவருக்கு? - 'சொல்லட்டும், சொல்லட்டும்; யார் என்ன வேண்டுமானாலும் சொல் லட்டும். தான் செய்தத் தவறுக்கு அந்தத் தண்டனைகூட இல்லையென்றால் தன் மனமே தன்னைக் கொன்றுவிடும் போலிருக்கிறதே? சொல்லட்டும், சொல்லட்டும்; யார் என்ன வேண்டுமானாலும் சொல்லட்டும்' என்று நினைத்த அவர், தன்னைத் தானே ஒருவாறுத் தேற்றிக் கொண்டு, ''என்னப்பா சங்கதி, என்ன சுகானந்தத்துக்கு?'' என்று மெல்ல விசாரித்தார்.

''உங்களுக்குத் தெரியாதா, இன்றுக் காலை மாரடைப்பால் அவர் காலமாகிவிட்டாராம்; இந்தப் பத்திரிகையில் அப்படி ஒரு செய்தி வெளியாகியிருக்கிறது!'' என்று தன் கையில் இருந்தப் பத்திரிகையை அவருக்கு முன்னால் விட்டெறிந்தான் அவன்.

அதையும் பொருட்படுத்தாமல் அவர் அந்தப் பத்திரி கையை எடுத்துப் பார்த்தார்; அவன் சொன்னது உண்மை.

ஆனால்...

அந்தச் செய்தியில் கண்டுள்ள விவரம் உண்மையா யிருக்க முடியாது - ஆம், அது உண்மையாயிருக்கவே முடியாது!

அன்று அவர் சொன்னபடி, அவருடைய மகனே அவரைக் கொன்றிருக்க வேண்டும் - இதில் சந்தேகமே யில்லை; அவருடைய மகனேதான் அவரைக் கொன்றிருக்க வேண்டும்!

ஐயோ, பணமே! நீ யாரிடம் அளவுக்கு மீறிக் குவிகிறாயோ, அவனை மட்டுமா கெடுக்கிறாய்? அவனைச் சுற்றியுள்ள அத்தனைப் பேரையுமேக் கெடுத்துவிடுகிறாய்! அதற்கு உதாரணம் நான்; என்னுடைய ஊழலின் பிறப்பிடம் நீ!

நீ இருக்கும் இடத்தில் அன்புக்கும் பண்புக்கும் இடமில்லை! பாசத்துக்கும் நேசத்துக்கும் இடமில்லை. ஆசைக்கும் நிராசைக்கும்தான் இடம் உண்டு; மோசத்துக்கும் நாசத்துக்கும்தான் இடம் உண்டு. இல்லாவிட்டால் தருமத்தின் முதல் எதிரியாக உன்னால் இருக்க முடியுமா?

அந்தச் செய்தியைப் பார்த்த மாத்திரத்தில் இப்படி யெல்லாம் எண்ணிக் குமுறிய அவருக்கு எங்கிருந்துதான் அந்த வேகம் வந்ததோ, உடனே ஒரே தாவாக தாவி மோகனின் ஸ்கூட்டரின் மேல் ஏறினார்; ஒரே உதையில் அதைக் கிளப்பி 'ராக்கெட் வேகத்தில்' அதைச் செலுத்தினார்.

அங்கே...

தம்முடையக் கடைசி மரியாதையைச் செலுத்து வதற்காகக் கலெக்டர் பெருமான் அன்புடன் அனுப்பி வைத்திருந்த மலர் மாலை தன் புகழுடலை அலங்கரிக்க, பூத உடலை நீத்த சுகானந்தனார் கூடத்தில் கொலு வீற்றிருந்தார்.

அந்தக் கூடத்தைச் சுற்றிக் கூட்டமாவதுக் கூட்டம், ஒரேக் கூட்டம்! அரசியல் உலகப் பிரமுகர்கள், கலை உலகப்

கைது செய்து, அவன் கையிலிருந்த துப்பாக்கியைக் கைப்பற்றியதோடு அவனுடைய அப்பாவின் பிணத்தையும் கைப்பற்றினார்கள்.

மறுநாள் காலை தன வாழ்நாளிலேயே முதன் முறையாக செய்த அந்த ஒரே ஒரு நல்லக் காரியத்தை - அதாவது சுகானந்தரின் அருமை மகன் சுந்தரைப் பிடித்துப் போலீசிடம் ஒப்படைத்த அந்த ஒரே ஒரு நல்ல காரியத்தை எண்ணி ஆபத்சகாயம் தனக்குத் தானே ஆனந்தப்பட்டுக் கொண்டிருந்தபோது, ''மன்னிக்க வேண்டும்; உங்களுடைய உத்தரவில்லாமல் உள்ளே நுழைகிறேன்!'' என்று யாரோ சொல்வது அவர் காதில் விழுந்தது; திரும்பிப் பார்த்தார். சொக்கலிங்கனார், மீனாட்சியம்மாள், ராதா, பார்வதி தம்பதிகள், பரந்தாமனின் தாயார் ஆகியோர் புடை சூழ மணி அவரை நோக்கி வந்து கொண்டிருந்தான்.

''அதெல்லாம் அந்தக் காலம்; இப்போது இங்கே யோக்கியர்களுக்கு மட்டுமே இடம் உண்டு- வாவா, நீ என் உத்தரவில்லாமலேயே உள்ளே வா!'' என்றார் அவர்.

''அப்படியா! எல்லாம் பணம் படுத்தியப் பாடு போலிருக்கிறது, இருக்கட்டும்!'' என்று சொல்லித் தன்னுடன் வந்திருந்தவர்களை அவருக்கு அறிமுகப்படுத்தி வைத்துவிட்டு, ''இன்னும் சில யோக்கியர்கள் உங்களுக்குத் தெரியாமல் செய்துவிட்ட ஒரு சிறு தவறுக்காக உங்களிடம் மன்னிப்புக் கோர வந்திருக்கிறார்கள்; அவர்களையும் உள்ளே வரச் சொல்லட்டுமா?'' என்றான் அவன்.

''மன்னிப்பா! அவர்கள் செய்த தவறுக்கு நான் செய்தத் தவறு ஒன்றும் குறைந்துவிடாது. வரச்சொல், உள்ளே!'' என்றார் அவர்.

அவ்வளவுதான்; பரந்தாமனுடன் மணக்கோலத்தில் இருந்த அருணாவும், பாமாவுடன் மணக்கோலத்தில் இருந்த மோகனும் விரைந்து வந்து, அவருடைய பாதங்களைப் பற்றினார்கள்.

ஆபத்சகாயத்திற்கு ஒன்றுமேப் புரியவில்லை; ''இதெல்லாம் என்ன?'' என்றார் வியப்புடன்.

''தெரியவில்லையா, இருமனம் ஒருமனப்பட்டத் திருமணங்கள் என்று!'' என்றான் மணி.

''எல்லாம் உன் வேலைதானா?'' என்றார் அவர்.

''இல்லை; அம்மாவின் துணையுடன் அவரவர்களே செய்துக் கொண்ட வேலைதான்!'' என்றான் மணி.

''அப்படியா சங்கதி, எங்கே அந்தத் திருடி?'' என்றார் அவர்.

''இதோ இருக்கிறேன்! நான் செய்தது குற்றமானால் என்னை நீங்கள் என்ன வேண்டுமானாலும் செய்யுங்கள்; குழந்தைகளை மட்டும் ஒன்றும் செய்யாதீர்கள்!'' என்றாள் அவள், அவருக்கு எதிர்த்தாற்போல் வந்து நின்று,

''போடிப் பைத்தியமே! இருவரும் சேர்ந்தாற்போல் குழந்தைகளை வாழ்த்த வேண்டும் என்பதற்காகவல்லவா உன்னை நான் கூப்பிட்டேன்?'' என்றார் அவர்.

அதற்குமேல் அங்கே நிற்க விரும்பாமல், ''சரி, நான் வருகிறேன்!'' என்று மணி கிளம்பினான்.

''ஆமாம்; உன்னுடைய மனத்தோடு இதுவரை எந்த மனமும் ஒன்றுபடவில்லையா?'' என்றார் அவர், சிரித்துக்கொண்டே.

''இல்லை. ஏனெனில் வாழ்க்கையில் நான் காதலை ஒரு பிரச்னையாக நினைக்கவில்லை; கல்யாணத்தை ஓர் லட்சியமாகவும் கருதவில்லை!'' என்றான் அவன்.





# விந்தன் நூல்கள்

| | | |
|---|---|---|
| 1. | விந்தன் குட்டிக் கதைகள் | 28.00 |
| 2. | மிஸ்டர் விக்கிரமாதித்தன் கதைகள் | 65.00 |
| 3. | கண் திறக்குமா? | 65.00 |
| 4. | பாலும் பாவையும் | 65.00 |
| 5. | சுயம்வரம் | 40.00 |
| 6. | மனிதன் மாறவில்லை | 40.00 |
| 7. | எம்.கே.டி பாகவதர் கதை | 45.00 |

